# கம்பன் சொல்லும் பொருளும்



அபிராமி வெளியீடு

- ஆரண்ய காண்டம்
- கிஷ்கிந்தா காண்டம்
- சுந்தர காண்டம்

பி. சி. சீதாபதி

# கம்பன்
# சொல்லும் பொருளும்

[ஆரணிய காண்டம், கிஷ்கிந்தா காண்டம்,
சுந்தர காண்டம்]



பி. சி. சீதாபதி
'குறளடிமை' சேலம்

அபிராமி பப்ளிகேஷன்ஸ்
307, லிங்கி செட்டித்தெரு,
சென்னை—600 001

# முன்னுரை

கம்பன் காவியத்தை ஆழ்ந்து படித்து, அதனில் வரும் சில சொற்களின் — சொற்றொடர்களின் — பொருட் சுவையை மாந்தி—முடிந்தால் பிறரையும் மாந்தச் செய்து—பேராவல் உற்றேன். அந்த ஆவலின் விளை வாய்ப் பிறந்தன, 'கம்பன் சொல்லும் பொருளும்—பால காண்டம், அயோத்திக் காண்டம்' என்னும் இரு ஆய்வு நூல்கள்.

அவ்விரண்டு நூல்களையும் முழுமையாகச் சுவைத்து பல பெரும் தமிழ் அறிஞர்களும், புகழுறு ஆங்கில, தமிழ் தினசரி — வார — மாத செய்தி ஏடுகளும் புகழ்ந்து நேரிலும் எழுத்திலும் ஆசி கூறினர்; இடைவெளி சற்று அதிகம் ஏற்பட்டு விட்டதால் இரட்டைப் பேறுகளாய்ப் பிரசவிக்க ஆசை கொண்டேன். என்னை ஆட்டுவிக்கும் தமிழ்க்கடவுள் என் அப்பன் முருகன், 'இரட்டை என்ன?' மும்மையும் பெறுக என அருள் புரிந்து விட்டார். இதோ, ஆரணிய, கிட்கிந்தா சுந்தர காண்டப் பிள்ளைகள் மூவரும் இந்நூலாகிய ஒரே தொட்டிலில் காட்சி தரு கின்றனர்! ஆசி கூறுங்கள்.

கம்பன் கொண்ட கொள்கைக்கு மாறாக, இராமனைத் தெய்வமாகவோ, அவதார புருஷனாகவோ காட்ட நான் முயலவில்லை. ஆனால், கவிச்சக்கரவர்த்தி யின் சிற்சில சொற்களும், சொற்கோவைகளும் மறை முகமாய் எடுத்துக் காட்டும் தெய்வீகச் செயல்களை யான் உணராமல் இருக்க முடியவில்லை! அவ்வாறு உணரவல்லவற்றை உரைக்காமலும் இருக்க முடிய வில்லை!

கோசல இராமனின் மானுடம் காட்டும் சில செய்கைகள் உலகியல் நோக்கில் விளையாட்டுத் தனமாக இருக்கின்றன! அதனால், அவனுடைய உண்மை சொருபமான திருமால் நிலையை நெஞ்சத்தே நிறுத்தி, பக்திப் பரவசத்தால் நெகிழ்ந்திடாமல் இருக்க முடியுமா?

அவனிடம் சிறு பிழைகளும் காணக்கூடாது என்னும் பக்த சிரோமணிகள், கம்பராமாயணம் போன்ற இராம சரிதங்களை இலக்கிய நோக்கில் படிப்பது வியப்பே! இராமனைப் பக்தி உணர்வோடு மட்டும் பார்க்க வேண்டுமானால், ப்கவான் ஸ்ரீசத்திய சாய் பாபா அவர்கள் அருளியிருக்கின்ற, 'ராமகதா ரஸ வாஹினி' என்னும் இராம சரிதமே போதும்! அதில் பகவான் நம் உள்ளத்து அந்தகாரத்தை யெல்லாம் ஓட்டுகின்றார்.

எளியனேனின் பிற நூல்களை வெளியிட்ட ஆர்வத்துடனேயே இந்நூலையும் வெளியிட அன்புடன் இசைந்த சென்னை அபிராமி பப்ளிகேஷன்ஸ், உரிமையாளர், கெழுதகை நண்பர் திரு கா. பனையப்பன் அவர்களுக்கு என் நன்றி கலந்த வணக்கங்களையும் வாழ்த்துகளையும் அறிவித்து மகிழ்கின்றேன்.

மற்றைய, என் நூல்களைப் போன்றே இக்கட்டுரைகளையும் செம்மைப்படுத்தி, சீராய் நூல் வடிவு பெறுவதற்கு வலிய வந்து உதவிய தமிழ்க் குமரன்— சென்னை சிந்தாதரிப் பேட்டை ஆண்கள் மேல்நிலைப்பள்ளி ஆசிரியர் – திரு. நா. சந்திரசேகர் (M. .C.) அவர்களுக்கு, அவர் நன்றி விழையாதவர் என்ற காரணத்தால், நான் நன்றி பாராட்டவில்லை யென்றால் செய்நன்றி கொன்ற மகன் ஆவேன் அல்லனோ! அவர்க்கென் உளங் கனிந்த, அன்பு கெழுமிய நன்றி பற்பல!

இந்நூல் அச்சேறக் கட்டுரைப் படிவங்கள் எடுத்துதவிய என் மக்கட் செல்வங்கள் 'சுரேஷ் குமார்',

'ரமேஷ் குமார்' இருவரையும் மகிழ்வுடன் வாழ்த்துகிறேன். அவர்களுக்கும் தமிழ்ப்பற்று, இலக்கியப்பற்று வளரக் கலைமகளை வேண்டுகின்றேன்.

மானசிகமாய் எனக்கு எப்பொழுதும் ஆசி நல்கும் என் ஞான குரு அமரர் கம்பன் அடிப்பொடி தாள் நினைந்து வேண்டுகின்றேன்.

என் தமிழ்ப் பணியை வளர்க்கும் தமிழ் கூறும் நல்லுலகப் பெரியார்களைத் தொழுது நிற்கின்றேன்.

தமிழ்த் தொண்டர்தம் தொண்டனேன்
பி. சி. சீதாபதி
பி. சி. சிதாபதி - 'குறளடிமை'
5/128-A, 3வது தெரு
அண்ணா நகர்
ஜாகீர் அம்மாபாளையம் அஞ்சல்
சேலம் - 636 302

# பதிப்புரை

தமிழ் இலக்கிய உலகில் கம்பன் பெற்றுள்ள இடம் ஓலயாயது; தனிச் சிறப்பு வாய்ந்தது என்பதில் இரு தவறு கருத்துகளுக்கு இடமிருக்க முடியாது.

அதத்கைய கம்பன் கவி நயம் என்கிற ஆழ்கடலில் மூழ்கித் திளைத்து அடையும் இன்பமும் அளவிடற்கரியது என்ற வகையில் கம்பன் பற்றிய நூல்களை அவ்வப் போது தொடர்ந்து வெளியிட்டு வரும் நாங்கள் தற்போது 'கம்பன் சொல்லும் பொருளும்' என்ற தலைப்பில் இந்த நூலை உருவாக்கி வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சியடைகிறோம்.

இந்த நூலை சிறந்த முறையில் எழுதித் தந்துதவிய திரு. பி. சி. சீதாபதி அவர்களுக்கும், மிக விரைவாக அச்சிட்டுக் கொடுத்த சௌதரி பிரிண்டர்ஸ்க்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொண்டு, இந்நூலை தமிழ் மக்களுக்கு பெருமையுடன் படைக்கின்றோம்.

கா. பனையப்பன்

அபிராமி பப்ளிகேஷன்ஸ்

# உள்ளுறை

## ஆரணிய காண்டம்



## கிஷ்கிந்தா காண்டம்

30. குழை பொரு கண்ணினாள்!
31. மின் இடைச் சனகி!
32. 'சாது ஆம்' என்ற தனுவின் செல்வன்.
33. நெடுங் கூந்தல் நீகின்றாள்.
34. புகழோன்!
35. கண்களின் தெரியக் கண்டான்!
36. உன்தன் ஓங்கு அருமகன்!
37. கைகளால் மௌலி மிலைச்சுவாய்.
38. வெகுண்டு அவன் சாதியாது போதி ஆதி!
39. மாமியர் குழுவில் மைந்தன்!
40. உரைப்பது என்னோ?

சுந்தர காண்டம்

41. பழி இல்லான்!
42. கண்ணின் கண்டான்!
43. தன் உணர்வினால் உணர்ந்தான்.
44. பொன் துன்னும் மணிப் பூணாள்
45. வெந்தழலால் வேய்கேனோ?
46. உன் துணைக் கணவன்.
47. வெவ்விடமா? அமிழ்தா?
48. ஆறும் ஐம்பொறி ஆண்!
49. அந்தரம் அடைந்தான்!
50. இளையவன் தனக்கே கடன்!
51. சேவடி வந்து நோக்கினேன்.
52. நின்ற சங்கை
53. இரு மாதர்
54. பிறரும் வெல்வரோ?
55. இலங்கை மேயினேன்.
56. காணும் மதியினால் வந்தேன்.
57. நீதியான்! நீதியாய்!
58. எரியே! அவனைச்சுடல்!
59. மொய்கழல் தொழுகிலன்!
60. கண்டனென் கற்பினுக்கு அணியைக் கண்களால்!

---

# 1. ‘பெயர்’ ஏனோ?

பரதன், இராமனுடைய திருவடிகளைத் தன் தலைமேற்றாங்கி, நாட்டவர் அனைவரும் சூழ கோசலத்திற்குத் திரும்பினான். இராமன், தாம் அங்கு (சித்திரக் கூடத்திலேயே), தங்கியிருந்தால் தங்களைச் சார்ந்தவர்கள் அவ்விடத்தை நினைந்து நினைந்து துயர்ப்படுவர் என்று எண்ணினான். எனவே, தம்பியும், தமியளும் சூழத் தென்திசை நோக்கிச் செல்லலாயினான்.

வழியில் ஓர் ஆசிரமம் வந்தது. ‘அந்த ஆசிரமம் யாருடையது?’ என்று குறிக்க வந்த கவிச் சக்கரவர்த்தி, ‘அத்திரிப் பெயர் அருந்தவன்’ (2517) எனப் பாடுகின்றார். அங்கு ‘பெயர்’ என்ற சொல் ஏன் வர வேண்டும்! ‘அத்திரி எனும் அருந்தவன்’ எனக் குறிப்பிட்டால் போதாதோ? ‘There lived a great saint by name Athiri’ என்ற பாங்கில் ஆங்கில நடையை ஒத்து வர வேண்டுமோ!

அந்த நாளில், ஆன்றோர்கள், தன் முனைப்பைக் காட்டும் தகைமையில் அவரவர் பெயர்களை எங்கும் எதிலும் இட்டுக் கொண்டவர்கள் அல்லர். ஏன், இந்த நாளிலும் கூட அடக்கமே உருவான சான்றோர்கள் தங்கள் உடைமைகளுக்கு இறை நாமங்களையோ, தம் முன்னைபோர் திருப் பெயர்களையோ, தான் அமைக்கின்றனர் என்பதுவும் நாம் காண்பதே. அந்தப் பாங்கில் ‘அந்த அருந்தவன் தன் குடிலுக்குத் தன் பெயரைச்

சூட்டவில்லை; நான் கூறுகின்றேன்; அவர் பெயர் 'அத்திரி' என்று சொல்லும் பாங்கில் கவிக் கூற்றாக அச்சொல்லை அமைத்துள்ளார் என்பது ஒன்று.

அந்தப் பெயர் பெற்றோரால் இடப்பெற்ற இடுகுறிப் பெயர் அன்று. அவர் காமம், வெகுளி, மயக்கம்—இம் மூன்று குற்றங்களையும் கடிந்து ஒதுக்கியவர்; ஆகவே 'அத்திரி' (மூன்று குற்றங்கள் அற்றவர்) என்ற காரணப் பெயர் அடைந்தவர் ஆகும் என்பதை விளக்கவே அச் சொல்லைச் சிறப்பாகப் பெய்துள்ளார், கவிஞர்.

மற்றொரு காரணமும் உண்டு. அதுதான் அவருடைய தர்ம பத்தினியாரிடத்துக் கம்பர் கண்ட பெருமிதம்.

கற்புடை மாதரைக் கற்றோர் ஏத்துவர். நம் தமிழ் நாட்டு மரபு இது. தவிர அவர்களைத் தெய்வமாகவே காணும் பண்புடையவர்கள் நம்மவர்கள். கண்ணகித் தெய்வமும் அந்நிலை அடைந்தவளே யல்லவோ! கற்பும், ஆன்மீகப் பொற்பும் நிறைந்த சாரதா மணி தேவியார் தம் கணவனார் கண்களுக்கே தெய்வமாகத் தென் பட்டார்கள் அன்றோ! தெய்வ நிலைச் சொற்களால் குறிக்கப் பெறாவிட்டாலும் அன்னை கஸ்தூரிபாய் போன்ற மாதரசியர் தங்கள் கணவர்களின் புகழை உயர்த்தும் வகையில் வாழ்ந்தார்கள் அன்றோ!

அந்த முறையில் உலகம், 'கற்பிற்கு எடுத்துக் காட்டாய்க்கூறும் 'சதி அனசூபா [ந அசூயை-பொறாமை அற்றவள்] ஆகிய அம்மையாரின் பெரும் புகழ், தன் கணவராகிய அத்திரி முனிவரின் பெருமையை உயர்த்திக் காட்டியது என்று கூற விழைந்தார் கவிச் சக்கரவர்த்தி என்றாலும் அந்த முனிவர், 'கற்பின் அனசூயையின் கணவர் என்று மட்டும் சொல்லப் பெறுவது சிறப்பு அன்று அவருக்கும் ஓர் பெயர் உண்டு-அதுதான் 'அத்திரி' என்று குறிப்பதைப் போலே 'பெயர்' என்ற சொல்லைப் பெய்துள்ளார்.

''தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்'' (திரு. 56)

என்று செந்நாப் போதார் செப்பிய நல்வாக்கு நம் கம்பரை ஈர்த்தது; அவ்வாறு கணவன் மனைவி இருவரின் பெயர்களும் ஒன்றுக்கு ஒன்று புகழ் கூட்டி நிற்பன என்பதை உணர்த்தி இவ்வாறு பாட வைத்துள்ளது எனத் தேர்கின்றோம்!

# 2. மெய் வரம்!

இராமன், இலக்குவன், சீதை மூவரும் கானகத்தில் சென்று கொண்டிருந்த பொழுது விராதன் எனும் பேயன் எதிர்ப்பட்டான்; நீண்ட நெடிய தன் கரங்களால் சீதையைக் கிளிப்பால வெளவிக் கொண்டு ஆகாயத்தில் பறந்தான். இராமன் சினந்து அவனுடன் போர் புரிந்தான். அவன் சீதையை உதறிவிட்டு இராம இலக்குவரோடு சண்டை செய்யலானான்.

மிகக் கொடூரமான முத்தலைச் சூலத்தை விராதன் இராம இலக்குவர் மேல் எயதான்; மேரு மலையை ஒத்த வலிமையுடைய அம்பை இராமன் செலுத்தினான்; அது அந்த சூலத்தைத் துண்டாக்கியது. ஆனால் விராதன் மலைக்காமல், தளராமல் மாமபெரும் மலைகளைப் பறித்து இராமன் மேல் வீசினான்; அவை திருப்பச் சென்று அவனையே தாக்கும் வகையில் அம்பை இராமன் எய்தான். அந்த மலைகளால் அவன் அடிபட உடலெல்லாம் புண் ஆயின. என்றாலும், அவன் ஒரு பெரிய மரத்தினை வேரோடு பிடுங்கி வீசினான்; அதனை இராமன் தன் அம்பால் துண்டித்தான். விராதனுடைய தோள்களிலும் மார்பிலும் தைக்கும்படியாகப் பல கூரிய அம்புகளை விட்டான். அவ்வாறு தைத்த அம்புகளை வெகு எளிமை ஆக முள்ளம் பன்றியைப் போல் அவன் உதறி விட்டான்;

மீண்டும் இராமன் தீயைப் போன்ற அம்பை விட்டான். அவனோ தன் வீரத்தைக் கைவிடாது தொடர்ந்து போர் புரிந்தான்; அதனால் சற்று அயர்ந்தான்.

அப்பொழுது இராமன். இலக்குவனிடம் "மெய் வரத்தினன், மிடல்-படை விடப் படுகிலன்" (2550) என்று அந்த விராதனைப் பற்றிக் கூறுகின்றான்.

'மெய் வரத்தினன்' என்பதற்கு 'விராதன் உண்மையான வரங்களைப் பெற்றவன்' என்ற பொருள் கொள்கின்றோம்; ஓரளவிற்கு அது சரி என்றாலும், வரங்களிலே பொய் வரமும் உண்டோ? என்ற நியாயமான வினா எழுகின்றது.

இந்த வினாவிற்கு விடை காண விழையும் பொழுது, அந்த விராதன், முதலில் இராமன் சினந்த பொழுது, எடுத் துரைத்த செய்தி நினைவிற்கு வருகிறது.

"ஆதி நான்முகன் வரத்தின் எனது ஆவி அகலேன்
ஏதி யாவதும் இன்றி, உலகு யாவும் இகலின்,
சாதி யாதனவும் இல்லை" (2537)

என்றான். 'பிரமன் கொடுத்த வரத்தினால் என் ஆவி நீங்காது; உலகம் முழுதும் எதிர்த்து வந்தாலும் படை யேதும் இன்றியே போர் செய்து என்னால் வெல்ல முடியும்' என்று அவன் கூறிய கூற்று நம் நினைவிற்கு வருகிறது; இராமன் நினைவிருந்தது!

அதனால், இராமன் இலக்குவனிடம் 'இவன் இதுவரை நம்மோடு சண்டையிட்டு ஓய்ந்து போய் விட்டான்; உணர்வும் சோர்ந்து மயங்கி வீழ்ந்து விட்டான்; நாம் சீதையை அழைத்துச் செல்வோம். என்று சொல்ல வேண்டிய கட்டத்தில், வேறு வகையாகப் பேசுகின்றான் எனப் பார்க்கின்றோம்.

ஆம். "இலக்குவனே! இவன், முன்னம் நான்முகனுடைய வரம் பெற்றுள்ளதாகக் கூறினான் அது, மெய்யே-(உண்மை). இவன் வரம் கொண்டவன்

தான்! இப்படியே இவனை மயக்க நிலையில் விட்டு விட்டால், தான் பெற்ற வரத்தினால், மீண்டும் உணர்ச்சியும் வலிமையும் மிகுந்து போரிடவருவான்! அதனால், அவனுடைய வலிமையான கைகளை வெட்டி விடுவோம்'' என்று கூறினான்.

ஆக, உண்மையான வரத்தினை உடையவன் என்று மேலேழுந்த வாரியான பொருளைத்தரும் 'மெய் வரத்தினன்' என்ற சொற்றொடர், 'மெய், (அவன்) வரத்தினை உடையவன் தான் என்று 'அவன் சொன்ன சொல் உண்மையானதே!' என்ற பொருள்படவும் நிற்கின்றது!

அது மட்டுமல்ல; இனியொரு உண்மையையும் அதாவது இராமன் தன் ஞானப் பார்வையால் உணர்ந்த பின் நிகழ்ச்சியையும்— அது தெரிவித்து நிற்கின்றது!

விராதன், 'மெய் வரத்தினன்; அதாவது, தன் உடலுக்கான—உடல் அழியாத நிலைக்கான— வரத்தினைப் பெற்றவன் என்பதாகும்! இராம இலக்குவர் அவனுடைய தோள்களின் மேல் நின்று அவனுடைய தோள்களை வெட்டி வீழ்த்தினார்; தாவிச் சென்றனர்; அவனோ அவர்களை அந்த நிலையிலும் தொடர்ந்தான்; நெருங்கினான். இராமன், அவனுடைய வலிமை தொடர்வதைக் கண்டு, இலக்குவனிடம், "இவனை உடனடியாக மண்ணில் புதைத்து விடலே சிறந்ததாகும்" என்றான். நம்பி குழி தோண்டினான். அவனை, அதில் ஆழ்த்தும் வண்ணம் தன் காலல் இராமன் உதைத்துத் தள்ளினான்.

விராதனுடைய உருவம் அழியவில்லை. இராமனுடைய திருவடி பட்ட மகிமையால் அரக்க உருவம், கந்தருவ உருவமாக மாறியது! அவன், தன்னுடைய சாப வரலாற்றைக் கூறி கந்தர்வ உலகம் சென்றான்.

ஆக, விராதன் தன்னுடைய உடல் மாயாவகை வரம் பெற்றவன் என்ற இராமனின் உள்ளுணர்வும் மறை பொருளாய் நிற்க, 'மெய் வரத்தினன்' என்ற சொற்றொடரைக் கவிச் சக்கரவத்தி பெய்துள்ளார் எனத் தெளிகின்றோம்!

இந்த சந்தர்ப்பத்தில் கம்பரின் பிறிதொரு சொற்றொடரின் நுணுக்கத்தையும் காண்டால் இனிமை கூரும்.

விராதனொடு இராமன் போயினான்; சீதை பின்னால் நின்று வருந்தி அழுகின்றாள். இந்தச் சூழலில் இராமனைக் கம்பர்; 'மாதயா உடைய தன் கணவன்' எனக் கவிக் கூற்றாகக் குறிப்பிடுகின்றார். இந்தச் சூழ்நிலையில் இராமனின் வலிமையைக் குறிப்பிட்டிருந்தால், விராதனுக்கு ஈடு கொடுக்கக் கூடிய கணவன் என்றதைச் சீதை நினைந்தாள் என்று கொள்ள ஏதுவாகும்; இங்கு இராமனின் தயாள குணம் என்ன செய்யப் போகின்றது? அச் சொற்றொடரைக் கவிச் சக்ரவர்த்தி ஏன் பயன் படுத்தினார்? பொருத்தம் ஆற்ற சொற்றொடரா! இடத்திற்கு ஒவ்வாத சொல்லைப் பயன்படுத்தினால், கவிச் சக்ரவர்த்தி என்ற பெயர்க்கே மாசு தோன்றாதா!

வன்மை காட்டி இழுத்துச் செல்லும், விராதனுக்கு இராமன் அருளால் சாபம் நீங்கப் பெற்று உய்வு உண்டாகப் போகின்றது என்ற பின் நிகழ்ச்சி கம்பரின் உள்ளத்தே மூந்துறுத்த அவனுடைய மா தயவை எண்ணி, 'மா தயா உடைய' என முன் கூட்டியே எழுதி விட்டார்!

''விரைந்து தொழில் கேட்கும் ஞாலம் நிரந்து இனிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்'' (திரு. 648)

என்ற வள்ளுவப் பேராசானின் நோக்கிற்கிணங்க, பற்பல கருத்துக்களைக் கோத்துக் கோத்து, சொற் சிலம்பம் ஆடியிருக்கும் கம்பர் நமக்கு இட்டிருக்கும் ஆய்வுப் பணியை தொடர்ந்து செய்வோமாக!

# 3. அத்திரி மாமுனிவர் அறிவார்!

பரதன், அண்ணலின் பாதுகைகளைப் பெற்று உடன் வந்த அனைவரோடும் கூடிநாடு திரும்பினான். சித்திர கூடத்தில் இனியும் தாங்கள் தங்கியிருப்பது கூடாது என்று கருதிய இராமன், தன் துணைத் தம்பியும் தானும் சீதையாம் தையலும் பின்வர தென் திசை வழித் தடத்தே சென்றான்.

வழியில் ஒரு காடு; அங்கு ஓர் இடத்தே அழகு ததும்பும் இலைகளும் பழங்களும் பொலிந்திடும், பொழில் சூழ் சோலை! அஃது 'பேர் அமைதியின் இருப்பிடமாய்த் திகழ்ந்தது. ஆங்கு, தாங்கரும் தவம் மேற் கொண்ட அத்திரி மாமுனிவர் வாழ்ந்து கொண்டிருந்தார். மூவரும் அவர் பால் சென்று அணுகினர்.

வந்த மூவரும் யாவர்? அயோத்தி மன்னன் தயரதச் சக்கரவர்த்தியின் இரு பிள்ளைகளும் மருமகளும்! வந்த நிலை என்ன? சீரையுடுத்தி சிறு நடையால் பெரு வழி வந்துள்ளனர். இவர்களைக் கண்டதும், 'ஐயா பாவம்! யாரோ? இவர்கள் எந்த ஊரோ? ஏனிங்கு வந்தனரோ?' என்று எவர்க்கும் ஏக்குறத் தோன்றுதல் இயற்கை, மனித மனோபாவம்!

ஆனால், அத்திரி முனிவரின் கண்களுக்கு அவர்கள் அவ்வளவு எளியவராக—அனுதாபப் பச்சாதாபங்களுக்கு உட்பட்ட வராகவா தோன்றினர்? அவர் சிறந்த முனிவர்—காமம் முதல் ஆம் முக் குறும்பு (காமம், வெகுளி, மயக்கம்) அற எறிந்த வினையினர்! அவர் தம் திருவடி தொழவும், அவர்களைக் கண்டு மகிழ்வுற்றார்! விருப்பு வெறுப்புகளுக்கு ஆளாகக் கூடாத அயலாரைக் கண்டு

'பந்தபாச' மயக்கம் தோன்றக் கூடாத தவ முனிவர்க்கு இவர்களைக் கண்டதும் உவகை தோன்றியது ஏன்? தன் வனத்தினுள் வருபவர் எவரைக் கண்டாலும் அவர்க்கு இவ்வாறான உவகை தோன்றிடுமோ?

அவர்கள் வரவால் உவகை மட்டுமா தோன்றியது! அவர் நெஞ்சுருகியே நின்றோம்!

'எமரின் யார் தவம் முயன்றவர்கள்?' (2519)

என்று வியந்து பேசினாரே! சாதாரண அரசு குமாரர்களைக் கண்டே, இத்தகைய மாமுனிவர்,

''தமர் எலாம் வர, உவந்தனைய தன்மை'' (2519) எய்தினார் என்றால், தவ வாழ்க்கை நெறிக்கு ஒப்புமா! ஆக, அவர் உள்ளுணர்வு அவர்களைச் சாதாரண சக்கரவர்த்தித் திருக் குமரராய்க் காட்ட வில்லையெனத் தெரிகின்றன!

ஆம்; அம் மாமுவரே புகல்கின்றாரே!

''குமரர்! நீர் இவண் அடைந்து உதவு கொள்கை
எளிதோ? (2519)

அப்பப்ப! என்ன வரவேற்பு! அவர்கள் அங்கு வந்ததே பெரும் பாக்கியமாக—எளிதாய்க் கிடைக்கக் கூடாத பாக்கியம் ஒன்று வந்துற்றதாக— அல்லவோ உரைக்கின்றார்! காரணம்?

அண்ட சராசரங்களிலும் யாவுமாய் யாவருமாய், அனைத்துமாய் வியாபித்துள்ள மூலம் ஓர் உருவம் எடுத்து வந்தால் தேவாதி தேவர்கள் உட்பட அனைத்துலகும் வந்ததாகத் தானே பொருள்!

எனவே, மறுதலைத் தோற்றமாக நாம் அறிந்து கொள்வது என்னே? அம்முனி புங்கவர்,

''அமரர் யாவரொடும் எவ்வுலகமும் வந்த அளவே
(2519)

என முகமன் கூறி வரவேற்றதால், வந்திருப்பது அண்ட சராசரம் முழுதும் வியாபித்துள்ளவன்— திருமால்— என்பதை அவர் தம் ஞானக் கண்ணால்—தவ வலிமையால் உணர்ந்து கொண்டார் என்பதேயாகும். அதனால்தான் அரசனையும் ஆண்டியையும் ஒன்றாகக் காண வேண்டிய அருந்தவ முனிவர் இராம இலக்குவர்க்கு அளவின் மீறிய, அகந்தோய்ந்த வரவேற்பு அளித்தார் என்று புரிந்து கொள்கின்றோம்!

இனி, இராமன் அன்றிரவு அத்திரி முனிவருடன் தங்கினான்; மறுநாள் மூவரும் புறப் பட்டுவிட்டனர். இராமனை எளிமையாக அரச குமாரனாகவே அத் தவமுனி எண்ணியிருந்தாலும், அன்றிரவு அளவளாவி இருந்த பொழுது அவர்கள் காடு வந்த காரண காரியங் களை அவர் அறிந்திருப்பார் அன்றோ? மேலும், அவர், அடுத்த தண்டக வனத்தில் விராதன் இருப்பதையும், அதனால் அங்கு செல்வார்க்குப் பேராபத்துகளும் உயிரிழப் புகளும் உண்டாகும் என்பதையும் அறியாதிருக்க முடியாது.

அப்படியானால், மறுநாள் புறப்பட்ட மூவரையும் அந்த ஆபத்துச் சூழலுக்குச் செல்லாமல் தடுத்துத் தம் ஆசிரமச் சூழலிலேயே ஏன் தங்க வைக்கவில்லை. தங்கும் படி கேட்டுக்கொண்டதாகக் கூடத் தெரியவில்லையே காப்பியப் பாடல்கள் வாயிலாக! தம் உயிர் உருக வர வேற்ற இராம இலக்குவரை, இராக்கதன் அவர்தம் உயிர் பருக அனுப்புவாரா! இல்லை! இங்குதான் இராமனால்- இராமன் உருக்கொண்ட திருமாலால் - இனிமேல் நடக்க வேண்டிய காரியங்கள் அனைத்தையும் தம்தவவலிமையால் அத்திரி முனிவர் உள்ளுணர்வால் – ஞானக் கண்ணால் - அறிந்து கொண்டிருந்த இரகசிய உண்மை உறுதிப் படுகின்றது!

அது மட்டுமா? சுமித்திரையினிடம் செய்திகள் கூறி விடை பெற்றுக் கொண்டிருக்கும் பொழுதே, கைகேயின்

தாதியர் சீரை கொண்டு வந்தனர். அவற்றை இராம இலக்குவர் உடுத்திக் கொண்டனர். சீதையோ, தானும் இராமனுடன் கானேகுவதாகக் கூறிக் கொண்டே உள் சென்று தானே உவந்து சீரை உடுத்து வெளி வந்தாள்! ஆக, மூவரும், மேற்கொண்ட பயணத்திற்கேற்ப ஆடை ஆபரணங்களைக் களைந்து சீரை உடுத்துக் கானகம் சென்றனர்.

ஆனால், அத்திரி முனிவரின் ஆசிரமத்தில் அவர்கள் இரவு தங்கிய பொழுது என்னவாயிற்று? முனிவர்தம் உத்தம பத்தினி அனசூயை சீதைக்குச் சந்தனம் பூசினாள்; ஆடை அணிவித்தாள்; அழகு படுத்தினாள். அவ்வாறு அழகு படுத்திய பொழுது அவட்கு அணிகலன் பலவும் பூட்டினாள்! போகட்டும்; விடிந்ததும் அவர்கள் தம் பயணத்தைத் தொடரும் முன் அவ்வணிகலன்கள் அகற்றப் பட்டனவா? இல்லையே! தவமுனிவரும் சீதை அணிகலன் களோடு செல்வதை ஏன் பார்த்திருந்தார்?

''அன்ன மா முனியொடு அன்று, அவண் உறைந்து,
அவன் அரும்
பன்னி, கற்பின் அனசூயை பணிபால், அணி நலன்,
துன்னு தூசினோடு சந்து, இவை சுமந்த சனகன்
பொன்னோடு ஏகி, உயர் தண்டக வனம் புகுதலும்''
(2520)

அத்திரி முனிவர் அறிவார், அவ்வணிகலன்களே பின் நாளில் அவர்களுக்கு அடையாளம் காட்ட உதவும் என்று! ஆம், வான் வழி இராவணன் பிராட்டியை எடுத்தேகிய பொழுது.

''மழைபொரு கண் இணை வாரி யோடுதன்
இழை பொதித்து இட்டனள்'' (3903)

அப்பொதியை சுக்கிரீவனைச் சேர்ந்த வானரங்கள் ஏற்றனர். சுக்கிரீவன் - இராமன் நட்பு நேர்ந்திட, சுக்கிரீவன் அவ்வணிகலன்களை இராமனுக்குக் காட்ட,

அவைகட்கு உரியவளே சீதையெனவும் அவளை இராவணன்தான் எடுத்துச் சென்றான் எனவும் அவன் போன திசையெது என்பதுவும் பற்றி உறுதியான அடையாளம் கண்டு கொண்டனர்!

ஆக, அத்திரி மா முனிவர் இராம இலக்குவரின் மூலத்தை அறிந்தார் என்பது மட்டுமல்ல; அவர்களின் நாடகத்தில் தன் பங்கிற்கு இந்த மறைமுக உதவியும் செய்து அனுப்பினார் என்பதை உணர்கின்றோம்! தவ வலிமையின் மேன்மையையும், அதனால் தோன்றும் ஞானக் கண் பார்வையையும் வியக்கின்றோம்! இந்த மறை பொருள்களைக் கம்பர் உணர்ந்தெழுதினாரோ, அன்றோ அவர் பெய்த சொற்களும் சொற்றொடர்களும் உண்மைகளை உணர்த்தி நிற்கின்றன எனக் கண்டு வியந்து மகிழ்கின்றோம்!

வாழ்க, வளர்க நமது உள்ளுணர்வுகள்!

# 4. ஏக நின்ற நெறி எல்லை இலதோ!

இராம இலக்குவர், சீதை ஆய மூவரும் சிறுமலைப் பகுதியாகிய சித்திர கூடப் பர்வதத்தில் தங்கியிருந்தனர். பரதன் வந்தான்; பாதுகை பெற்றுச் சென்றான்.

'இனி, அண்ணல் தங்கியிருக்குமிடம் அக்குன்று என எண்ணி எண்ணி வருந்துவரே' என இராமன் கருதினான்.

> " 'குன்றினில் இருந்தனன்' என்னும் கொள்கையால்,
> நின்றவர் நலிவரால், நேயத்தால் எனா,
> தன் துணைத் தம்பியும் தானும் தையலும்
> தென்திசை நெறியினைச் சேறல் மேயினான்" (2515)

என்றுதான் கம்பநாட்டாழ்வார் பாடினார். அதாவது, இராமன் தென்திசை வழியில் சென்று வேறிடத்தில் தங்கப் புறப்பட்டான் என்றுதான் அவர் நம்பினார்,

ஆனால், இராமன் அந்த எண்ணத்தோடு மட்டும் புறப்படவில்லை! 'தான் எண்ணி வந்த காரியங்களை நிறைவேற்ற இடம் அருகில் இல்லை; நெடுந் தொலை சொல்ல வேண்டும்' என்று தன்னையும் அறியாமல் கூறி விடுகின்றான்! ஆம், இராவண வதம் சித்திரகூடத்திலும், அத்திரி முனிவர் வசிக்கும் பொழில் சூழ் காட்டிலுமா நடைபெறும்? இலங்கைக்குச் செல்ல வேண்டாவோ? அஃது என்ன அருகிலேயா உள்ளது? நெடுந் தொலை செல்ல வேண்டுமே! இதனைத் தான் இராமன் குறிப்பிட்டு விடுகின்றான்!

அத்திரி முனிவரிடம் விடைபெற்றுக் கொண்டு மூவரும் நடந்தனர்; தண்டக வனம் புகுந்தனர். அங்கு விராதன் எதிர்ப்பட்டான்.

> '' 'நில்லும், நில்லும்' என வந்து, நிணம் உண்ட நெடு வெண்
> பல்லும், வல் எயிறும், மின்னு பகுவாய் முழை திறந்து,
> அல்லி புல்லும் அலர் அன்னம் அனையாளை, ஒரு கை,
> சொல்லும் எல்லையில், முகந்து உயர் விசும்பு தொடர்ந்தான்'' (2535)

இராமன் போர் தொடுக்க, அண்டசராசரங்களிலும் ஓசை எழும்படியாக, நாண் ஏற்றினான். விராதன், தான் தூக்கிச் சென்று கொண்டிருந்த சீதையைவிட்டு விட்டு இராம இலக்குவரை எதிர்த்தான். இராமன் ஓர் அம்பு எய்தான்; விராதன் சோர்ந்தான்.

> ''எரியின் வார்கணை இராமன்விட, எங்கும் நிலையாது
> உருவி ஓட மறம் ஒடுதல் செயா உணர்வினான்,
> அருவி பாயும் வரைபோல் குருதி, ஆறு பெருகிச்
> சொரிய, வேக வலி கெட்டு, உணர்வு சோர்வுறுதலும் (2547)

''மெய்வரத்தினன், 'மிடல் படை விடப் படுகிலன்;
செய்யும் மற்றும் இகல்' என்று, சினவாள் உருவி.
'வன்கை துணித்தும்' என, முந்து கடுகி, படர்
புயத்து,
எய்வுஇல் மல் பொருவு தோள் இருவர் ஏறினர்''
(2660)

அவ்வாறு, சோர்ந்துபோன அவ்விராதனுடைய தோள்களின்மேல் இராம இலக்குவர் ஏறிக் கொண்டதும், அவன் அவர்களைத் தாங்கிய வண்ணம் வான் வழி ஏகலானான். இதனைக் கண்ட சீதை நடுங்கினாள்; கதறினாள்.

''.......................................................குலச் சீதை,
சேவல் பிடியுண்ட சிறை அன்னம் அனையாள் (2554)

பின்னை, ஏதும் உதவும் துணை பெறாள்; உரை
பெறாள்;
மின்னை ஏய் இடை நுடங்கிட, விரைந்து
தொடர்வாள்;
'அன்னையே அனைய அன்பின் அறவோர்கள்
தமைவிட்டு,
என்னையே நுகர்தி' என்றனன்—எழுந்து விழுவாள்.
(2555)

அழுது, வாய் குழறி, ஆர் உயிர் அழுங்கி, அலைபா
எழுது பாவை அனையாள் (2556)

என்ற, கம்பரின் பாடல் வரிகளைப் படிக்கும் பொழுதே நாம் சீதையின் வேதனையை உணர்ந்து நெஞ்சம் நோக வேண்டியுள்ளதே! அக் காட்சியைக் கண்ணால் கண்டு கொண்டிருந்த இராம இலக்குவர்க்குத் தெரிய வில்லையா?

தெரிந்தது, இலக்குனுக்கு. அவன் அவ்வேதனையை உணர்ந்தான்; அண்ணனிடம் எடுத்துக் கூறினான்.

"தொழுது, 'தேவி துயர்கூர விளையாடல் தொழிலோ?
பழுது, வாழி' என'' (2556)

அண்ணலிடம் அறைந்தான்.

அப்பொழுதுதான் அந்த 'ஊழி முதல்வன்' சொல்லலுற்றான்.

"ஏக நின்ற நெறி எல்லை கடிது ஏறி, இனிதின்
போகல் நன்று என நினைந்தனென்'' (2557)

என்றான்!

அனைவரும், தாம் இருப்பிடாக்க கொண்டுவிட்ட சித்திரகூடப் பர்வதத்தினை விட்டு வேற்றிடம் செல்லுதலே இராமனின் நோக்கமானால், அந்த விராதனை வீழ்த்திவிட்டு அங்கேயே இருக்கலாமே! அந்தத் தண்டக வனத்தில்தானே சுமார் பத்து ஆண்டுகள் தங்கியிருந்தனர். அப்படியிருக்க, வேற்று இட எல்லை செல்ல வேண்டும் என்ற எண்ணம் விராதன் கைப்பிடிக்குள்ளிருந்து பறக்கும் பொழுதே வருவானேன்? இங்கேதான், இராமன்—இல்லையில்லை, கம்பர்—தன்னையும் மறந்து அவதார நோக்கம் நிறைவேற வேண்டிய எல்லையின் நீட்சியைக் குறிப்பால் உணர்த்தும் சொல்லைப் பெய்திடுகின்றார்! நாமும் காவியப் போக்கின் வழி, சொல்லை—சொல்லின் உட்பொருளை—நோக்கி, அக் குறிப்பை உணர்ந்து கொள்கின்றோம்!

# 5. உள்ளவாறு உணர்தினான்

இராமன் தன் காலால் விராத அரக்கனை உந்தித்தள்ள அவன் தன்னுடைய உண்மை உருவத்தை மீண்டும் பெற்றான். இராமனே வேத முதல்வன் என்று உணர்ந் தான்; உள்ளம் நெகிழத்துதி பாடினான். அனைத்தையும் கேட்டிருந்த இராமன் இறுதியில்,

" .................... நீ இது
உற்றவாறு உணர்த்து' எனா (2577)

விராதனைக் கேட்டான்.

விராதன், இராமனை நோக்கி,

" கள்ள மாய வாழ்வு எலாம்
வி்ள்ள, ஞானம் வீசு தாள்
வள்ளல், வாழி! கேள்' எனா
உள்ளவாறு உணர்த்தினான். (2678)

என்பார் கம்பர்.

தன் சாபத்தைத் தீர்த்த பிரான், தன் வரலாற்றைக் கேட்கும் பொழுது, விராதன் பொய்யாகவா எடுத்துரைப் பான்? அப்படியிருக்கக் கவிச் சக்கரவர்த்தி 'உள்ளவாறு' என்ற சொல்லைப் பெய்தது ஏன்? எதுகை கருதியா!

இல்லை. தன்னால் வேதமுதல்வன் என்று துதிக்கப் பெறும் இராமன் அறியாதது ஒன்றும் இன்று; தன் வாழ்க்கை வரலாற்றையும் அவன் தெரியாமல் இராமன், என்றாலும், தான் கொண்ட வேடத்திற்கு இணங்கத் தனக்கு ஒன்றும் தெரியாததுபோல் இராமன் கேட் கின்றானே என நினைந்த விராதன், முதலில் 'என்னு டைய வஞ்சகமான பொய் வாழ்க்கையைப் போக்கியருளிய

ஒளிவீசும் திருவடி உடைய வள்ளலே!' என்றான். அதனோடு நிறுத்தியிருந்தால் இராமனை நன்றி யுணர்வோடு விளித்து விடை இறுக்கத் துவங்கினான் என்று கொள்ளலாம். ஆனால், அவன் அடுத்து, 'கேள்' என்றான். அந்தச் சொல்தான், 'இராமா' தெரிந்தும் தெரியாதவன் போல் கேட்கின்றாயே! நான் சொல்லித்தான் உனக்கு என் வாழ்வின் உண்மை தெரிய வேண்டுமா? அப்படியானால் 'கேட்டுக் கொள்' என்ற பொருளைக் காட்டி நிற்கின்றது.

அவ்வாறு, தெரியாதது போல் கேட்கும் இராமன் உண்மையில் தெரியாதவன் தானா, இல்லையா என்று அந்தக் கந்தர்வன் சோதிக்க எண்ணித்தன் வாழ்க்கையைத் திரித்தோ, குறைத்தோ, மறைத்தோ எடுத்துரைக்க முயலலாம் அல்லவா? அவ்வாறு அவன் செய்யவில்லை; நடந்ததையெல்லாம் நடந்த வண்ணம் முழுமையாகக் கூறினான் என்பதைத் தெளிவுபடுத்தவே இந்த மிகையான சொல்லை—'உள்ளவாறு' என்பதை—இணைத்துள்ளார்.

# 6. ஆண் நாதன்

இராமன், இலக்குவன், சீதை மூவரும் சரபங்கர் எனும் மா முனிவரின் ஆசிரமச் சூழலை அடைந்தனர். அப்பொழுது அங்கு இந்திரன் வந்து சரபங்க முனிவருடன் பேசிக் கொண்டிருப்பதை இராமன் பார்த்தான்; இருவரையும் பின்னே நிறுத்தித் தான் மட்டும் இந்திரன் அருகே வந்தான்.

வந்த இராமனை இந்திரன் தன் ஆயிரம் கண்களாலும் கண்டான்; தொழுதான். அவ்வாறு தொழுதது யாரை எனக் குறிக்க வந்த கவிச்சக்கரவர்த்தி இராமனை 'ஆண் நாதன்' என்று குறிப்பிடுகின்றார். (2611) தொடர்ந்து, 'அந்தணர் நாயகன்' எனவும் அவனைக் குறிப்பிடுகிறார்.

ஏன் இந்த இரண்டு தொடர்களால் குறிக்க வேண்டும்? அதற்கு முன் பாடலிலேயே, இந்திரன், இராமனைக் கண்டதை,

"..........................................................................

..........................................................................

கண்டான், இமையோர் இறை-காசினியின்-
கண்தான், அருநான்மறையின் கனியை'' (2611)

என்று, 'வேதப் பொருள்' எனக் கம்பர் குறிப்பிட்டு உள்ளாரே, அது போதாதா?

இங்கே, இந்திரன் அகலிகையின்பால் நடந்துகொண்ட முறை கேடான செய்தியையும் அதனால் அவன்பட்ட சாபக் கேட்டையும் நினைவுறுத்த நினைத்தார் கவிஞர். காரணம், அகலிகை சாபம் தீர்த்தபின் இராமனாகிய திருமால் இந்திரனை முதலில் காணும் காட்சி இது. அதனால் தான், வேதப் பொருளைக் கண்டு பேருவகை பூக்க வேண்டிய மனோ நிலைக்கு மாறாக, இந்திரன் இராமனைக் கண்டு அஞ்சி வருந்தினான். அந்த 'நான் மறையின் கனி' எவ்வாறு தன்னை தண்டிக்கக் கூடுமோ என எண்ணி, அதன் விளைவாகவே அவன் 'கண்தாம் அவை ஆயிரமும் கதுவ'க் கண்டான். (2611)

இந்த நிலையில்,

''இந்த, இப்பிறவிக்கு இரு மாதரைச்
சிந்தையாலும் தொடேன்'' (6378)

என்று சீதைக்கு உறுதி யளித்திருந்த இராமனைக் குறிக்க வந்த கவிச் சக்கரவர்த்தி, இந்திரனின் தீச் செயலுக்கு நேரி மாறான பண்புடையோன் இராமன் என விளக்கு கின்றார். 'ஆண் நாதன்' என்னும் சொற்றொடரால்,

இந்திரனும் ஒரு 'நாதன்' தான். அவன் அமரர் நாதன். ஆனால் அகலிகையின் விஷயத்தில் அவன் ஒரு பெண் நாதனாக அறிவிழந்து, இழிசெயலில் இறங்கினான்.

அப்படிப்பட்ட ஆண்களைக் காணும்பொழுது உண்மை யான ஆண்—ஆண்களின் தலைவன்—எனப்படும் அளவிற்கு 'பிறன் மனை நோக்காப் பேராண்மை' கொண்டவன் இராமன் என்ற உட் பொருளை அடக்கிக் காட்ட வந்ததே அச் சொற்றொடர்! மேலும்,

''அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டு ஒழுகலான்'' (திருக்குறள் 30)

என்ற தமிழ் மறைக்கொப்ப தூய மனத் தலைவன், அந்தத் தீய மன இந்திரன்பால் வந்தான் என்பதை வலியுறுத்த வந்த சொற்றொடரே, 'அந்தணர் நாயகன்' என்பது.

ஆக, இந்திரனின் இழி செயலின் தன்மையை வலி யுறுத்தி நினைவூட்டவே, இராமனின் மேன்மைப் பண்புகளைக் குறிக்கும் 'ஆண்நாதன்' என்ற சொற் றொடரோடு 'அந்தணர் நாயகன்' என்ற சொற் றொடரும் வந்துள்ளது என உணர்ந்து வியக்கின்றோம்.

## 7. கண்தாம் அவை ஆயிரம்

விராதனை வீழ்த்திய பின் இராம இலக்குவரும் சீதையும், ஆரணியத்தில் மேலும் சென்றனர், முனிவர்கள் வாழ்கின்ற சோலையை அடைந்தனர். அங்கே சரபங்க மா முனிவரின் தவக் குடிலை நெருங்கினர்.

அப்போழ்து இந்திரன் அங்கே வந்து, அம் மாமுனிவ ருடன் உரையாடியிருந்தான். இதனை உணர்ந்த இராமன் இலக்குவனையும் சீதையையும் தூரத்திலேயே நிறுத்திவிட்டு முனிவரின் குடிலுக்கு அருகில் வந்தான். வந்த இராமனை இந்திரன் கண்டான். இதனைக் கூற வந்த கவிச்சக்கர வர்த்தி,

''கண்தாம் அவை ஆயிரமும் கதுவ,
கண்தாமரைபோல் கரு ஞாயிறு எனக்
கண்டான், இமையோர் இறை — காசினியின்
கண்தான், அருநான் மறையின் கனியை'' (2610)

எனக் கவிக் கூற்றாகப் பாடுகின்றார்.

இப் பாடலில் எல்லாம் 'கண்' மயமாக உள்ளன! இந்திரனின் உடலில், கௌதமரின் சாபத்தால் என்ன விளைந்தது என்பதை இராமன் அறிவான்.

''ஆயிரம் மாதர்க்கு உள்ள அறிகுறி உனக்கு
உண்டாக'' (472)

என்றுதான் அகலிகையின் கணவரான, கௌதம முனிவர் சாபம் இட்டாரே அன்றி 'ஆயிரம் கண்கள் உனக்கு உண்டாக' என்று சாபம் இடவில்லை.

அவ்வாறான ஆயிரம் பெண் குறி உடையானைத் தன் தம்பியும், தாரமும் உடன் இருக்கக் காணல் சிரிது அன்று, நாணும் தகைமைத்தானது என்று இராமன் எண்ணியே அவர்களை விடுத்துத் தான் தனியே இந்திரன் இருந்த இடத்திற்கு வந்தான்!

அங்கு வந்த இராமனை இந்திரன் கண்டான் அந்த இந்திரனைக் கம்பர் நமக்கு அடையாளம் காட்டும் பொழுது, முனிவரின் சாபச் சொற்களை அவ்வாறே கையாளவில்லை மாறாக, பெண் குறியைக் கண்ணாகவே குறிப்பிடுகின்றார்! உண்மையிலேயே அவை கண்களானால் ஆயிரம் மாதரர்க்கு (முனிவரின் சாபத்தில் காணும் எண்ணிக்கை) இரண்டாயிரம் கண்களாய் இருக்க வேண்டும். இராவமைக் கண்டு கதுவியவையோ ஆயிரம் தான். அதனால், அவை முனிவரின் சாபத்தின்படியான பெண் குறிகளே என்பது உறுதி; அப்படியானால், கம்பர், 'கண்' என்றது ஏனோ?

'பெண் குறி' என்று தான் அறிமுகப் படுத்தல் அநாகரிகம் என நினைந்துள்ளார், கவிச்சக்கரவர்த்தி. அதனால்தான் நாகரிகமாக அவற்றைக் கண்கள் என்றே குறிப்பிட்டுள்ளார்.

இந்திரன் தன் காம இச்சையைத் தீர்த்துக் கொள்ள அகலிகையை நாடி, கூடிய பொழுது அவனுடைய இரண்டு கண்களும் சஞ்சலத்தால் மிரண்டு இருக்க வேண்டும் என்பது மனோதத்துவ இயல் உண்மை. அவ்வாறு கண்கள் மிரண்டதைப் போலே அந்த ஆயிரம் குறிகளும் மிரட்சி காட்டியிருந்திருக்கின்றன இப்பொழுது! அதனை அப்படியே பச்சையாகப் பகர்தல் நேரிதன்று, நாகரிகமன்று எனவேதான் அவைகளைக் கண்களாய் உருவகித் துள்ளான்.

இனி, இனம் இனத்தைச் சாரும், சாடாது! இந்திரன் அகலிகைக்கு இழைத்த கொடுமைக்காக, அவனைச் சாட வந்தான், இராமன். ஆனால், அவனோ இராமனையே தாமரை போன்ற கண்களை யுடையவன்; காசினிக்கு எல்லாம் கண் போன்றவன் எனக்கண்டான்' ஆகவே, இந்திரனாகிய ஆயிரங் கண்களை அனைவர்க்கும் இறை வனான ஆருயிர்க் கண் ஏசுமா? அக் கண்(ணனை) ஆயிரங் கண்(ணன்) ஏத்திப் போற்றிப் பாடி மறைந்தான்.

ஆக, மனித நாகரிகப் பண்பாட்டின் அடிப்படையில் மறை உறுப்பை, மனிதனின் முக்கிய உறுப்பாக உருவகித் துள்ளார், கவிச் சக்கரவர்த்தி எனக் காண்கின்றோம்!

# 8. செவிவயின் உதவினான்!

சரபங்கனுடன் இந்திரன் இருத்தலை இராமன் அறிந்தான். இளவலையும், இனியவளையும் பின் நிறுத்தி அவன் தனித்து இந்திரன்பால் வந்தான். இந்திரனோ, இராமன் வருகையால் அஞ்சி வருந்தினான். உடனே, அவனைத் துதித்துப் பாடினான். அங்கு அதற்கப்புறம் நில்லாமல் முனிவரிடம், 'விடை தருக' என சொல்லிய வண்ணம் சென்று விட்டான்.

இந்திரனின் அப்போதைய மனோ நிலையையும், அதற்கான காரணத்தையும், தன் ஞானத்தால் உணர்ந்த சரபங்க முனிவர், இராமனை வரவேற்றார்; பின்னர், அயல் நின்ற இலக்குவனையும், சீதையையும் வர வேண்டினர். அனைவரும் அன்றிரவு அங்கு தங்கி மகிழ்ந்திருந்தனர்.

அவ்வாறு மகிழ்வு கொண்டிருந்த இராப் பொழுது கழியும் வகையில், பேரறிஞனாகிய அந்த சரபங்க முனிவர் சிறந்த அறவுரைகளை எடுத்துக் கூறினார் என்று கூறவந்த கம்பர்,

''அவ் வயின், அழகனும் வைகினன் — அறிஞன்
செவ்விய அற உரை செவிவயின் உதவ
நவ்வியின் விழியவளொடு, நனி இருளைக்
கவ்விய நிசி ஒரு கடையுறும் அளவின்'' (2621)

எனப் பாடுகின்றார்.

அறவுரைகளை செவி வழி செப்பாமல் கண் வழி யாகவா செப்புவர்! இந்தச் சிறு விஷயம் கம்பர் அறியாததா? அப்படியிருக்க 'செவி வயின்' என்ற சொல்லை அவர் பெய்தது மிகையல்லவா?

கவிச்சக்ரவர்த்தியின் உட்கருத்தை உணராதவரை அது மிகையாகத் தோன்றும்! ஆனால், அதனின் ஆழ் பொருள் அறிந்து தெளிவோமானால், அவர் தம் புலமைச் சொல்லின் பயனை வியப்போம்!

தன்பால் வந்திருக்கும் இராமன் யார் என்பதைச் சரபங்கமா முனிவர் அறிவார், அவன்தான் 'திருமகள் தலைவன்' என்றும், (2638) யாருடைய வருகையை எதிர் நோக்கித் தான் அது காறும் தவங்கள் செய்து கொண்டு காத்திருந்தாரோ அந்த இறையவனே இராமன் என்றும் முனிவர் அறிவார்.

இறையவனுக்கே முனிவர் அறிவுரையோ, அறவுரையோ அவன் உள்ளம் புகச்சொல்ல முடியுமா? சொல்லத்தான் தேவை உண்டா? ஆகவே, தனக்குத் தெரிந்த அறங்களையெல்லாம் முனிவர் இராமனின் செவிகளில் போட்டு வைத்தாரேயன்றி இராமனுக்கு தர்ம நெறிகளைப் புகட்டவில்லை என்பதைக் குறிக்கவே, கவிச்சக்கரவர்த்தி, 'செவி வயின் உதவ' என்ற சொற்றொடரைப் பெய்துள்ளார் எனத் தெளிகின்றோம்!

அப்படியானால், 'அந்த முனிவர் இராமனிடம் அவற்றைச் சொல்ல வேண்டிய அவசியம் என்ன?' என்று கேட்கத் தோன்றும்!

இந்திரன் நேரே வந்து நான் முகன் அழைப்பதாகவும், சரபங்க முனிவர் ஏகி இந்திரலோகப் பதவியைப் பெற வேண்டும் என்றும் வேண்டினான். அதனை அவர் மறுத்தார் என்பதனைக் கம்பர்,

''அல்லேன் என வால் அறிவான் அறைவான்'' (2603) என்ற வரியால் சொல்லிவிட்டார்.

தான், அம்மா முனிவர்க்கு 'வால் அறிவன்' என்று சூட்டிய பட்டம் சரிதானா என்பதை உறுதிப் படுத்த எண்ணி, வால் அறிவன் ஆகிய இறைவன் — அதாவது

இராமன் பால் — தானறிந்த தர்ம நெறிகளள யெல்லாம் சரபங்கர் கூறும்படிச் செய்கின்றார். முழு இரவும் முனிவர் கூறுவன கேட்டிருந்த இராமன் இடையீடு இன்றிக் கேட்டிருந்தான்; அது மட்டு மல்ல! மறு நாட் காலை சரபங்க மா முனிவர் 'தீயில் குளித்து இறுதியே இல்லாத உயருலகு அடைவேன்' என்று கூறியபோது அவரை இராமன் தடுக்க வில்லை! காரணம்! அவர் அன்றிரவு முழுதும் செப்பியிருந்தவற்றைச் செவி மடுத்த இராமன் அவர் தாம் விழைந்த நிலையை எய்துவதற்கு ஏற்றவரே என முடிவு செய்ததே ஆகும்.

ஆக, சரபங்கர் இராமன் 'செவி வயின் உதவிய' அறவுரைகள், அவருக்கு இறைவனின் அருள்வயின் சென்றுய்ய உதவின என்று உணர்ந்து மகிழ்வோமாக!

# 9. செய்த செய்த தவம்

சரபங்க மாமுனிவர் தீப் புகுந்தார். அந்தமில் உயர் பதம் அடைவதற்காக! அதனைக் கண்டு பிரிவுத் துயரால் வருந்திய வண்ணம் இராம இலக்குவர் சீதையொடு அவ்விடம் விட்டு நீங்கினார்கள்; தண்டக வனத்திற்குள் நுழைந்தனர். அங்கிருந்த முனிவர்கள் இராமன் வரவைக் கண்டு மகிழ்ந்தனர்.

அந்த முனிவர்களைக் குறிப்பிட வந்த கம்பர்,

''தெரிஞ்சுற நோக்கினர் — செய்த செய் தவம்
அருஞ் சிறப்பு உதவ, நல் அறிவு கைதர,
விரிஞ் சுறப் பற்றிய பிறவி வெந்துயர்ப்
பெருஞ் சிறை வீடு பெற்றனைய பெற்றியார்'' (2637)

எனப் பாடுகின்றார். இப் பாடலில் 'செய்த செய் தவம்' எனும் சொற்றொடொருக்கு 'முனிவர்கள் செய்த செம் மையான தவம்' எனப் பொருள் கொள்கின்றோம்.

மேலெழுந்தவாரியாக, அப்பொருள் பொருந்துவது போல் தோன்றினாலும், அம் முனிவர்களே பின்னால் சொல்லும் உண்மைகளைப் பார்க்கும் பொழுது அது அவ்வளவு செம்மையாகப் படவில்லை!

இராமனை ஒரு சாலையில் முனிவர்கள் இருக்கச் செய்தனர். அவன் தங்கி இளைப்பாறிய பின், அனைவரும் வந்து அவனிடம் தங்கள் குறைகளைக் கூறி முறையிட்டனர்.

அப்பொழுது.

''இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர்,
அரக்கர் என்று உளர் சிலர்; அறத்தின் நீங்கினார்
நெருக்கவும், யாம் படர் நெறி அலா வெறி
துரக்கவும் அருந் தவத் துறையுள் நீங்கினெம்''
(2642)

என்று துவங்கினர்.

அதாவது, அரக்கர்களின் கொடுமையால் அம் மா முனிவர்கள் சீரிய தவ வழியை விட்டுவிட்டனர். அப்படியானால், அதற்கு முன்னம் அவர்கள் சீரிய தவ வாழ்வினை முழுமையாய்க் கொண்டிருந்தனர் என்பதுவும் தற்பொழுது அதனை நீங்கியுள்ளனர் என்பதுவும் தெளியப் படுகின்றது.

அப்படியானால். இராமன் தண்டகவனத்துள் நுழைந்த பொழுது 'அத் தண்டகவனத்து உறை தவத்துளோர் எலாம் கண்டனர்' உன்று கூறிய தொடரில் 'தவத்துளோர்' (2633) என்று முனிவர்களைக் குறிப்பிட்டது ஏற்புடையதாகத் தோன்ற வில்லையே! அவ்வாறு முன்னுக்குப் பின் முரணாகக் கவிச் சக்கரவர்த்தி பாடுவாரா!

இல்லை. முனிவாகள் அருந்தவம் நீங்கினரேயன்றி 'தவம்' முழுமையும் விட்டிலர் இதனை, அவர்கள்

தொடர்ந்து, இராமனிடம் தங்கள் குறைகளை விளக்கும் பொழுது,

''வல்லியம் பல திரி வனத்து மான் என,
எல்லியும் பகலும், நொந்து இரங்கி ஆற்றலெம்;
சொல்லிய அறநெறித் துறையும் நீங்கினெம்;
வில் இயல் மொய்ம்பினாய்! வீடு காண்டுமோ?''
(2643)

என்று கேட்கின்றனர்.

அரக்கரால் அடிபட்டு, வதைபட்டு, அடக்கப் பட்டிருந்தால் அம் முனிவர்கள் அவ்வனத்திற்குள் மருண்ட பார்வை கொண்ட மான்களைப் போலே எப்படித் திரிய முடியும்? மற்றொன்று! தாங்கள் தவ வாழ்வை அறவே துறந்திட்ட நிலையில் 'வீடு பேறு கிட்டுமா?' என்று கேட்டால் 'இல்லை' என்றுதானே பதில் வரக்கூடும். எனவே, சீரிய முழுமையான தவ வாழ்க்கையை அரக்கரால் தாங்கள் இழந்தாலும், கூடிய வரை அரக்கர்களுக்குத் தெரியாத அளவிலேனும்; அங்குமிங்கும் அஞ்சி அஞ்சி ஓடி ஒளிந்து தவத்தைத் தொடர்ந்து கைக் கொண்டுள்ளதைக் குறிப்பிடுகின்றார்கள் முதலிரண்டு அடிகளில். என்றாலும், ஆன்றோர்கள் சொல்லிய அளவிற்கான அறநெறியை நீங்கியுள்ளோமே என்று மூன்றாம் வரியில் அகங்கலாய்த்துக் கொள்ளுகின்றனர். அவர்கள் தங்களுடைய அரை குறை நிலையை,

''மா தவத்து ஒழுகலெம்; மறைகள் யாவையும்
ஓதலெம்; ஓதுவார்க்கு உதவல் ஆற்றலெம்;
மூதெரி வளர்க்கிலெம்; முறையின் நீங்கினோம்;
ஆதலின், அந்தணரேயும் ஆகிலேம்!'' (2644)

என்கிறனர். அதாவது, 'நாங்கள் பெருந்தவம் கொள்ள முடியவில்லை. சிறு தவமே கொள்ள முடிகின்றது. எல்லா வேதங்களையும் பயில முடியவில்லை. ஒரு சிலவே பயில முயல்பவருக்கும் துணை நிற்க முடியவில்லை. அக்கினி

முட்டி யாகம் செய்ய முடியவில்லை? பொதுவில் முறையாக எதனையும் செய்ய இயலவில்லை; எனவே, முனிவர்கள் என்ற சிறந்த நிலையில்லை என்பது மட்டுமல்லாமல், அந்தணர் என்ற பெயர்க்கும் ஏற்றவர்களாய் இருக்க இயல வில்லை என்று நொந்து கொண்டனர். 'எங்கள் துயர்களை நீக்குவதற்காக நாங்கள் செய்த தவத்தின் சிறப்பினால் நீ வந்துள்ளாய்' என்றும் குறிப்பிட்டனர்.

இந்த நிலைகளை எல்லாம் எண்ணிப் பார்க்கும் பொழுது 'செய்த செய் தவம்' என்னும் சொற்றொடரில் 'செய்த' என்பது இறந்த காலத்துச் செய்த தவத்தையும், (அதாவது அரக்கரின் இடையூறுகள் தோன்றுவதற்கு முன்னால் முனிவர்கள் செய்த நேரிய, சீரிய முறையான முழுமையான தவத்தினையும்) 'செய் தவம்' என்பது வினைத் தொகையாக அரக்கரின் தொல்லைகள் தோன்றிய பின் செய்த, இன்றும் செய்கின்ற, இராமன் அவர்களின் தொல்லைகளை நீக்கும் வரை செய்யப் போகின்ற தவத்தினையும் குறித்து நிற்கின்றன என்று, நுணுகிப் பார்க்கும் பொழுது பொருள் செம்மையினும், செம்மை ஆகத் தோன்றுகின்றதன்றோ!

## 10. வையகம் காவலன் மதலை!

இராமன் தண்டக வனத்திற்கு வந்தான்; தவ முனிவர்கள் எல்லோரும் மகிழ்ந்தனர். அதனைக் கம்பர்,

''ஆய் வரும் பெரு வலி அரக்கர் நாமமே
வாய் வெரீஇ அலமரும் மறுக்கம் நீங்கினார்;
தீ வரு வனத்திடை இட்டுத் தீர்ந்தது ஓர்
தாய் வர, நோக்கிய கன்றின் தன்மையார்'' (2635)

எனப் பாடுகின்றார்.

விராதன், இராமனைத் துதிக்கும் பொழுது,

''தாய் தன்னை அறியாத கன்று இல்லை; தன் கன்றை
ஆயும் அறியும்; உலகின் தாய் ஆகின், ஐய!
நீ அறிதி எப் பொருளும், அவை உன்னை நிலை
அறியா;
மாயை, இது என் கொலோ?—வாராதே வர
வல்லாய்!'' (2570)

எனப் பாடியதாகக் கூறும் அதே கம்பர், இப்பொழுது அந்த தவ முனிவர்களாகிய கன்றுகள், தாய்ப்பசுவாகிய இராமனை நோக்குவதாகக் கூறுகின்றாரே!

ஆம்! விராதன் தன் உண்மை நிலை மாறி—உருவம் மாறி—சாபத்தின் விளைவாய் அரக்கனாய்த் திரிந்தவன், அதனால், முதலில் அவனால் இராமன் யாரெனத் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால், இராமன் கைப்பட்டு சாப விமோசனம் எய்தியதும், அவனே அறிந்து கொண்டான், இராமன் ஆதி பரம் பொருள் என்பதனை.

இங்கு தவ முனிவர்களோ, சாபத்தால் அல்லற் படவில்லை; அரக்கர் தரும் தொல்லைகளால்தான் அவதிப் படுகின்றனர். அதனால், அவர்களுடையோ அறிவோ, ஞானமோ, உள்ளுணர்வோ அழியவில்லை. எனவே, தாய்ப் பசுவாகிய திருமால், இராமன் எனும் மனிதனாக வந்ததனை அந்தத் தவ முனிவர்களாகிய கன்றுகள் எளிதில் இனங் கண்டு கொண்டன!

ஆனால், அந்தத் தும்புரு ஆகிய, அறம் நீங்கி வாழ்ந்த வனுக்கும், இடையறாத் தவம் மேற் கொண்டுள்ள முனிவர்களுக்கும் வேறுபாடு இல்லா வகையில் இரு சாரருமே சொல் தடுமாறுகின்றனர்; இராமனைக் கண்டு மயங்குகின்றனர்.

விராதன், இராமனை முதலில், 'அடுத்த பெருந்தனி மூலத்து அரும் பரமே! எம்பெருமான்! தத்துவத்தின்

தகைமூர்த்தி! என்றெல்லாம் இறைவனாக விளித்தான். தொடர்ந்து, 'ஆதிமுதல் தாதை!' என்று தந்தையாய்க் கண்டது மட்டுமன்றி 'தாய் ஆவார் யாவரே?' என்று வேறு கேட்டு நின்றான். மீண்டும், 'ஆதி பரம்பரம்' என்றான். 'தாய் யார்?' என்றவன், மறுபடியும் இராமனையே 'தாய்!' என்று போற்றுகின்றான்.

அதே போல், அந்த அரு முனிவர்களும், முதலில், இராமனை, அமுது அளாவிய புனல் எனக் கண்டனர். அடுத்து 'தாய்' எனக் கண்டனர்; மீண்டும், 'மரக்கலம்' எனப் பிடித்தனர். இவ்வாறெல்லாம் சடப் பொருளாய், உயிர்த் தாயாய் மாறி மாறிக் கண்ட முனிவர்கள் இராமன் எனும் 'குரிசில் வீரனை', விளக்கும் பொழுது, 'வையகம் காவலன் மதலை (2641) என்றனர்! ஒரு வளர்ந்த ஆண் மகனை 'மதலை' — குழந்தை என்று அழைக்க அந்த 'மதலை'யிடம் அவர்கள் எடுத்துரைத்த செய்தியோ, குழந்தைகள் கேட்டாலே அஞ்சும், 'வெய்ய வெங் கொடுந் தொழில்'!

அது மட்டுமா கைகேயியின் பிடிவாதத்தால் நாடு துறந்து காடு வந்துள்ளவனை, அவ்வாறு அவன்பிரிந்ததால் உயிர் பிரிந்த தயரதனின் மகனை, அழைத்து முறையிட்டு என்ன பயன்? உண்மையிலேயே மன்னன் மைந்தனானக் குறிப்பிட்டுக் கூப்பிட்டிருந்தால், 'இராமா!' என நேரடிப் பெயர் போதுமே!

இப்பொழுது தான் அந்த சொற்றொடரின் ஆழ்ந்த நோக்கத்தைப் பார்க்கின்றோம்!

ஆதியிலேயே, ஆதி மூர்த்தி,

''கொலைத் தொழில் அரக்கர்தம் கொடுமை
தீர்ப்பென்'' (185)

என்று உறுதி கூறினான், அன்றே தான்,

''யாம், தசரதன் மதலையாய் வருதும், தாரணி'' (200) என்று கூறியிருந்தான்.

அன்று அவ்வாறு கூறியதனை மாதவத்தவர் — வசிட்ட மா முனி போன்றே — அறிந்து நினைந்தனர். ஆகவே, அம் மறைப் பொருள்தான் அங்கு வந்துற்றது, என்பதைத் தாங்கள் உணர்ந்து கொண்டதாக அவனிடமே மறைபொருளாய் மடுத்திட அவர்கள் கையாண்ட சொற்றொடரே, 'வையகம் காவலன் மதலை' என்பது என நாமும் உணர்ந்து மகிழ்கின்றோம்!

# 11. இறுதியைத் தன்வயின் இயற்ற எய்தினானன்!

பத்து ஆண்டுகள் தண்டக வனத்தில் தங்கி, அங்கிருந்த முனிவர்களுக்கெல்லாம் பாது காவலாய் நின்று, அரக்கர் துயர் அகற்றிக் காலம் கழித்தான் இராமன். பின்னர் அம் முனிவர்களின் ஒப்புதலுடன் இராம இலக்குவர், சீதை மூவரும் அகத்தியரை அடையப் புறப்பட்டனர். வழியில் சுதீக்கணன் அவர்களை வரவேற்று உபசரித்து அகத்தியர் ஆசிரமத்தை அடையும் வழியைக் காட்டி அனுப்பினான்.

மூவரும் அகத்திய மா முனியை — 'என்று முள தென் தமிழ் இயம்பி இசை கொண்டானை' (2677) — அடைந்தனர். தன் குண்டிகையினில் காவிரி ஆற்றைக் கொணர்ந்த அம் முனிவர் தன் கண்ணில் ஆனந்த நீர் சோர அவர்களை வர வேற்று உபசரித்தார், அவர்களை அங்கேயே தங்கும் படிக் கூறினார்.

இராமனோ, அகத்தியரிடம், 'அரக்கர் வரும் திசையில் முந்துற்று இருக்கை நலமன்றோ?' (2684)

என்றான். அவரும் ஒப்பினர்; பஞ்சவடியின் சிறப்புகள் எடுத்துரைத்து அங்கு தங்கும் படிக் கூறினார்; தன் பால் திருமால் தந்திருந்த வலிய வில்லையும் அம்புகளையும் அளித்து அனுப்பினார்.

பஞ்சவடிக்குச் சென்று கொண்டிருக்கையில் கழுகின் வேந்தனாகிய சடாயு கண்ணில் பட்டார். அவரும் இம் மூவரைத் தொலைவில் நின்றே தம் கழுகுப் பார்வையால் கண்டார்: இவர்கள் யாவரோ என ஐயுற்றார் 'இருவினை அறுக்கும் நோன்பு செய்யக் கூடியவர்கள் அல்லர்; காரணம் அவர்கள் வில்லைக் கையில் ஏந்தியுள்ளனர். என்றாலும் சடா முடிதரித்தவர்களாய்த் திகழ்வதால் தேவர்களோ? அப்படியும் இருக்க இயலாது; நான் இந்திரன், திருமால், சிவன், பிரம்மன், மன்மதன் முதலிய தேவர்கள் அனை வரையும் எப்பொழுதும் பார்த்துக் கொண்டே இருக் கின்றேன், அதனால் அவர்களும் வேடம் மாறி வந்திருக்க முடியாது! இலக்குமி தேவி போன்ற அழகுடைய ஒரு பெண்ணுடன் வருகின்றனரே! இவர்கள் யாரோ! என்றெல்லாம் சற்றே சிந்தித்து வியந்தவருக்குக் கடைசியில் தம் பழைய நண்பர் தயரதனின் நினைவும், இந்த வீரர் களின் உடல்வாகு அவனுடையதைப் போல் தோற்ற மளிக்கும் பாங்கும் தோன்ற அவர்களைச் சடாயு நெருங் கினார்,

இப்படி யெல்லாம் அந்த இளைஞர்கள் யாரெனச் சிந்திக்கும் பொழுது 'அரக்கர்களால் தொல்லைகள் ஏற்பட்டு வரும் அந்தக் கானகத்தில் அரக்கர்தாம் உருமாறி வந்துள்ளனரோ?' என்று அவர் சற்றும் சிந்திக்க வில்லை; சந்தேகிக்கவில்லை. தேவர்கள் உருமாறி வந்துள்ளனரோ என்று வேண்டுமானால் உயர்ந்தோரை நினைந்து அந்த ஐயமும் தனக்குத்தானே நீக்கிக் கொண்டார்! அத்தகைய பெருந் தகையாளரைக் கண்டு, இராமன்,

''இறுதியைத் தன்வயின் இயற்ற எய்தினான்
அறிவு இலி அரக்கன் ஆம்.'' (2699)

என்று முதலில், வருபவரை அரக்கர் கூட்டத்தைச் சேர்ந்தவனோ என்று சந்தேகித்து, அதன் பின்னர்,

''......................அல்லனாம் எனின்,
எறுழ் வலிக் கலுழனே?''

என்று எண்ணுகின்றான்!

ஒரு பறவைக்குப் பெரும் போக்கான ஐயம் தோன்றும் பொழுது, 'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்' என்ற பாங்கில் மனப் பக்குவம் அடைந்துள்ள மனிதன் — இராமன் — எடுத்த எடுப்பிலேயே வருபவன் யாரெனத் தெரியாத முன்பே, அவன் அரக்கன் என்று எண்ணும் அளவிற்கு, ஏது அடையாளமும் தெரியாத முன்பே, 'அவன், தன்பால் இறுதி எய்த வந்தவனோ?' எனும் பாங்கில் ஐயுறுவது சரியா? முறையா? அப்படியே இருந்தாலும், 'இவன் கருடனோ? கருட வேடம், அல்லன் கொண்டு வந்துள்ள அரக்கனோ?' என்றாவது முறை மாறி நினைந்திருக்கலாம்! அகத்தியரிடம்,

''...................அவர் வரும் திசையில் முந்துற்று
இருக்கை நலம், நிற்கு அருள் என்?'' (2684)

என்று இராமன் சொல்லியதற்கு இணங்க இப்பொழுது ஐயுற்றான் என்றாலும், தன் கருத்தின் வாசகம் முதல்லில்; இறுதியைக் குறிப்பிட வேண்டுமா? இவ்வாறு கவிச்சக்கரவர்த்தி குற்றம்படத் தன் கதாநாயகனின் வாயில் சொற்களைப் புகுத்துவாரா? அதிலும், கவிக் கூற்றாக அக் கழுகின் வேந்தனை, 'மந்தர மலை போன்று திகழ்கின்றான்; தன்னுடைய அழகான கால்களின் சிவந்த ஒளி எங்கும் பரவுகின்றது: ஐராவத யானையின் அங்குசம் போல மூக்கு தேய்ந்து திகழ்கின்றது; அணிந்துள்ள மகுடம்

சூரியனைப் போல் சுடர் வீசுகின்றது' என்றெல்லாம் உண்மை அடையாளங்களைக் கூறுகின்ற கம்பர், இவ்வாறான வாசகத்தை அமைத்தது ஏன்?

இதனை, நுணுகிப் பார்க்கும் பொழுது ஒருண்மை வெளிப்படுகின்றது. சான்றோர் தம் வாயினின்றும் வரும் சொற்கள் பொய்யாகா; அவர்கள் சொல்லிய வண்ணம் நடந்தே தீரும்.

சான்றோர் வாக்கு பலித்திடும் என்பதற்குக் கம்பரின் வாக்கே சான்றாகி நிற்கின்றது. சடாயு தன் வரலாறு கூறி முடித்ததும், இராம இலக்குவர் மகிழ்ந்தனர் என்பதைக் காட்ட வந்த கவிச் சக்கரவர்த்தி,

''பூண்ட பெரும் புகழ் நிறுவி தம் பொருட்டால்
பொன்னுலகம் புக்க தாதை
மீண்டனன், வந்தான், அவனைக் கண்டனரே
ஒத்தனர் — அவ் விளங்கல் தோளார்'' (2715)

எனப் பாடுகின்றார். சூழ்நிலைக்கேற்ப, சடாயுவின் வயது, தோற்றம், அவனுக்குத் தயரதனிடம் இருந்த நட்பின் தன்மை ஆயவற்றை நினைந்துதான், 'இறந்த தந்தை மீண்டு வரக் கண்டதுபோல் கண்டனர்' என்று அவர் பாடினாலும், அச் சொல் பலித்து, காவிய இறுதியில் உண்மையாகவே தந்தை தயரதன் விண்ணுலகினின்றும் இழிந்துவர, இராம இலக்குவர் அவனைக் கண்டனர் என்ற உண்மையை நாம் அறிகின்றோம் அன்றோ?

இந்தப் பேருண்மையைக் — சான்றோர் சொல் வீண் போகாது என்றதனை — கம்பரே சடாயுவின் வாயிலாகத் தெளிவுபடக் கூறுகின்றார். சடாயு, தயரதனை நினைந்து புலம்பும் பொழுது,

''தயிர் உடைக்கும் மத்து என்ன உலகை நலி
சம்பரனைத் தடிந்த அந் நாள்,
அயிர் கிடக்கும் கடல் வலயத்தவர் அறிய,
'நீ உடல்; நான் ஆவி' என்று
செயிர் கிடத்தல் செய்யாத திரு மனத்தாய்!
செப்பினாய்; திறம்பா நின் சொல்;
உயிர் கிடக்க, உடலை விசும்பு ஏற்றினார்,
உணர்வு இறந்த கூற்றினாரே'' (2712)

எனப் பாடுகின்றார். இப்பாடலில் 'திறம்பா நின் சொல்' என்ற சொற்றொடரால், 'சான்றோர் வாய்ச் சொல் பலிக்கும்' எனும் தத்துவத்தைக் குறிப்பிடுகின்றார்.

ஆம்; சான்றோனாகிய இராமன் சொல்லியதாக, கவிச் சான்றோர் கம்பர் பாடியது இங்கும் பலித்தே நின்றது!

ஐயுற்ற 'இருதரத்தாரும் ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொண்டனர்; சடாயுவைத் தன் தந்தை தயரதனின் சோதரனாகவே இராமன் ஏற்றுக் கொண்டான். இந்த உறவுத் தோழமையைக் கம்பரும் உறுதிப் படுத்துகின்றார். சீதையை இராவணன் வான்வழி எடுத்தேகும் பொழுது, சடாயு சண்டையிட்ட நிலையை விளக்கும் கம்பர்.

நிலையை விளக்கும் கம்பர்,

''..................தழல் வண்ணன் தடக்கை வில்லைத்
தோளால் இறுத்தான் துணைத் தாதைதன்
அன்பின் தோழன்''
(3432)

என்று கவிக் கூற்றாகக் குறிப்பிடுகின்றார். அதன் பின் அவரவர் வழி அவர்கள் பிரிந்தனர்.

சீதையைச் சிறையெடுத்துச் சென்றான், இராவணன், வழியில் செய்தி தெரிந்து, சடாயு அவனுடன் தன்னால்

ஆனமட்டும் போரிட்டுத் தடுக்க முயன்றார். இறுதியில் சிற கொடிந்து தளர்ந்து வீழ்ந்து கிடந்தார். சீதையைத் தேடிய வண்ணம் வந்த இராம இலக்குவர், சடாயு குற்றுயிராய்த் துடித்துக் கொண்டிருப்பதைக் கண்டனர். இராமன் பெருந்துயரில் ஆழ்ந்து,

''தம் தாதையரைத் தனையர் கொலல நேர்ந்தார்
முந்து ஆரே உள்ளார்? முடிந்தான் முனை ஒருவன்;
எந்தாயே! எற்காக நீயும் இறந்தனையால்;
அந்தோ; வினையேன் அருங் கூற்றம் ஆனேனே!''

(3486)

என்று அரற்றி அழுதான்.

சடாயு சற்றே மூர்ச்சை தெளிந்தார்; நடந்தது உரைத்தார்; அவர்களுக்கு ஆறுதல் கூறினார். அறிவுரை புகன்றார். பேசியிருந்த நிலையிலேயே தெய்வ மரணம் எய்தி விட்டார்.

அவ்வாறு மரணம் எய்திய, தந்தைக்கு ஒப்பாகத் தான் கருதியிருந்த சடாயுவிற்கு இராமன் இறுதிக் கடன்களைச் செய்தான்.

மேலும், தயரதன் இறந்துவிட்டான் என்ற செய்தியைக் கேட்ட சடாயு வெகுவாக அழுது புலம்பி முடிவில் தானும் தீயில் வீழ்ந்து இறக்கப் போவதாகவும் தனக்கும் இராம இலக்குவர் இறுதிக் கடன் செய்ய வேண்டும் என்ற கருத்துப்பட,

''மருவ இனிப குணத்தவரை, இரு சிறகால்
உறத் தழுவி, 'மக்காள்' நீரே
உரிய கடன் வினையேற்கும் உதவுவீர்;
உடல் இரண்டுக்கு உயிர் ஒன்று ஆனான்
பிரியவும், தான் பிரியாதே இனிது இருக்கும்
உடல் பொறை ஆம்; பீழை பாராது,
எரி அதனில் இன்றே புக்கு இறவேனேல்
இத்துயரம் மறவேன்' என்றான்''

(2716)

என்பதாகக் கம்பர் பாடியுள்ளார். எனவே சான்றோன் ஆகிய கழுகின் வேந்தனின் சொல்லும் மெய்யாகி விட்ட பாங்கில் இராமன் சடாயுவிற்கு இறுதிக் கடன் செய்தான்.

இந்த நிகழ்ச்சியைக் கண்டு, தனக்கு இறுதிக் கடன் செய்ய வேண்டுமென என்பால் வருகின்றானோ! என்று பொருள்படவும், இராமன் எடுத்த எடுப்பிலேயே,

''இறுதியைத் தன்வயின் இயற்ற எய்தினான்'' என்றுரைத்தான் போலும் என நினைந்து, கவிச் சக்கரவர்த்தியின் சொல்லழகில் மூழ்குகின்றோம் அன்றோ!

# 12. தீது இல் வரவு

இராமன், இலக்குவன், சீதை மூவரும் பஞ்சவடியை அடைந்தனர். அங்கே அவர்கள், கவிச் சக்கரவர்த்தி கம்பர் போன்ற சான்றோர் பாடும் கவியைப் போல, ஆழ்ந்த பொருள்களைத் தன்னகத்தே கொண்டு, கானகத்தையும் அழகு செய்து பொலிவுறத் திகழும் வகையில் ஓடிக் கொண் டிருக்கும் கோதாவரி ஆற்றைக் கண்டனர்.

அவ்வாற்றினைக் 'கடவுள் ஆறு' என்று கம்பர் குறிப் பிடுகின்றார்! ஏன்? வழியில் கங்கை கண்டார்; பிற பல ஆறுகள் கண்டார்; அவற்றையெல்லாம் விடுத்து இதனை மட்டும் அவ்வாறு குறிப்பிடுவது ஏன்? மற்ற பிற நதி களைக் கடந்து வந்தான், இராமன்; ஆனால், இந்த ஆற்றங்கரையிலோ அவன் பர்ணசாலையில் தங்கி நித்த நித்தம் நீராடி, நேரிய ஜபதப அனுஷ்டானங்களைச் செய்து வாழப் போகின்றான். எனவே கடவுளின் அவதார மாகிய இராமனால் புனிதப்படப் போகின்றது இந்த ஆறு என்று குறிப்பிடவே, 'கடவுள் ஆறு' என்று பாடியுள்ளார் என்பதை நினைந்திடும் பொழுது நெஞ்சம் இனிக்கின்றது நிற்க.

இராமனும் சீதையும் ஆங்கமைந்த இயற்கைக் காட்சிகளின் அழகில் மயங்கி அனுபவித்திருந்தனர். அவ்வேளையில் இளவல் இனிய பூஞ்சாலை ஒன்று சமைத்திட்டான் மூவரும் அங்கு தங்கியிருந்தனர்.

ஒரு நாள் இலக்குவன் வெளியே சென்றிருந்த நேரத்தில், சீதை பர்ணசாலையின் உள்ளே இருந்தாள்; இராமன் வெளித் திண்ணையில் அமர்ந்திருந்தான்; அவ்வழியாகச் சூர்ப்பணகை என்னும் அரக்கி வரலானாள்.

அவள் செம்பு நிறக் கூந்தல் செறிந்தவள்; நீண்ட பற்களை உடையவள்; பெரும் வயிறு படைத்தவள்; பொதுவில் காணச் சகிக்காத உருவத்து அரக்கி, அவள்!

அவள் சற்றுதொலைவில் வரும்பொழுதே, இராமனைக் கண்ணுற்றாள். அவனுடைய அழகிலே மயங்கி, வியந்து நின்றாள்!

'இவன் இந்திரனோ, சிவனோ, பிரம்மனோ, அல்லன். நல்ல தவம் செய்து காமன் தன் முழு அழகு முன்னுருப் பெற்று வந்துள்ளானோ?' என்றெல்லாம் சிந்தித்தாள். அவனுடைய அங்கங்கள் ஒவ்வொன்றும் ஒப்புமைகள் எவைக்கும் ஒவ்வாது மீறி மிளிர்வதைக் கண்டாள். 'இத்தகைய அழகேசன் தவம் பூண்பார் போலிருத்தல் ஏனோ?' என மனம் குமுறினாள். இப்படி எல்லாம் இராமனுடைய அழகைக் கண்டு களித்துத் தன் மெய்ம் மறந்து அவன்பால் அவள் காம இச்சை கொண்டாள்; வெறி ஏறியது! 'அவனை அடைந்து அணைவேன்! இன்றேல் என் உயிர் போகும்' எனக் கூறி, அவனுடைய எதிரிலே செல்ல முற்பட்டாள்.

தன்னுடைய அரக்க உடலோடு — சுய உடலோடு — சென்றால், இராமன் காணவும் கூசுவான் என்று நினைந்து, மந்திரம் ஜெபித்துத் தன்னை அழகுடை மங்கையாய் மாற்றிக் கொண்டாள்! நிலவை ஒத்தமுகம்! கொவ்வைச் செவ்வாய்! குயிலின் இனிய குரல்! மயிலின் அழகுச்சாயல்!

அமையப் பெற்றாள். அழகு மயிலோ, அன்ன நடையோ எனப் பிறர் நயக்கும் வண்ணம் எழிலொழுக, இடை ஒசிய, அவள் இராமனை நெருங்கி நடந்தாள்.

நடந்தவளின் சிலம்பும், மேகலையும், மாலை மணிகளும், அவளுடைய கூந்தல் பூவிலிருந்த வண்டுகளும் தாள இசை தரும் ஓசை, இராமனின் காதுகளில் ஒலித்து இனித்தது. 'ஆஹா ஓர் அணங்கு அருகே வருகின்றாள்' என இராமன் அவள் வரும் திசையை ஆவலுடன் நோக்குகிறான்.

அந்த ஆரணங்கு அவன் கண்ணில் பட்டாள். 'என்னே இவள் எழில் ஏவரே இவளை ஒப்பார்!' என்றெல்லாம் எண்ணி இராமன் வியந்தான்! அவளும் அவன் அருகில் வந்து நாணிக் கோணி ஒயிலாய் நின்றாள்.

அவ்வாறு அழகு மிளிர, நடையிசை பயில ஆரணங்காய்த் தன் பக்கல் வந்து நின்றசூர்ப்பணகையை, இராமன் வரவேற்றான்; ஆம், ஒருவருடைய இல்லம் நோக்கி வந்தவர் ஏவரேயானாலும் அவர்களை வரவேற்க வேண்டுவது நாகரிகப் பண்பாகும். ஆனால், அவ்வாறு அவளை வரவேற்ற இராமன் என்ன கூறினான்?

''தீது இல் வரவு ஆக, திரு ! நின் வரவு: சேயோய்!''

(2769)

என்றிட்டானே! எடுத்த எடுப்பிலேயே அமங்கலச் சொல் கையாண்டு வரவழைக்க வேண்டுமா? அதிலும் ஒரு பெண்ணை அமங்கலமாய் அழைப்பதா? அது தான் முறையா? 'நின் வரவு நல் வரவு ஆக!' என்று கூறுவது தானே மரபு!

இதனை ஆயும் பொழுது தான் கவிச் சக்கரவர்த்தியின் சொல் நயம் விளங்குகின்றது! இராமனின் உட்கருத்தும் புரிகின்றது!

'தீது இல் வரவு ஆக' என்று சொன்னவன் யார்? 'இராமன்' என்று கவிச்சக்கரவர்த்தி கூறவில்லை; 'வேத முதல்' எனக் குறிப்பிடுகின்றார்! அத்தகைய வேத நாயகன் பின் நடக்கப் போவதையும் அறியாமல் போவானா! எனவே, இரு பொருள்பட அவளை அழைக்கலாயினான்!

மேலெழுந்த வாரியாகப் பார்க்கும் பொழுது, 'உன் வரவு தீது இல்லாததாக அமையட்டும்' என்று கூறுவதைப் போல் தோன்றுகின்றது. ஆனால் உட்பொருள்?

'நான் இராவண வதத்திற்காக அவதரித்து இவ்வளவு தூரம் வந்துள்ளேன் அந்த இராவண வதத்திற்கு ஏதாவது காரணம் வேண்டும். அந்தக் காரணம் உண்டாவதற்குக் கருவியாய் நீ வந்துள்ளாய். உன் எண்ணம்—என்னை நீ அடைந்து அணைந்து அனுபவிக்க வேண்டும் என்று மனத்துள் கொண்டுள்ள ஆசை—தீது ஆகும். ஆகவே அந்தத் தீது—தீய எண்ணம் கொண்டுள்ள நீ- என்னுடைய இல்லம் தேடி வருவதாகுக!' என்ற மறை பொருளைக் கொண்டுள்ளது, அவ் வரவேற்புரை!

இதனைத் தான் கம்பரும் முதலிலேயே,

"................. தன் கிளைக்கு இறுதி காட்டுவாள்"

(2742)

என்று அவளைக் குறிப்பிட்டுள்ளார் எனக் காணும் பொழுது வரவேற்புரையின் சொல் நயத்தால் வஞ்சி அவளை விட நாம் நெஞ்சம் சொக்கிப் போகின்றோம் அன்றோ!

# 13. தயரதன் சேய்!

சூர்ப்பணகை எவ்வளவோ சாகசங்கள் புரிந்தாள், இராமன் இசைவதாகத் தெரியவில்லை. வெகுண்டாள், அரிந்த உறுப்புக்களில் குருதி சோர, அரக்கர் குலக் காவலர்களாகிய கரன், தூடணன் ஆகியோர் இருக்கும் இடம் நாடிச் சென்றாள். இராம இலக்குவர் அவளுடைய அங்கங்களைக் கொய்தமை கூறிக் கதறினாள். அவர்களைத் தண்டிக்கத் தம்மவர்களை உசுப்பினாள்.

கரன் கொதித்து எழுந்தான். இராம இலக்குவரைக் கண்டு தண்டிக்கப் புறப்பட்டான். ஆனால் அவனைத் தடுத்து அவனுடைய பதினான்கு வீரர்கள் போரிடச் சென்றனர். அவர்களுக்கு, உடன் சென்ற சூர்ப்பணகை, இராமனை அடையாளம் காட்டினாள், அவர்கள் தன்னுடன் பொர வருவதைக் கண்ட இராமன், இளவலிடம் சீதையைக் காத்து நிற்கும்படிக் கூறிவிட்டு அவ்வரக்கப் போர் வீரரை நோக்கிச் சென்றான்; அனைவரையும் தரையில் வீழ்த்தினான். அதுகண்டு அஞ்சி அழுது கரனிடம் ஓடினாள் சூர்ப்பணகை.

மீண்டும் கரன் வெகுண்டு எழுந்தான், படையும் தேரும் வரப் பணித்தான். போர்ப் பறை கொட்டியது; நாற்படைகளும் புறப்பட்டன, தானைத் தலைவர்களும், சேனை வீரர்களும் வகை வகையான வலிய ஆயுதங்கள் ஏந்திச் சென்றனர். சினக் கொந்தளிப்பில் பறக்கும் அச் சேனையோடு கரன், இராமன் இருந்த இடத்தை அடைந்தான்.

இதனைக் கண்டு இலக்குவன் கொதித்து எழுந்தான். ஆனால், இராமன் அவனைத் தடுத்து நிறுத்தித் தானே

போருக்கு எழுதான்; இலக்குவன் மீண்டும் வேண்டியும், இராமன் இசையாது தானே சென்றான்.

போர் தொடங்கியது; கரனுடைய படைகள் அனைத்தும் இராமனின் பாணங்களுக்கு இலக்கு ஆகி அழிந்தன; அரக்க வீரர்கள் அங்கங்கள் அழிந்து பட்டு வீழ்ந்திருந்த காட்சி கோரமாய் இருந்தது. வீரரெல்லாம் மடிந்தமையால் படைத் தலைவர்களே நேரடியாக இராமனுடன் மோதினர்,

இந்தச் சூழ்நிலையில் இராமனின் வீர சாகசத்தைக் காட்ட வந்த கவிச் சக்கரவர்த்தி, அவனை.

''கலைகளின் பெருங் கடல் கடந்த கல்வியன்''

(2983)

எனக் குறிப்பிடுகின்றார். யுத்த களத்தில் இருப்பவனைப் பற்றி அவனுடைய வீராவேசம் பற்றிய வர்ணனை வருவதில் வியப்பு இல்லை; ஆனால், அவனின் கலை வல்லமை பற்றிக் கூறுவது ஏன்?

பால காண்டத்தில், தயரத குமாரர்களுக்கு வசிட்ட மா முனிவர் கல்வி கற்பிக்க அவர்கள் தேர்ந்ததை,

''சவுளமொடு உபநயம் விதிமுறை தருகுற்று,
'இ(வ்) அளவது' என ஒரு கரை பிறிது இலவா,
உவள் அரு மறையினோடு ஒழிவு அறு கலையும்,
தவள் மதி புனை அரன் நிகர் முனி தரவே,'' (303)

''யானையும், இரதமும், இவளியும், முதலா
ஏனைய பிறவும், அவ் இயல்பினில் அடையுற்று,
ஊன் உறுபடை பல சிலையொடு பயிலா,
வானவர் தனிமுதல், கிளையொடு வளர'' (304)

என்று பாடினார். அவ்வாறு, ஆய கலைகள் அனைத்தும் பயின்று தேர்ந்ததை வெளிக் காண வாய்ப்பே இல்லாது இருந்தது இதுவரை; இடையில் ஏற்பட்ட தாடகை

வதமோ, தனித்த ஒருத்தியை அம்பெய்து கொன்ற எளிய செயலே அன்றிப் போர்க் கலையம்சம் பொருந்தியது அன்று! மிதிலையில் மாபெரும் வில் ஒடித்ததோ, ஒடிந்த வில்லை ஒடித்த செய்கை என்று பரசுராமன் ஏளனம் செய்வதற்கு ஏது ஆகியது. என்றாலும், அதனை இராமன் ஒடித்த பாங்கு, தன் கலை முந்தியதால் அன்று, காதல் முந்தியதாலேயே; எனவே, இப்பொழுது பதினான்கு வீரர்கள், அதன் பின் படைவீரர் ஆயிரவர், தொடர்ந்து படைத் தலைவர்கள் என்று வரிசை வரிசையாக வந்தவர்களை இராமன் ஒருவனே எதிர்த்து நின்று போரிட்டான் என்பதால் அவ்வாறு அவன் வெற்றி காண உதவியது அவனுடைய போர்க் கலை வல்லமையே எனச் சுட்டிக் காட்டவே கம்பர், போர்க் களத்தில் இராமனின் கலை மேன்மையைக் குறிப்பிட்டுள்ளார். தன்னுடைய போர்க் கலையின் வலிமையை இராமன், தானே உணர்ந்து கொள்ளவும் இலக்குவன் மீண்டும் கேட்டும் அவனைத் தடுத்து நிறுத்தி இராமன் போர்க் களத்தில் புகுந்தான் எனவும் தெரிகிறது!

அப்படியானால், 'இலக்குவனுக்கு ஆற்றல் இல்லையோ?' என்ற ஐயம் எழும். அந்த ஐயம் போக்கவே தொடக்கத்திலேயே, 'கிளையொடு வளர' என உறுதிப் படுத்தினார், கம்பர், அவன் கொந்தளிப்பை, இராமனுக்கு பட்டாபிஷேகம் இல்லை என்ற சூழலில் படம் பிடித்துக் காட்டினார். அது மட்டுமல்ல; கரனுடைய வாளியைத் தடுத்த காட்சியில் இராமனைக் குறிப்பிட வந்தவர்,

''இலக்குவற்கு முன் வந்த இராமனும்'' *(3050)*

என்பார்; அதாவது, இலக்குவனின் வீரசாகசங்கள் பெரியன; அதனை யுத்த காண்டத்தில் காணப்போகின்றீர்கள்; அத்தகைய வீர இலக்குவனின் முன் பிறந்தோனாகிய இராமனும் கரனோடு புரிந்த போரில் வீர சாகசங்கள் காட்டினான் என்பதைக் கூறாமல் கூறுகின்றார்.

'இவ்வாறெல்லாம் போர் புரிந்த இராமன் வெற்றி கண்டது அவனுடைய வீரத்தால் மட்டும்தானா?' என்ற எண்ணம் கவிச் சக்கரவர்த்திக்குத் தோன்றியது. 'புலிக்குப் பிறந்தது பூனை யாகுமா!' என நினைந்தார்.

தயரதன்,

''ஏதில் மிடல் வீரமும்........................
.........முழுதும் இவற்கே பணி கேட்ப'' (169)

''..................................வாளால்
காய்ந்தே கடந்தான், பகை வேலை......'' (172)

'' 'எய்'என எழுபகை எங்கும் இன்மையால்,
மொய் பெறாத் தினவு உறு முழவுத் தோளினான்'' (179)

அதனால்,

''அறுபதினாயிரம் ஆண்டும் மாண்டு உற,
உறுபகை ஒடுக்கி, இவ் உலகை ஓம்பினேன்'' (182)

என்று வசிட்டரிடம் தானே கூறிப் பெருமிதம் கொண்டவன்.

ஆக, 'அத்தகைய மா வீரனுக்குப் பிறந்தவன் வென்றே நிற்பான் என்பதில் ஐயம் என்னே?' என்று வியப்பதைப் போல, தந்தையின் ஆற்றல் ஒலிக்க, தாடகையை இராமன் தலையிற்று வீழச் செய்ததைச் செப்பும் பொழுது,

''தம்பி தலை அற்றபடியும், தயரதன் சேய்
அம்பு படையைத் துணி படுத்ததும், அறிந்தான்'' (3036)

(கரன்) எனக் கவிச் சக்கரவர்த்தி பாடுகின்றார்.

இவ்வாறு பாடி விட்டவர் மற்றோர் உண்மையையும் இச் சூழலில் நமக்கு நினைவு படுத்த முற்படுகின்றார்!

மானி — மாவீரன், மாமன்னரின் மைந்தன் என்ற பார்வை மட்டும் இராமனைப் பற்றி நமக்குப் போதாது.

அவன் அவதார புருஷன் என்பதையும் உணர்த்தல் வேண்டும். இராமன் தானே அதனை அப்போதைக்கப் போது உணர்ந்தும் மறந்து, 'மானுடம் வென்றதம்மா!' என்று வியக்க வாழ்ந்தான் என்பதையும் குறிப்பாகக் காட்ட நினைந்தார்.

தூடணன் முதலிய அரக்கர் அனைவரும் அழிந்துபட்ட நிலையில் கரன் தனித்து இறுதியாகக் போர் புரிந்தான். அவனுடைய வீரம் எல்லையற்றது!

''முடிப்பென் இன்று, ஒரு மொய் கணையால்' எனா
தொடுத்து நின்று, உயர் தோள் உற வாங்கினான்;
பிடித்த திண் சிலை, பேர் அகல் வானிடை
இடிப்பின் ஓசைபட, கடிது இற்றதே'' *(3049)*

அவ்வாறு இராமனின் வில் இற்று வீழ்ந்ததும் தேவர்கள் நடுநடுங்கினர்! ஆனால், இராமன் வேறு ஆயுதம் தேடி எடுத்தானா? இல்லையே! பின் எப்படித் தொடர்ந்து போர் செய்து கரனை வீழ்த்தினான்?

அவனோ தேவர்களெல்லாம் தொண்டு செய்து நிற்கும் திருமாலின் அவதாரம் ஆயிற்றே! தன் ஆயுதம் வீழ்ந்ததும்,

''பின் உற்த் தன் பெரும் கரம் நீட்டினான்'' *(3051)*

''கண்டு நின்று, கருத்து உணர்ந்தான் என,
அண்டர் நாதன் தடக் கையில், அத் துணை,
பண்டு போர் மழுவாளியைப் பண்பினால்
கொண்ட வில்லை, வருணன் கொடுத்தனன்''
*(3052)*

எனக் கம்பர் காட்டுவார்.

ஆம்; தன் வில்லை — திருமாலுக்குரிய வில்லை — பரசுராமன் தன்னிடம் தோற்றபின் தந்து செல்ல, வருணனிடம் அதனைப் பாதுகாக்கக் கொடுத்த வில்லை— இராமன் கை நீட்ட, வருணன் தந்தனன் என்றால்

இராமனின் அவதார ரகசியம் வசிட்டருக்கு மட்டும் அன்று, சரபங்கர் முதலிய முனிவர்களுக்கு மட்டும் அன்று, கம்பருக்கு மட்டும் அன்று, அவனேயும் மிகமிகத் தேவை தோன்றும் பொழுது உணர்ந்து, மறந்தான் என்று உணர்வது தவறு இல்லை. ஆனால், 'இராமன்' தான் அவதாரம் என்பதை எப்பொழுதுமே உணர்ந்தவன் அல்லன் என்று முழுப் பூசுணக்காயைச் சோற்றில் மறைக்க முயல்வாரும் உளர்.

ஆக, இராமனைக் கவிச் சக்கரவர்த்தி கம்பர், மாவீரனாக, மாமன்னன் தயரதன் மைந்தனாக, அவதாரனாக ஆங்காங்கே ஏற்புடைய சொற்றொடர்களைக் கூட்டி விளக்குகின்றான் என்று அறியும் பொழுது அவருடைய கவிதா மேன்மை மிளிர்கின்றதன்றோ!

## 14. இருந்த மாரீசன்!

சூர்ப்பணகை இராவணனிடத்தில் சிதையின் அழகைப் பற்றி அங்கம் அங்கமாக வர்ணித்தாள். சீதை இப்பாரில் தோன்ற இந்தப் பூமி பாக்கியம் செய்திருக்க வேண்டும் என்றாள்; மென் மதுரக் குரல் உடையாள் என்றாள்; அவள் போல் ஆரணங்கு வேறு எவ்வுலகத்தும் இருக்க முடியாது என்றாள். இந்திரன் சசியைப் பெற்றுள்ளதைப் போல், சிவன் உமையவளை கொண்டது போல், திருமால் திருமகளை ஏற்றதுபோல், இராவணன் சீதையை அடைதல் ஏற்புடையது என்றாள். சீதை அங்கு வந்துவிட்டால், இராவணனுடைய அரண்மனையில் இருக்கும் பிற அழகிய மாதரெல்லாம் சீதையின் பின் நிற்க வேண்டி வரும் என்றாள். அன்னவளை அண்ணனுக்காகத் தூக்கி வர முயன்ற போதுதான் இலக்குவன் தனது உறுப்புகளை அரிந்துவிட்டான் என்றும் கூறினாள்.

அவள் அடுக்கிய வர்ணனைகளால் மதி மயங்கினான் இராவணன். சீதையின்பால் காமம் கொண்டான்; அக் காம நோய் படிப்படியாய் வெறியாக, உடலும் உள்ளமும் நொந்தான்; தன் காமத் துயர்களைப் போக்கிக் கொள்ள என்ன வகையெல்லாம் இராவணன் முயன்றான் என்பதை இயற்கையின் நியதிகளையே,ஏவல் கொண்டமையை,கவிச் சக்கரவர்த்தி எடுத்துரைப்பார்! இறுதியில் சீதையை அடையும் வகையை ஆலோசிக்கும் பொருட்டு அமைச்சர் களோடு பேசினான். ஆனாலும் நெஞ்சத் தெளிவு இன்றித் தன்னந்தனியாய் விமானத்தில் ஏறி மாரீசனைக் காணச் சென்றான். இதனைக் கம்பர்,

''வந்த மந்திரிகளோடு மாசு அற மனத்தின் எண்ணி,
சிந்தையில் நிறைந்த செய்யும் செய்கையின்
தெளிவு இல் நெஞ்சன்,
அந்தரம் செல்வது ஆண்டு ஓர் விமானத்தில்,
ஆரும் இன்றி,
இந்தியம் அடக்கி நின்ற மாரீசன் இருக்கை
சேர்ந்தான்'' (3236)

என்பார். இவ்வாறு பாடிய கவிச்சக்கரவர்த்தி அடுத்த பாடலிலேயே,

''இருந்த மாரீசன், அந்த இராவணன் எய்தலோடும்
பொருந்திய பயத்தன், சிந்தை பொருமுற்று
வெருவுகின்றான்,
கருந் தட மலை அன்னானை எதிர் கொண்டு
கடன்கள் யாவும்
திருந்திய செய்து, செவ்வித் திருமுகம் நோக்கிச்
செப்பும்'' (3237)

எனக் காட்டுகின்றார்.

'இருந்த மாரீசன்' என்று கூறியது ஏன்? இல்லாத மாரீசனையா சென்று அடைய முடியும்! 'இருந்த' என்ற பெயரெச்சம் தேவையற்றதா?

'அடடே! இராவணன் முன்னெச்சரிக்கை இல்லாமல் செல்கின்றானே, திடீரெனச் செல்கின்றானே, அதுவும் வேகமாக விமானத்தில் செல்கின்றானே, ஒரு வேளை மாரீசன் இல்லாமல் இருந்தால் என்ன செய்வான்?' என்று கம்பர் ஐயுற்றாரோ! அப்படி அவன் இல்லாமல் எங்கு சென்றுவிடப் போகின்றான்?

இதற்கு முந்தைய பாடலில் 'நின்ற மாரீசன்' என்று குறிப்பிட்டதற்கு இயைய அணி அழகு தோன்ற 'இருந்த மாரீசன்' என்று கொள்ளலும் ஒரு வகையில் இன்பம் பயப்பதே. அல்லது, அப்பாடலில், 'மாரீசன் இருக்கை சேர்ந்தான்' என்ற சொற்றொடர் வருவதால், அதற்கு ஏற்ப 'இருந்த' என்றது, 'இருக்கை, நிலையைத் தெளிவு படுத்தி வந்தது என்று கொண்டாலும், சொல் அழகு ஒரு வகையில் தோன்றும்!

முந்தைய பாடலை விடுத்து, இப்பாடலிலேயே பின் வரும், 'எதிர் கொண்டு, கடன்கள் யாவும் திருந்திய செய்து' என்ற சொற்றொடரால் மாரீசன் இராவணனைக் கண்டு செய்த மரியாதைகளை மேம்படுத்த வேண்டி, 'மாரீசன் இருந்தான்; அதாவது உட்கார்ந்திருந்தான்; இராவணன் வந்ததும் எழுந்து நின்று ஓடி ஆடிப் பணிவிடைகள் செய்தான்' என்ற பொருளில் அச்சொற்குப் பொருள் காண்டலும் ஏலும்.

இவையனைத்தும் மேலெழுந்த வாரியான நோக்கு. ஆனால், மாரீசன் என்றதுமே கம்பருக்குப் பழைய நினைவு வந்துவிட்டது!

விசுவாமித்திர முனிவருடன், இராம இலக்குவர் வேள்வி காக்கச் சென்றனர். வேள்வி செய்வதற்கு ஏற்ற இடம் நாடி முனிவர் வேள்வியைத் தொடங்கினார். "தீய அரக்கர்கள் எப்பொழுது வருவார்கள்?" என இராமன் கேட்டான். கேட்ட அக்கணமே அரக்கர் ஆர்ப்பரித்து அங்கு வந்தனர்! அட்டகாசங்கள் பல செய்தனர்.

அரக்கர்களை அழிக்க இளவல் துள்ளினான். அவர்களுடைய குருதி வேள்விச் சாலையில் வீழக் கூடாது என்பதற்காக இராமன் அச் சாலையின் மேல் சரக்கூடம் அமைத்தான். அதன்பின் அரக்கர்களை அழிக்கத் தொடங்கினர். ஆண்டுவந்த அரக்கர் தலைவர் இருவர்; அவருள் ஒருவன் தான் இந்த மாரீசன். மற்றவனான சுபாகுவை மட்டும் இராமன் அம்பால் கொன்றான்; ஆனால் மாரீசனைக் கொல்லாது, அவன் கடலில் ஓடி ஒளியும் வண்ணம் விட்டு இருந்தான்! அவ்வண்ணம் விடப்பட்டு உயிரோடு 'இருந்த' மாரீசனிடம் இராவணன் இப்பொழுது சென்றான் என்பதை மட்டுமல்ல, இனி அவன் இருக்கப் போவதில்லை; இராமனால் மடியப் போகின்றான் என்பதையும் மறைமுகமாகக் குறிக்கவே 'இருந்த மாரீசன்' எனக் கம்பர் பாடினார் என்பதே அச் சொற்றொடரின் ஆழ் பொருள்!

## 15. ஒரு நீ!

இராவணின் யோசனையைத் தவிர்க்க முடியாத கட்டாயத்தினால் மாரீசன் மாய (பொன்)மானாய் உருவெடுத்து சீதையின் இருப்பிடத்திற்கு எதிரில் அங்கும் இங்கும் துள்ளி விளையாடினான்.

மாற்று உயர்ந்த பொன்னால் ஆனது போன்ற பேரழகு மானைச் சீதை கண்டாள்; சூரிய ஒளியால் அது அழகுற மின்னியது; கை, கால், செவி முதலிய உறுப்புகள் மாணிக்கத்தால் ஆனவை போல் திகழ்ந்தன, பூவுலகில் இது போன்ற எழிலான மானைக் காண்பதே அரிது; அதனைத் தான் அடைய வேண்டும் என்று சீதை ஆசை மிகக் கொண்டாள். இராமனும் ஒப்பினான்.

'இதனுடைய அமைப்புகளைக் காணும் பொழுது இது ஏதோ மாயமாகத் தோன்றுகின்றது; இதனை விரும்புதல்

நன்று அன்று' என்றான் இலக்குவன். 'ஏன்? அது இயற்கையான மானாகவும் இருக்கலாமே!' என்றான், இராமன். இலக்குவன் ஒப்பவில்லை. இவ்வாறு இருவரும் அம்மானைப் பற்றிய மாறுபட்ட கருத்தால் உரையாடிக் கொண்டிருக்கும் பொழுதே, சீதை பிடிவாதமாக,

'நாயக! நீயே பற்றி நல்கலை போலும்?' (3303)

என்று, இராமனை அவனே அந்த மானைப் பிடித்துத் தர வேண்டுமெனவும் குறிப்பிட்டாள்.

மீண்டும், இளவல், 'அது மாய மான்; அரக்கனாகிய மாரீசனே அவ் வடிவில் வந்துள்ளான்' என்று உறுதியாக எடுத்துக் கூறினான். என்றாலும், இராமன், இலக்குவனைச் சீதைக்குக் காவலாக நிறுத்திவிட்டுமானைப் பிடிக்கச் சென்றான்.

அம்மான், இராமனை அங்குமிங்கும் நெடு நேரம் அலைக்கழித்து இறுதியில் நெடுந்தொலை தன் பின்னே அவன் வரும்படி ஓடியது. இராமனும் அதன் பின்னே ஓடி சீதை, இலக்குவன் பார்வையினின்றும் மறைந்தான். இறுதியில் மானின் மீது அம்பு தொடுத்தான்.

இராமனின் அம்பு பட்டதும் மானாய் வந்த மாரீசன் இறுதி சூழ்ச்சியாக உரத்த குரலில் இலக்குவனை இராமன் குரல் ஒலி கூட்டிக் கூவிய வண்ணம் வீழ்ந்து பட்டான்.

அப்பொழுதுதான், இராமன் தன் தம்பியின் மதி நுட்பத்தை உணர்ந்து மெச்சினான்; மானாய் வந்தவன் மாரீசனே என்பதை அறிந்தான். ''இவன் இளவல் பெயரிட்டு என் குரலில் கதறியதால் இலக்குவன் மயங்க மாட்டான்!' என்று கருதினான்; என்றாலும், பின் விளைவுகளுக்கு அஞ்சித் திரும்ப வேகமாகப் பர்ணசாலை நோக்கி நடந்தான்.

இதன் இடையில் இராமன் குரல் கேட்டு சீதை அஞ்சினாள்; அவனுக்கு ஆபத்து என்று நடுங்கினாள். இலக்குவன், 'அண்ணலுக்கு யாதும் நேராது; இது மாயம்' எனத் திடமனத்துடன் அங்கேயே நின்றிருந்தான் அவன் நின்றிருத்தலைக் கண்ட சீதை,

"குற்றம் வீந்த குணத்தின் எம் கோமகன்,
மற்று அவ்வாள் அரக்கன் புரி மாயையால்,
இற்று வீழ்ந்தனன் என்னவும், என் அயல்
நிற்றியோ, இளையோய்! ஒரு நீ? என்றாள்'.
(3324)

'நீ' என்பதுவே ஒருமையைத்தான் குறிக்கும். அப்படி யிருக்க 'ஒரு' என்ற எண்ணிக்கை அடைமொழி வந்தது ஏன்? இசை நிரப்ப வந்ததோ!

ஆம்; அச் சொல் கவிச்சக்கரவர்த்தி கம்பரின் இசையை — புகழை— ஆழ் பொருள் சொற்களை அவர் கையாளும் பான்மையை— நிரப்பவே வந்தது! அதனைச் சற்றே ஆய்வோம்.

உடன் பிறந்த தம்பியர் மூவராகியும் அண்ணலுடன் கானகம் வந்துள்ளவன் இலக்குவனாகிய ஒரு தம்பியே. அத் தம்பியும் தனயனின் தீனக் குரல் கேட்டும் அவன் இடம் நாடிச் செல்ல முற்படவில்லை. இதனைக் குறிப் பிட்டு, 'அண்ணலுடன் வந்துள்ள இளையன் நீ ஒருவனே. அவருக்கு ஆபத்து என்ற பொழுது துணைக்குச் செல்ல, மற்ற இரு தம்பியரும் இங்கு இல்லாத பொழுது நீ ஒரு வன்தானே ஓட வேண்டும். அதனை விடுத்து இன்னமும் என் அருகிலேயே நிற்கின்றாயா?' என்று சீதை வினவிய தாகக் கொள்வதா!

'ஒரு என்ற சொற்கு 'ஒப்பற்ற' என்ற பொருள் கொண்டு 'ஒப்பற்ற தம்பி' யாகிய நீ இன்னமும் சென்று அண்ணலைக் காவாமல் இங்கேயே நிற்கின்றாயா! என்று கேட்டதாகக் கொள்வதா!

இராம இலக்குவரின் இடையே வயதின் வேறுபாடு அதிகம் இல்லை; ஓரிரு நாள் இடைவெளியே ஆகும். எனவேஇராமனை மணந்த சீதைக்குஇலக்குவன் கொழுந்தனே ஆனாலும், வயதால் அவளினும் சிறியவன் ஆதல் ஆகாது. ஆகவே, இளவலை அவள் மரியாதை கூட்டிப் பேசுவதே பண்புடையது ஆகும். ஆனால், அவனுடன் அவள் பேசுவதையோ அல்லது அவனைப் பற்றி அவள் இராமன் உட்படப் பிறரிடம் குறிப்பிட்டுப் பேசுவதையோ நாம் இது வரை காணவில்லை. இதுவே நேரடிப் பேச்சின் முதல் கட்டம்!

இலக்குவனாகிலும் சீதையைக் குறிப்பிட்டு முன்னமேயே இராமனிடம் பேசியுள்ளான். அப்பொழுது அவன் அவளை ஏக வசனத்தில் குறிப்பிடாது அண்ணன் மனைவி என்ற மரியாதையோடே சொற்களைப் பெய்தான். விராதனுடன் இராமன் விளையாடி இருந்த பொழுது இளையவன்,

"தொழுது, தேவி துயர் கூர விளையாடல் தொழிலோ?"
(2556)

என்றான்.

இலக்குவன் சூர்ப்பணகையின் அங்கங்களைக் கொய்யும் அளவிற்கு அவள் என்ன செய்தாள் என்று இராமன் இளவலை வினவினான். அவன்,

"நாட்டம்தான் எரி உமிழ, நல்லாள்மேல்
பொல்லாதாள்
ஓட்டந்தாள்; அரிதின் இவள் உடன்று எழுந்தாள்"
(2852)

என உரைத்தான். இங்கும் இளவல் தன்னினும் இளைய வளாகிய சீதையைப் பெருமைப்படவே 'நல்லாள்' எனக் குறிக்கின்றான்.

எனவே, சீதையும் தன்னினும் மூத்தோனாகிய இலக்குவனை மரியாதைச் சொற்களைக் கையாண்டு உரையாற்றுதலே சிறப்பு உடையது. 'நீ' என ஏக வசனத்தில் குறிப்பிடுதல் குறையுடையதே ஆனால். அவளுக்கு அப்பொழுது இருந்த மனோ நிலை என்ன?

தான், மானைப் பெற ஆசை கொண்ட பொழுதே இலக்குவன் பல தடையுரைகளைப் புகன்றான். அதுவே அவளுக்கு மனக் கசப்பாய் இருந்தது. தன் கணவனான இராமனையே 'நீயே அம் மானைப் பிடித்துத் தர முடியாதோ?' என்று ஒருமை விளியால்– ஏக வசனத்தால்– கேட்டாள்' (பிறர் எதிரில் பேசும் பொழுது நீ என்பது மரியாதைச் சொல் அன்று என்பதை நோக்க வேண்டும்!)

இப்பொழுதோ, தன் கணவனின் ஓலம் கேட்டும் இலக்குவன், அண்ணலுக்கு ஏதும் ஆபத்து நேராது' என்று அவளுடைய கருத்துக்கு எதிராகப் பேசுகின்றான். அவளுக்கு எரிச்சல் உண்டாகிறது! அவனை ஏக வசனத்திலேயே திட்டிவிட உணர்வு உந்தியது. அதற்கு ஆதாரமாகத் தன்னினும் மூத்தோனை, தன் கணவன் குறிப்பிடுவதே போல் 'இளையோய்' என்றிட்டாள்; தன் 'அண்ணி' நிலையை நினைவுறுத்தினாள்! தொடர்ந்து நீ, 'ஒரு 'தம்பியா?,' ஒரு வீரனா,' 'ஒரு துணைவனா?,' ஒரு மைத்துனனா?' என்றெல்லாம் கேட்கத் துணிந்தாள் போலும்! ஆத்திரம் எப்படியோ சற்று அடங்க, மற்ற வினாக்களை விடுத்து, 'ஒரு நீ'?' என்று கேட்டு நிறுத்தினாள்! என்றாலும் பின்னும் ஆத்திரம் வர, சொல்லக் கூடாத சொற்களைப் பெய்து விட்டாள், இலக்குவன் பால். இவ்வாறெல்லாம் பல விதமாக நாம் சிந்தனை

செய்யும் வண்ணம் அந்த 'ஒரு' என்ற அடை மொழிச் சொல்லைக் கையாண்டுள்ள கம்பரை 'ஒரு'..... என்ன வென்று குறிப்பிட்டுப் பெருமிதம் கொள்வதோ!

"நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்
யாநலத்து உள்ளதூஉம் அன்று" (திரு. 641)

என்ற செந்நாப்போதாரின் நாநலம் பற்றியவர் அன்றோ நம் கவிச் சக்கரவர்த்தி!

## 16. கண்ணின் நோக்கினான்!

மாய மானாய் வந்த மாரீசன் இராமனை நெடுந் தொலை இழுத்துச் சென்றான்; இறுதியில் இராமன் அம்பு பட்டு மாயும் வேளையில் இராமனின் குரல் ஒலி கொண்டு இலக்குவனை உரத்த குரலில் விளித்தான். தன் கணவனுக்கு ஏதோ ஆபத்து என்று நினைந்து, சீதை இலக்குவனைத் தகாத சொற்கள் கூறிக் கட்டாயப் படுத்தி ஒலி கேட்ட இடத்திற்குத் துரத்தினாள்.

இராம இலக்குவர் இல்லாத அந்த நேரத்தில் இராவ ணன் மாறு வேடத்தில்- தவ முனிவராக- சீதையிருந்த இடத்திற்கு வந்தான். வந்தவன் கபட வேடதாரி என்று தெரியாமல் அவளும் அவனை 'வருக' என வரவேற்ற வண்ணம் எதிர் நின்றாள். அவ்வாறு நின்றவளான

"பொற்பினுக்கு அணியினை, புகழின் சேக்கையை,
கற்பினுக்கு அரசியை, கண்ணின் நோக்கினான்"
(3344)

என்பார் கவிச் சக்கரவர்த்தி.

'நோக்கினான்' என்றாலே 'ஆழப் பார்த்தான்' என்பது பொருள்; அங்ஙன் பார்ப்பதற்குக் கண்கள் தேவை என்பதுவும் தெளிவு. அப்படியிருக்கக் கம்பர் 'கண்ணின்' எனும் சொல் சேர்த்துப் பாடுவது ஏன்?

பின்னால், அனுமன் சீதையைத் தான் கண்டதை இராமனுக்குக் கூற வந்த காட்சியைக் கம்பர்,

''கண்டனென், கற்பினுக்கு அணியை, கண்களால்''
(6031)

என்று பாடுவார். 'கண்டனென் கண்களால்' என்று இணைத்துப் பார்த்தால் எளிமையான பொருளே கிடைக்கும். அதாவது 'கற்பிற் சிறந்த சீதையை நான் என் கண்களாலேயே கண்டேன்' என்று கூறியது போலாகும். ஆனால், கண்களால் காணாமல் வேறு எவ்வுறுப்புக் கொண்டு காண முடியும்? எனவே அதனுடைய சிறப்புப் பொருள் 'நான் சீதையைக் கண்டேன்; அவள் சீரிய கற்புடன் திகழ்கின்றாள் என்பதை அவளுடைய கண்களில் வீசும் மாசு மறுவற்ற ஒளியால் நான் அறிந்து கொண்டேன்!' என்று அனுமன் சொல்லுமுகத்தான். அவன் இராமனுக்குச் சீதை இருத்தலையும், அதுவும் அவளுடைய கற்பு அழியாமல் இருத்தலையும் உணர்த்தியதாக ஆகும் எனக் கொளலே சிறந்த பொருளாகும் என்பர் ஆன்றோர்.

அதுபோல, இராவணனும் சீதையின் கண்களின் மூலம் அவள் 'கற்பினுக்கு அரசி' என்று உய்த்து உணர்ந்தான்!' என்று பொருள் கொள்ளலாமா? அது ஏலாதே! ஏன்?

அவன் வஞ்சத்தால் வஞ்சியை வெளவிட வந்தவன் ஆயிற்றே! அவனுக்குக் கற்பைப் பற்றி எண்ண நேரம் ஏது? புத்தி ஏது? அப்படியென்றால், கம்பர் கண்ணின் என்ற சொல்லை இட்டது தேவையற்றதா? இல்லை

கவிச் சக்கரவர்த்தி நம்மை மீண்டும் சூர்ப்பணகை யின் சூழலுக்கு இழுத்துச் செல்கின்றார்! அவள் தன் அண்ணன் இராவணனிடம் சீதையின் அழகை அங்கம் அங்கமாக வர்ணிக்கிறாள்; அதனைக் கேட்டு அவன் சீதை பால் காமமயக்கம் ஆகின்றான்; அவளை அடைய வெறி கொள்கிறான்.

"புடை கொண்டு எழு கொங்கையும், அல்குலும்
புல்கி நிற்கும்.
இடை கண்டிலம்; அல்லது எல்லா உருவும்
தெரிந்தாம்;
விடம் நுங்கிய கண் உடையார் இவர்;
மெல்ல மெல்ல
மட மங்கையர் ஆய், என் மனத்தவர்
ஆயினாரே"
(3210)

"பண்டு ஏய் உலகு ஏழினும் உள்ள படைக்கணாரைக்
கண்டேன்; இவர் போல்வது ஓர் பெண் உருக்
கண்டிலேனால்;
உண்டே எனின், வேறு இனி, எங்கை உணர்த்திநின்ற
வண்டு ஏறு கோதை மடவாள் இவள் ஆகும்
அன்றோ"
(3211)

"பூண்டு இப்பிணியால் உறுகின்றது, தான்
பொறாதாள்,
தேடிக் கொடு வந்தனள்; செய்வது ஓர்
மாறும் உண்டோ?
காண்டற்கு இனியாள் உருக் கண்டவள்
கேட்கும் ஆற்றால்,
ஈண்டு, இப்பொழுதே, விரைந்து எங்கையைக்
கூவுக என்றான்."
(3212)

இவ்வாறாக சீதையின் உருவெளிப் பாட்டை இராவணன் தன் மனக்கண்களால் பிரமையாகக் கண்டான்.

சூர்ப்பணகையிடம், 'இவள்தான் நீ முன்னம் சொன்ன சீதையோ?' எனக் கேட்டான்! அவளோ, 'அந்த உருவமே இராமன்' எனத் தன் மனக்கண்ணில் பிரமையாகத் தோன்றியவனை உறுதிப்படுத்தினாள்! இருவருக்கும் வேறு வேறாய்- ஆண், பெண், பால் மாறி- தெரிகின்றதே என அறிந்த இராவணன்,

"பெண்பால் உரு, நான், இது கண்டது; பேதை!
நீ ஈண்டு,
எண்பாலும் இலாதது ஓர் ஆண் உரு என்றி;
என்னே?
கண்பால் உறும் மாயை கவற்றுதல் கற்ற நம்மை,
மண் பாலவரே கொல், விளைப்பவர் மாயை?"
என்றான்.
(3216)

இவ்வாறாக, 'சீதையின் உருவெளித் தோற்றத்தைக், கானல் நீர்போல் கருத்திற் கண்டு கொண்டிருந்த காமுகன், இராவணன் இப்பொழுது அவளை உண்மையாகத் தன் கண்களாலேயே கண்டுவிட்டான்; அவளைப் பேதலித்த பார்வையால் பார்க்கின்றான்!' என்று உறுதிப்படுத்திக் காட்டவே, கம்பர், 'கண்ணின் நோக்கினான்!' என்ற சொற்றொடரை இட்டு, நம்மைக் கருத்தின் நோக்க வைக்கின்றார்!

## 17. சுமத்திரை சேய்[1]

பஞ்சவடியில் பர்ணசாலையில் தனித்து இருந்த சீதையைக் காணவில்லை; இராம இலக்குவர் காட்டில் அவளைத் தேடி அலைந்தனர். வழியில் சடாயு அடி

பட்டு வீழ்ந்து குற்றுயிராய் இருப்பதைக் கண்டனர். அவர் வாயிலாகச் சீதை இராவணனால் ஆகாய விமானத்தில் கடத்திச் செல்லப்பட்டதை அறிந்தனர். உயிர் நீத்த சடாயுவின் ஈமக் கடன்களை முடித்துவிட்டு மீண்டும் சீதையைத் தேடிக் கானில் நடந்தனர்.

இருள் கவ்வியது. காட்டின் நடுவில் ஒரு மலையில் அவர்கள் தங்கினர். இராமன் தூக்கம் இன்றித் துயரால் நலிந்தான்; சீதையை நினைந்து நினைந்து வருந்தினான். இராமனுக்குத் தண்ணீர் தாகம் எடுத்தது. இலக்குவன் நீர் தேடிச் சென்றான்.

நீர் இருக்கும் இடம் தெரியாமல் அங்கும் இங்கும் இருளில் தேடித் திரிந்த இலக்குவனை அயோமுகிஎன்றும் அக்கானகத்து அரக்கி கண்டாள்; 'இவன் மன் மதனோ!' என்று தன்னுடைய கொடிய கண்களால் கண்டு அயிர்த்தாள்; 'காமம் தலைக்கு எறியது; இவனை என் காம நோய் தீர அணைத்துக் கொள்வேன்!' என மனம் கொண்டாள். 'ஒரு வேளை அவன் அதற்கு இசையவில்லையென்றால் அவனை அப்படியே தூக்கிச் சென்று என் குகையில் வைத்து சமாதானப்படுத்தி என் இச்சையைத் தீர்த்துக் கொள்வேன்' என்றும் துணிந்தாள்!

அவள் தீயினும் கொடியவள்; நெருப்பு போல மூச்சு விடுபவள்; மலையளவு யானைகளை மென்று தின்று அடக்கும் வயிற்றைப் பெற்றவள்; மலைப்பாம்பைக் கச்சையாகக் கட்டியுள்ள தனங்களை உடையவள்; குழி போன்று ஆழ்ந்த கண்களைக் கொண்டவள். சிங்சங்களையும், யாளிகளையும் பாம்பாகிய கயிற்றால் கட்டித் தன் கால் சிலம்புகளாக அணிந்துள்ளவள்; கொதிக்கின்ற சூரியனைப் போன்ற முகத்தை உடையவள்; குகை போன்ற வாய் படைத்தவள்; தன்னுடைய செந்நிற முடி விரிந்து பரந்த நிலையில் ஊழித்தீயின் உருவத்தை ஒத்து இருப்பவள்; இடியைப் போன்று ஒலியை எழுப்பும்

அளவிற்குப் பற்களைக் கடிப்பவள்; தரையே ஒடுங்கும் அளவிற்கு அதிர நடப்பவள்; பற்கல மிருகங்களையே தனக்கு ஆபரணங்களாகப் பூண்டிருப்பவள். இத்தகைய கொடூரமான உருவத்தைக் கொண்ட அந்த அயோமுகி சிங்கம் போல் திரிந்து நின்ற இலக்குவனின் முன்னால் நின்றாள்.

இவள் தாடகை போன்று, சூர்ப்பணகை போன்று ஓர் அரக்கியே ஆவாள் என இலக்குவன் நினைந்தான். என்றாலும் அவளையே நோக்கி, 'நீ யார்?' எனக் கேட்டான்.

அவளோ, நாணம் இன்றி, 'உன்பால் இச்சை கொண்டு வந்தவள். என் பெயர் அயோமுகி. யாரும் இதுவரை புல்லாத என் தனங்களை .நீ புல்லி என் காம நோய் தீர்க்க வேண்டும்' எனப் பதில் கூறினாள்.

இலக்குவன் சினந்தான்; மறுபடி. அவ்வாறெல்லாம் பேசி அங்கு நின்றால் அவளைத் தான் கொன்று விடுவதாகவும் அச்சுறுத்தினான். ஆனால், அவள் அவனை மேலும், மேலும் வற்புறுத்தினாள். அவன் தன் காம வேட்கையைத் தீர்த்தால், தான் அவர்களின் நீர் வேட்கை தீர கங்கை நீரே கொண்டு வந்து தருவதாகவும் ஆசை காட்டினாள்.

இந்தக் கடுமையான, கொடுமையான சூழ்நிலையில் இலக்குவனைக் கவிச் சக்கரவர்த்தி,

''சுமித்திரை சேய் அவள் சொன்ன சொல் அன்ன
கமித்திலன்; 'நின் இரு காதொடும் நாசி
துமிப்பதன் முன்பு அகல்' என்பது சொல்ல'',
(3597)

என்று 'சுமித்திரை சேய்' என அடையாளம் காட்டு கின்றார்! இது இடத்திற்கு ஏற்ற அடையாளமா? அவன்,

காமம் மிகுந்த அரக்கியிடம் அகப்பட்டுக் கொண்டிருக்கும் சூழ்நிலையில் அவனுடைய வீரமும் தீரமும் தானே கம்பர் கண்ணில் பட்டிருக்க வேண்டும்! தாடகையைக் கொன்ற தன் தமையனின் தகைமையும், சூர்ப்பணகையின் அங்கங்களை -குறிப்பாக அவளுடைய தனங்களைக் கொய்த அவன் ஆற்றலும் அன்றோ அவர் நினைவிற்கு வர அதற்குத் தகுந்த சொற்களைக் கொண்டு அல்லவா அவனைக் குறிப்பிட்டிருக்க வேண்டும்! அவன் அரக்கியைக் காணும் முன், கண்டு பேசும் முன், இலக்குவனை,

"சிங்கம் எனத் தமியன் திரிவானை" (3579)

"கன்று இருளில் திரி கோளரி கண்டான்" (3589)

என்றெல்லாம் கம்பர் காட்டுவது உண்மையே! என்றாலும், இப்பொழுது, அயோமுகியாம் வல்லரக்கிக் காட்சியில் அந்த மென் மகள் சுமித்திரையின் நினைவு வந்தது ஏன்?

'தாயைப் போல் பிள்ளை, நூலைப் போல சேலை என்பது தமிழ் நாட்டில் வழங்கும் ஒரு சீரிய பழமொழி அந்த அடிப்படையில் இலக்குவனின் அடிப்படைப் பண்பினை ஆய்ந்திடும் வாய்ப்பு இங்கு ஏற்பட்டுள்ளது'

கம்பர் காட்டும் உறவு முறைப்படி சுமித்திரை, தயரதனின் மூன்றாம் மனைவி; எனவே அவளே மற்றைய இரு பட்டத்து அரசியர்களைக் காட்டிலும் வயதில் சிறியவள்; இளவயது மங்கையர்க்கு இச்சை மிகுந்திருத்தலும், அதன் விளைவாய்த் தோன்றும் பிள்ளைகளுக்கும் – குறைந்தது காம இச்சையின் உச்சக் கட்டத்தில் பிறக்கும் மூத்த பிள்ளைக்காகிலும் அந்தக் காமச் சாயல் இருக்கக் கூடும் என்பதுவும் உலகியல் நோக்கு. (இதன் உண்மையை மகாத்மா காந்தி அவர்களே, அவருடைய மூத்த பிள்ளையின் தகாத

குணங்களைப் பற்றிப் பிறர்கேட்க, அவர், 'அது அவன் தவறு மட்டும் அல்ல; நாங்கள் காமவெறி அதிகம். கொண்டிருந்த பருவத்தில் தோன்றியவன்; எனவே, அப்பருவத்தின் விளைவுகள் அவன் குருதியில் அமைந்துள்ளது!' என்ற பாங்கில் அவர் இறுத்துள்ள விடையும் காட்டி நிற்கின்றது!)

ஆனால், சுமித்திரை எப்படிப்பட்டவள்? வேள்வியில் வந்த பிண்டத்தைத் தயரதன் மனைவியர் மூவர்க்கும் அளித்த காட்சியில், கவிச் சக்கரவர்த்தி,

''தூம மென் சுரி குழல் தொண்டைத் தூய வாய்க்
காமரு கோசலை கரத்தில்'' என்றும் (267)

''கைகயன் தனையைதன் கரத்தும்'' என்றும் (268)
மூத்த இரு மனைவியர்க்கு அடைமொழிகள்
அளித்தார். ஆனால், ''சுமித்திரைக்கு அளித்தனன்''
(269)

என்று அவளை மட்டும் சாதாரணமாகக் குறிப்பிட்டார்.

அடுத்த காட்சி, மிதிலை நோக்கி தயரத மா மன்னன் மனைவியர் மூவருடன் செல்லும் அழகு! அங்கே,

'' பொய்கை அம் கமலக் கானில் பொலிவது ஓர்
அன்னம் என்ன,
கைகயர் வேந்தன் பாவை'' போனாள் என்றும்,
(794)

'' வள்ளலைப் பயந்த நங்கை, வானவர் வணங்கப்
போனாள்.'' (796)

என்றும் மூத்த இருவரையும் முறை மாற்றிக் காட்டிய கம்பர் அவர்களுக்கு இடையில்,

" ........ ..... கொண்டலின் மின் இது என்ன,
இருவரைப் பயந்த நங்கை, யாழ்இசை முரலப்,
போனாள் "
(795)

என்று சுமித்திரையைக் சாட்டுவார்!

சுமித்திரை தோன்றும் மூன்றாவது சூழல் என்னே? இராமன் இலக்குவனோடு சுமித்திரையினிடம் விடை பெற அவளுடைய அரண்மனையை அணுகும் காட்சி! அவளைக் கம்பர்,

"சொல் மாண்புடை அன்னை சுமித்திரை" (1743)
எனப் புகழ்வார்.

அடுத்து, கங்கை யாற்றைப் படகில் கடக்கும் பொழுது பரதன் தாயாரைக் குகனுக்கு அறிமுகப் படுத்துகின்றான். அங்கே, கோசலையை,

" பெரியாள்" என்றும் (2366)

" கொடி" என்றும் (2367)

குறிப்பிடுவார். அடுத்து சுமித்திரையைக் குறிப்பிடும் பொழுது,

"'அறம் தானே என்கின்ற அயல் நின்றான் தனை
நோக்கி, 'ஐய'! அன்பின்
நிறைந்தாளை உரை 'என்ன' நெறி திறம்பாத்
தன் மெய்யை நிற்பது ஆக்கி
இறந்தான்தன் இளந் தேவி; யாவர்க்கும்
தொழுகுலம் ஆம் இராமன் பின்பு
பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான் தனைப்
பயந்த பெரியாள்' என்றான். (2369)

எனப் பாடுவார்.

இவ்வாறு 'இளந்தேவி' என்றும், 'பெரியாள்' என்றும் சுமித்திரையைப் படிப்படியாக உயர்த்திப் பேசும் கம்பர், சுமித்திரைப் பெரியாளைக் கோசலைப் பெரியாளோடு இணைந்தே வாழ்ந்த பாங்கினை அவர்கள் கோயிலுக்குச் சென்றுவரும் காட்சியொன்றாலும்,

" ......... ............................ தன்
துன்னு காதல் சுமித்திரையோடும் போய்,
மின்னும் நேமியன் மேவு இடம் மேவினாள்" (140 )

என்று அவளுடைய பக்தி மனப்பான்மையையும் படம் பிடித்துக் காட்டுவார்!

'அத்தகைய உத்தமிக்குப் பிறந்த பிள்ளை அங்கமெல்லாம் அசையக் காட்டி ஆவலைத் தூண்டிவிட்டு, வலிய ஒருத்தி வம்பிற்கு இழுத்து அணைக்க முயன்றாலும் தன் சிந்தை தடுமாறுவானா?' என்று கேட்கும் பாங்கில், அயோமுகியின் அட்டகாசக் காமக் காட்சி கண்டும் மயங்கினான் இலன் என்று உறுதிப்படுத்தி, 'சுமித்திரை சேய்' என இலக்குவனைக் குறிப்பிட்டுள்ளார்!

மேலும், அத்தகைய தாய் அவனிடம் கூறியது என்ன?

" ...... .., மகனே! இவன்பின் செல்; தம்பி
என்னும்படி அன்று, அடியாரினின் ஏவல் செய்தி '!
(1752)

என்று இராமனுடன் கானகத்திற்குச் செல்லவேண்டிய பாங்கை உரைத்தாள். அவ்வாறே அவனும் அண்ணலுக்கு ஓர் ஏவலாளனாகவே நடந்து கொண்டான்! ஏவலாளனுக்கு வேறு இச்சைகள் தோன்றக் கூடா; தோன்றா என்பதனையும் மறைபொருளாய்க் காட்டி விடுகின்றார், கவிச் சக்கரவர்த்தி, அந்த சுமித்திரை சேய் செய்கைகளின் வாயிலாக!

"ஈன்ற பொழுதின் பெரிது உவக்கும் தன் மகனைச்
சான்றோன் எனக் கேட்ட தாய்." (திரு 69)

என்று தகைமை காத்து வளர்ந்தவன் இலக்குவன் எனக் கண்டு மகிழ்கின்றோம்!

# 18. சனகன் மா மகள்!

சீதையைத் தேடி இராம இலக்குவர் காடு மேடெல்லாம் திரிந்தனர். ஒரு நாள் இராப் பொழுது இராமனுக்குத் தாகம் எடுத்தது, நீர் தேடிச் சென்றான், இலக்குவன் அவனைக் கண்டு மயங்கி, அயோமுகி என்னும் அரக்கி அவன் தன்னைக் கூடும்படிப் பலவந்தப் படுத்தினாள். இலக்குவன் இறுதியில் தப்பிப் பிழைத்து வந்தான், அவ்வரக்கியைத் தண்டித்து விட்டு. அதன்பின் வருண மந்திரம் ஜபித்து வானநீர் வர இருவரும் பருகி, ஒரு மலையில் தங்கினர்.

அந்த இரவில் சீதையின் பிரிவு ஆற்றாது இராமன் துயர் உற்று நொந்தான்: பல பலவாய்ப் புலம்பி நின்றான். அந்த இரவு அவனுக்கு நெடிதாய்த் தோன்றியது.

"மண்ணினும், வானினும், மற்றை மூன்றினும்,
எண்ணினும், பெரியது ஓர் இடர் வந்து எய்தினால்,
தண் நறுங் குழல் சனகன் மாமகள்
கண்ணினும், நெடியதோ, கொடிய கங்குலே?"
(36 39)

எனக் கவல்கின்றான்.

கங்குலைக் குறிக்கட்டும்; கொடிய கங்குலாய்க் கூறட்டும்; அதன் நெடுமை காட்டக் கண்ணினை ஒப்பிடட்டும்! அக் கண் 'தண் நறுங் கருங் குழல் சீதை யவள்தன்' கண்

என்று அடையாளம் காட்டினால் போதாதோ சனகன் மா மகள் என்று சீதையை ஏன் குறிப்பிட வேண்டும். மாற்றான் அவளைத் தூக்கிச் சென்று விட்டதால் அவள் பெயரைச் சொல்லவும் இராமனுக்கு உரிமை இல்லையோ!

அந்த உரிமை இராமனுக்கு வந்த வகையும்,— வில்லொடித்துச் சீதையை மணம் கொண்ட முறையும் — அதற்கு முன்னதாக அவளைச் சனகன் மகளாகக் கண்ட காட்சியும் அவனுடைய நினைவிற்கு வந்தன!

விசுவாமித்திர மா முனிவரைத் தொடர்ந்து இராம இலக்குவர் மிதிலை நகருக்குள் நுழைந்தனர். வழியில் கன்னி மாடத்தில் ஓர் இளம் பெண் நின்றிருந்தாள்.

''எண்ணி அரு நலத்தினாள் இளையள் நின்றுழி
கண்ணொடு கண் இணை கவ்வி, ஒன்றை ஒன்று
உண்ணவும், நிலை பெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்''
(514)

''பருகிய நோக்கு எனும் பாசத்தால் பிணித்து,
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்,
வரிசிலை அண்ணலும் வாள்—கண் நங்கையும்,
இருவரும் மாறிப் புக்கு, இதயம் எய்தினார்'' (516)

கவிச்சக்கரவர்த்தி இப்படம் பிடித்த பொழுது' அவன் தசரத குமாரன், அவள் 'சனகன் மகள்' தானே! இருளில் இல்லத்தாளை இழந்து நின்ற இராமனுக்குத் தன் காதல் நினைவு வந்தது! ஏக்கம் விஞ்சியது! அந்தக் காதல் கட்டத்தில் அவன் கண்ட அவளுடைய கரு நிறக் கண்கள் நினைவிற்கு வந்தன. அதனை நமக்கும் நினைவுறுத்தி நம்முடைய அனுதாபப் பார்வையை ஈர்க்கின்றான்; இராமன் அந்த இருளைச் சனகன் மகளாய் நின்ற சீதையின் கண்ணின் கருமைக்கு ஒப்பிட்டுக் காட்டி!

இராமன் சனகன் மகளின் கண் காட்டி நம்மை ஈர்க்கின்றானோ, இல்லையோ! கவிச்சக்கரவர்த்தி கம்பர் ஏற்புடைச் சொல் காட்டி நம்மை ஈர்க்கின்றார் என்பதில் ஐயமில்லை!

## 19. என் தாய், உன் தாய்!

வனத்தில் அயோமுகி என்னும் அரக்கியை அடக்கிய பின், இராம இலக்குவர் சீதையைத் தேடத் தொடர்ந்து புறப்பட்டனர். வழியில் கவந்தன் வனம் வந்தது.

கவந்தன் எனும் அரக்கன் தனது இருகைகளையும் நீட்டி இணைத்தால் அவ் வனம் முழுவதையும், அதனுள் அடங்கியுள்ள சராசரம் அனைத்தும் அக் கைவலைக்குள் அடங்கும். அங்கு இருந்த யானை முதல் எறும்பு ஈறான உயிர்கள் அனைத்தும் அவன் பிடியில் சிக்கித் திணறித் தவித்தன. இந்த நிலையைப் பார்த்து பரதவித்த வண்ணம் நடந்து கொண்டிருந்த இராம இலக்குவரும் அக் கைகளின் பிடிக்குள் அகப்பட்டுக் கொண்டனர்!

முதலில் அவர்கள் தாங்கள் நுழைந்த சூழலைத் தெரிந்து கொள்ளவில்லை. சற்று தொலை நடந்தபின் அரக்கனுடைய வாயின் அருகில் வந்தனர். அவ்வாய் கடலையும், பூமியையும் ஒரு சேர விழுங்கும் அளவின தாய் விரிந்து இருந்தது. இது வரையில் ஏதோ மதிலின் இடையில் இருப்பதாக எண்ணியிருந்தவர்கள் ஒரு மாபொரும் பூதத்தின் பிடிக்குள் அகப்பட்டுக் கொண்டிருப்பதை உணர்ந்தனர். இனி என்ன செய்வது என்று அறியாது தவித்தனர்!

அர்க்கனுடைய பிடியினின்றும் தப்பிப்பிழைக்க முடியாது என்று தெரிந்தும், இராமன், சீதையை நினைத்து

வருந்தியிருந்த மனோநிலையால் 'மனைவியைப் பிரிந்தேன்; தந்தையும் இறந்தார்; தம்பி துன்புறுகிறான்; நான் இன்னும் வாழ விரும்பவில்லை; எனவே நான் இப் பூதத்திற்கு இரையாகி விடுகின்றேன்; நீ தப்பிச் சென்றுவிடு' என்றான்.

உடனே இலக்குவன், 'நான் பின்தொடர வந்தும் இந்தத் துயர் எய்தியது என்றால் நான் இறவாமல் தப்பிச் செல்வதா? துன்பங்களைப் போக்குபவன் அன்றோ வீரன்; அது இயல வில்லை என்றால் தாய், தந்தை, தமையன் முதலானோர்க்கு முன்னேயே இறந்து படுதல் அல்லவோ சீரியது? தன் அண்ணனும், அண்ணியும் காட்டில் துயர்ப்பட இவன் உயிர் தப்பி வந்தவன் என்று ஏளனம் செய்து சிரிக்க மாட்டார்களா?என் தாய், உன் முன்னிலையிலேயே, காட்டிற்குப் புறப்படும் பொழுது இட்ட கட்டளையை எண்ணிப்பார்! 'கான் ஏகி இருவரும் திரும்பி வாருங்கள்; இடர்ப்பாடு ஏற்பட்டால் அண்ணனுக்கு முன் நீ செத்துமடி' என்று எனக்கு இட்ட அன்புக் கட்டளையை நான் நிறைவேற்றுவது அல்லவோ சத்தியம் காக்கும் வழி! என்றான்.

மேலும், தொடர்ந்து அவன்,

"என் பெற்றாளும், யானும், எனைத்து ஓர் வகையாலும்,
நின் பெற்றாட்கும், நிற்கும் நினைப்புப் பிழையாமல்,
நல் பொன் தோளாய்! நல்லவர் பேண நனி நிற்கும்
சொல் பெற்றால். மற்று ஆர் உயிர் பேணி, துறவே மால்" (3672)

என்றான்.

இப்பாடலில், 'என் பெற்றாள், நின் பெற்றாள்' என்று வரும் சொற்றொடர்கள் கேட்பதற்கே கொடுமையாக உள்ளதே!

"ஐயனும் இளவலும், அணி நில மகள் தன்
செய்தவம் உடைமைகள் தெரிதர, நதியும்,
மை தவழ் பொழில்களும், வாவியும், மருவி,
'நெய் குழல் உறும் இழை' என நிலை திரிவார்"
(306)

என்று கம்பர் பாடும் அளவிற்கு இராமனும் இலக்குவனும் இணை பிரியாது இளமையிலிருந்தே வளர்ந்தவர்கள் அல்லரோ!

விசுவாமித்திரர், தம் வேள்வியைக் காக்க இராமனைத் தரும்படித் தான் தசரதனிடம் வேண்டினார்; ஆனால், இலக்குவனையும் சேர்த்து அனுப்பிய அளவிற்கு இணை பிரியாது தயரதன் வளர்த்தானே!

விசுவாமித்திரர் இராமனுக்கு அளித்த படைக் கலங்கள்,

"மேவினம்; பிரிதல் ஆற்றேம்; வீர! நீ விதியின் எம்மை
ஏவின செய்து நிற்கும், இளையவன் போல" (396)

என்று பேசிய அளவிற்கு இணை உறவு கொண்டவர்கள் அல்லரோ!

'இராமனுக்கு மா. மன்னர் முடிசூட்ட முடிவு எடுத்துள்ளார்!' என்று தாதியர் கோசலை அன்னையிடம் தெரிவித்ததும்

"'சிறக்கும் செல்வம் மகற்கு' என சிந்தையில்
பிறக்கும் பேர் உவகைக் கடல்" (1403)

மூழ்கிய, அண்ணலின் அன்னை, பின்னர் இராமன்,

"......................நின் காதல் திரு மகன்,
பங்கம் இல் குணத்து எம்பி பரதனே, (1608)

துங்க மாமுடி சூடுகின்றான்."

என்று கூறிய பொழுது, அவள் செப்பிய கருத்துரையைக் கொண்டு, கம்பர்,

"............ ..................நால்வர்க்கும்

மறுஇல் அன்பினில், வேற்றுமை மாற்றினாள்" (1609)

என்று அவளைப் புகழ்ந்த அளவிற்கு அந்தத் தாய் மாறுபாடு அற்ற உள்ளத்தளாய் இருந்தவள் ஆயிற்றே!

நால்வர் என்ன! குகனை பரதன் அறிமுகப் படுத்தும் பொழுது,

"இன் துணைவன் இராகவற்கு; இலக்குவற்கும்
இளையவற்கும், எனக்கும், மூத்தான்" (2367)

என்று சகோதர பாசத்தோடு பகர்ந்தான்.
அது கேட்டு,

"........... ...... .........................இவன்
தன்னோடும் கலந்து நீவிர்,
ஐவீரும் ஒருவீர் ஆய், அகல் இடத்தை நெடுங்
காலம் அளித்திர்" (2368)

என்று பிறர் பிள்ளைக்கும் தான் தாய் என்ற உணர்வில் கோசலைத் தாய் கூறினாள்!

ஏன்? அன்னை கைகேயியே, கூனியால் தன் மனம் மாற்றப்படுவதற்கு முன், இராமனுக்கு மகுடாபிஷேகம் என்ற செய்தி கேட்டு,

"................................ மங்கை உள்ளமும்
ஆற்றல் சால் கோசலை அறிவும் ஒத்தவால்;
வேற்றுமை உற்றிலள்" (1457)

என்று கம்பரால் காட்டப் பெற்று, மக்களை மாறுபாடு இல்லாத நோக்கில் வளர்த்த தாயர் என அறிகின்றோமே!

இராம இலக்குவர் கானேகுமுன் சுமித்திரையின் பால் விடைபெறுவதற்குச் சென்ற பொழுது,

"கண்டாள், மகனும் மகனும் தன் கண்கள்
போல்வார்" (1744)

என்று சுமித்திரையிடம் மக்கள் தம்மில் மாறுபாடு காணாத தன்மையைக் காட்டி உள்ளாரே! மேலும், அவள்,

"......... ..... ......இரண்டு கன்று ஒரீஇ
வெருவரும் ஆவினின் தாயும் விம்மினாள் (1753)

என்று பாடிய அளவிற்கு பேதம் இன்றி இருவரையும் தன் மக்களாய்ப் பார்த்தாளே!

சுமித்திரையைக் குகனுக்கு அறிமுகப் படுத்திய பரதன்,

"................. ..... .....யாவர்க்கும்
தொழுகுலம் ஆம் இராமன் பின்பு
பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான் தனைப்
பயந்த பெரியாள்"

என்று இராம இலக்குவர் இணைப்பையும், அதனை வளர்த்த சுமித்திரையின் மாண்பையும் காட்டியுள்ளாரே.

இவ்வாறெல்லாம் இராம இலக்குவர் ஈருடல் ஓருயிராய் இருக்கக் கண்ட நமக்கு, இளவல்,

"என் தாய்–உன் தாய்' எனச் சுட்டிக் காட்டியது நம் மனத்தைச் சுருக் கெனத் தைக்கின்றதே! கவிச் சக்கரவர்த்தி, இலக்குவனை இவ்வாறு சொல்ல வைத்தது ஏன்? இது முறையா! ஏங்குகின்றோம்! ஏக்கம் போக்குகின்றார், கம்பர் அடுத்த பாடலிலே!

''ஓதுங்கால், அப் பல் பொருள் முற்றுற்று,
ஒருவாத
வேதம் சொல்லும் தேவரும் வீயும் கடை
வீயாய்;
மாதங்கம் தின்று உய்ந்து இவ் வனத்தின்
தலைவாழும்
பூதம் கொல்லப் பொன்றுதி என்னின்
பொருள் உண்டோ?'' (3673)

என்று இளவல், இராமனைக் கேட்கின்றான்.

வேறுவேறு தாயர் வயிற்றில் தோன்றிய காரணம் கொண்டு பிறப்பால் நாம் வேறுபட்டதைப் போல், இறப்பிலும் நமக்குள் மாறுபாடு உண்டு! நான் இறப்பது என்பது உண்மை—எனக்கு இறப்பு இல்லாது ஒழியாது; உனக்கோ இறப்பு என்பதே கிடையாது! ஊழிக் காலத்தும் அழியாத பரம் பொருள் ஆயிற்றே நீ! என்பதை உணர்த்துவதற்கு முன்பாகத் தன்னை அப்பரம் பொருளினிடத்து இருந்து பிரித்துக் காட்டவே இலக்குவன், 'நான், நீ' என்றும், 'என் தாய், உன் தாய்' என்றும் பிரிவினைச் சொற்களைக் கூட்டினான் எனச் சமாதானம் அடைகின்றோம்!

## 20. 'தீது இன்று இருந்தனை போலும்!'

காட்டில் கவந்தன் என்னும் பூதத்தின் பிடியில் சிக்கிய இராம இலக்குவர் அவனை எதிர்த்துப் போராடினர். இராமனின் அருட்கை அவன்மேல் பட்டதனால், அந்த அரக்கன் தன்னுடைய சாபம் நீங்கப் பெற்றான். இராமனைத் துதித்துப் போற்றினான்; தான் 'தனு' என்னும் பெயருடைய கந்தர்வன் எனவும், சாபத்தால் பூத உருவம் பெற்றதாகவும் வெளிப்படுத்தினான்; அடுத்த காட்டில்

வசிக்கும் சபரி என்னும் மூதாட்டியைச் சந்தித்து அவள் மூலம் சுக்ரீவன் இருக்கும் இடத்தைத் தெரிந்து கொண்டு அவனுடைய துணையோடு சீதையைத் தேடுவ தற்குச் செல்லும்படிக் கூறிவிட்டு விண்ணில் மறைந் தான்.

இராம இலக்குவர் மதங்க மாமுனிவர் இருந்து தவம் செய்யும் சோலைக்குள் வந்தனர். அங்கே அருந்தவம் செய்து கொண்டு இராமன் வரவிற்காகவே தன்னுயிரை வைத்துக் கொண்டிருந்த ஒரு மூதாட்டியைக் கண்டனர். அவள்தான் கவந்தன் குறிப்பிட்டுக் கூறிய சபரி என்பவள் என்பதை உணர்ந்தனர்.

அவளிடம் இராமன் பேசத் தொடங்கியவுடனேயே 'தீது இன்று இருந்தனை போலும்' என்று விசாரிக்கலாயி னான். எவருமே மற்றவரின் நலன் விசாரிக்கும் பொழுது 'நலமுடன் இருக்கின்றீர்களா?' என்பது போன்று உடன் பாட்டு முறையில் கேட்பதுதானே முறை; அதனை விடுத்து இராமன் அக்கிழவியினிடம் எதிர் மறைக் கேள் வியால் விசாரித்தது ஏன்? முன்னம், சூர்ப்பணகையைத் 'தீதுஇல் வரவு ஆகுக' என்று, 'நல் வரவு ஆகுக' என்ற உடன்பாட்டு முறையை விட்டு எதிர் மறைச் சொற்க ளால் அழைத்தது போல் அல்லவா இருக்கின்றது!

அந்த மூதாட்டியைப் பார்ப்பதற்கு முன் இராம இலக்குவர் இருவரும் கவந்தனிடம் பட்டபாட்டை நாம் அறிவோம். அத்தகையவன் அந்தக் கிழவியை விட்டு வைத்திருந்தது மட்டும் அல்ல; அவளை அணுகித் தங்களு டைய பிரயாணத்தை அவ்விருவரும் தொடர முடியும் என்றும் கூறினான். ஆகவே, 'கவந்தன்தான் உங்களைப் பற்றிக் கூறினான் என்பதனால் அவனுடைய கொடுமை யில்ருந்து நீங்கள் தப்பித்து இருந்தீர்கள் போலும்!' என்று அவளிடம் தாங்கள் வந்த வழிபற்றிக் குறிப்பிட்ட

நிலையில்தான் இந்த எதிர்மறைக் கேள்வியை இராமன் கேட்டான் எனத் தெளிகின்றோம்.

அதற்கு அந்த மூதாட்டி,

''மாண்டது என் மாயப் பாசம்; வந்தது வரம்பு
இல் காலம்
பூண்ட மா தவத்தின் செல்வம்; போயது பிறவி''
(3701

என்றாள். அவர்களுக்கு, தான் கடித்துப் பார்த்து தேர்ந்து எடுத்த எச்சில் பழங்களையே அவர்கள் உண்பதற்குத் தந்து விருந்து உபசரித்தாள். சுக்கிரீவன் இருக்கும் இரலை மலைக்கு வழி கூறினாள். இராமனின் அருள் பெற்று வீடு பேறு எய்தினாள். இவ்வாறாக சபரி, 'தீது இன்றி இருந்து இப்பொழுது 'நன்மை மிக்கு'ச் சென்றாள்!

## 21. நடந்தாள்!

சப்ரி காட்டிய வழியில், சுக்கிரீவன் இருந்த இரலை மலையை நோக்கி இராம இலக்குவர் நடந்தனர். வழியில் பம்பைப் பொய்கைக் கரையை அடைந்தார்கள். பொய்கையின் அழகில் ஆழ்ந்து, அங்கு ஓய்வு பெறத் தங்கினர். பொய்கையில் மலர்களின் வண்ணமும், மீன்களின் துள்ளலும் இராமனுடைய மனத்தில் சீதையின் மலர் முகத்தையும், மீன்களாம் கண்களையும் நினைவூட்டி அவனுடைய ஏக்கத்தைக் கிளறி விட்டன. அவளை நினைந்து புலம்பினான்.

'' வரி ஆர் மணிக் கால் வாளமே! மட அன்னங்காள்!
எனை நீங்கத்
தரியாள் நடந்தாள்; இல்லளேல் தளர்ந்த போதும்
தகவேயோ?

எரியா நின்ற ஆர் உயிருக்கு இரங்கினால், ஈது இசை
அன்றோ?
பிரியாது இருந்தேற்கு ஒரு மாற்றம் பேசின், பூசல்
பெரிது ஆமோ?"
(3731)

என்று அந்தப் பொய்கையில் இருந்த சக்கரவாளப் பறவைகள், அன்னப் பறவைகள் ஆகியவற்றைப் பார்த்துத் தனக்கு ஆறுதல் சொல்லக் கேட்கின்றான்.

இப்பாடலில் சீதை 'நடந்தாள்' என்றல்லவா கூறுகின்றான். பஞ்சவடியிலிருந்து அவள் நடந்தா சென்றாள்? அவ்வாறு நடந்து சென்றிருந்தால் இவ்வளவு தொலைதூரம் அண்ணன் தம்பியர், காடு மேடெல்லாம் திரிந்து தேடியும் அவளைக் கண்டு பிடித்திருக்க முடியாதா!

பர்ண சாலையோடு, சீதையைத் தொடாமல் இராவணன் எடுத்துச் சென்றான் என்பதைக் கம்பரே,

"கொண்டான் உயர் தேர்மிசை; கோல் வளையாள்
கண்டாள்; தனது ஆர் உயிர் கண்டிலளால்;
மண்தான் உறும் மின்னின் மயங்கினளால்;
விண்தான் வழியா எழுவான் விரைவான்" (3391)

என்று படம் பிடித்துள்ளாரே!

மேலும், கவிச் சக்கரவர்த்தி, இராவணனோடு எதிர்த்துப் போராடி சீதைக்கு அபயம் அளிக்கச் சென்றதை,

"பொன் நெடுங் குன்றம் வானில் வருவதே பொருவும்
மெய்யாது" (3403)

"பாழிவன் கிரிகள் எல்லாம் பறித்து, எழுந்து,
ஒன்றோடு ஒன்று
பூமியின் உதிர, விண்ணில் புடைத்து........" (3404)

" சாதைவன் தலையொடு மரமும் தாழ, மேல்
மேகமும் விண்ணினை மீச்செல்வ, 'மீ மிசை
மாக வெங்கலுழன் ஆம் வருகின்றான்' என,
நாகமும் படம் ஒளித்து ஒதுங்கி நையவே" (3405)

என்றெல்லாம் பாடி இராவணன் சீதையைத் தூக்கிக் கொண்டு பறந்து சென்றதாகவே படம் பிடித்துள்ளார் அடுத்து,

" வாங்கினன், தேரிடை வைத்த மண்ணொடும்,
வீங்கு தோள்மீக் கொடு, விண்ணின் ஏகினான். "
(3452)

என்றும்,

" விண்ணிடை வெய்யவன் ஏகும் வேகத்தால்,
கண்ணோடு மனம் அவை சுழன்ற கற்பினள்,
உள்நிறை உணர்வு அழிந்து ஒன்றும் ஓர்ந்திலள்;
மண்ணிடை, தன்னையும் மறந்து, சாம்பினாள். "
(3453)

என்றும், சீதை ஆகாயத்தில் பறந்து சென்றதாகத் தான் கம்பர் காட்டியுள்ளார்.

இப்படியெல்லாம் சீதை பறந்து சென்றதாகப் பாடிய கவிச் சக்கரவர்த்தி, இராமன் வாயிலாக, சீதை 'நடந்தாள்' எனக் கூறவைப்பது சரிதானா? இல்லையென்றால் காட்சிகள் முன்னுக்குப் பின் முரண் ஆனவையா? அல்ல!

கம்பரின் கண்களில் இராமனின் பார்வை புகுந்து விட்டது! பம்பைப் பொய்கைக் காட்சிக்கு முன், கோதாவரிக் கரையில்,

"ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன், உழையள் ஆகும்
சீதை தன் நடையை நோக்கி, சிறியது ஓர் முறுவல்
செய்த " (2367)

இராமன் பழைய நினைவு வரப்பெற்றான். அன்னமென் நடையாளின் அழகு நடை அவனை மயக்கியது!

"மண்ணின்மேல் அவன் தேர் சென்ற சுவடு எலாம் மாய்ந்து, விண்ணின் ஓங்கியது ஒரு நிலை"யைத் தாங்கள் கண்டதையும் மறந்தான். (3480).

இப்பொழுது இங்கு பம்பைப் பொய்கையில் அன்னங்கள் நடக்கும் எழில் வேறு அவனை நேரடியாக ஆட்கொண்டது! இதனை,

"............... ......................அன்னத்தின்
பெடையீர்! ஒன்றும் பேசீரோ? பிழையாதேற்குப்
பிழைத்தீரோ?
நடைநீர் அழியச் செய்தாரே நடு இலாதார்; நனி
அவரோடு
உடையீர் பகைதான்; உமை நோக்கி உவக்கின்
றேனை முனிவீரோ?" (3735)

என்று அவன் அன்னங்களைப் பார்த்துப் பரிதாபமாகக் கேட்டுப் புலம்புவதால் அறிகின்றோம்.

எனவே, சீதையின் எழிலிலே, அழகு நடையிலே, குதலை மொழியிலே மனம் ஆழ்ந்திருந்த இராமன் பறவைகளிடம் பேசும் பொழுது 'பறந்தாள்' என்பதற்கும் 'நடந்தாள்' என்பதற்கும் வேறுபாடு காணாமல் புலம்பினான், வாய்க்கு வந்த சொற்களைக் கையாண்டான்- என்று கொள்ளலாம்!

இனி, 'நடந்தாள்' என்பதற்கு 'நடந்து கொண்டாள், செயல்பட்டாள்' என்ற பொருளும் கொள்ளல் ஆகும். அப்பொருள் கொண்டு, 'ஓ பறவைகளே! என்னை எப்பொழுதும் பிரிந்திட மனமில்லாத என் மனைவியான சீதைதான் இப்பொழுது பிரிந்து சென்றுவிட்டாள்

நீங்களாவது அவள் அவ்வாறு நடந்து கொண்டுவிட்ட இந்த சமயத்தில், எனக்கு ஆறுதலாக என் அருகில் வரல் ஆகாதோ?' என்று கேட்டதாகவும் கருதலாம்!

ஆனால், இவை இரண்டினுக்கும் மேலான ஒரு நோக்கினைக் கம்பர் மேற்கொண்டுள்ளார்!

இராவணன் சீதையை ஆகாயத்தில் தூக்கிப் பறந்து சென்ற வேகத்தில் அவள் மயங்கி மண்ணின் மேல் வீழ்ந்தாள் என முன்னமேயே கம்பர் காட்டினார் அல்லவா? அவ்வாறு வீழ்ந்தவள் வீழ்ந்தவளாகவே இருக்க இராவணன் அவளை இலங்கைக்கு எடுத்து ஏகி அசோக வனத்தில் சிறை வைத்தான் என்று, நாம் கருதி விடுவோம் என்று நினைந்தார்! அவ்வாறு 'இல்லை; அவள் மெதுவாக மயக்கம் தெளிந்தாள்; தெளிந்தவள் என்ன செய்வது என்று தெரியாமல் அங்குமிங்கும் மெல்ல மெல்ல நடந்தாள்; எங்கே? அவளை எந்த மண் மேடையோடு இராவணன் தூக்கிச் சென்றானோ எந்த மண் மேடையில் அவள் மயங்கி வீழ்ந்தாளோ அதே பர்ணசாலை மண் மேடைப் பகுதியில் தான் நடந்தாள், நெஞ்சம், அலைமோதிய வண்ணம், ஆகாயத்தில் பறந்தபடியே!' என்கின்றார், கவிச் சக்கரவர்த்தி.

இது நமக்கு எப்படித் தெரிகின்றது?

இராம–சுக்கிரீவர் நட்பு ஏற்பட்ட பின் இருவரும் பேசிக் கொண்டிருந்தனர். அப்பொழுது சுக்கிரீவன் இராமனிடம் சில செய்திகளைக் கூறினான்.

" இவ் வழி யாம் இயைந்து இருந்தது. ஓர் இடை,
வெவ் வழி இராவணன் கொணர, மேலை நாள்,
செவ் வழி நோக்கி, நின் தேவியே கொலாம்,
கவ்வையின் அரற்றினள், கழிந்த சேண் உளாள்?
(3902)

"உழையரின் உணர்த்துவது உளது' என்று
உன்னியோ?
குழைபொரு கண்ணினாள் குறித்தது ஓர்ந்திலம்
மழை பொரு கண் இணை வாரியோடு தன்
இழை பொதிந்து இட்டனள்: யாங்கள் ஏற்றனம்."
(3903)

என்று சுக்கிரீவன் இராமனிடம் எடுத்துரைத்தான்; அவள் எறிந்து வீழ்த்திய நகைகளின் மூட்டையைக் காட்டினான்.

சீதை பறந்து வந்தது மிகுந்த தொலைவிலிருந்து என்று குறிப்புக் கூறுகின்றான்; அதே சமயத்தில் 'அவளுடைய கண்களில் வழிந்தோடிய அழுகை நீரும், நகை முடிச்சுடன் சேர ஒரு பொதியைக் கீழே இட்டாள்; அதை நாங்கள் கைகளில் ஏந்திக்கொண்டோம்' என்றும் சொல்கின்றான்.

சீதை மயக்க நிலையிலேயே இருந்திருந்தாலோ, மயக்கம் தெளிந்து, இருந்த இடத்திலேயே அமர்ந்திருந்திருந்தாலோ அவளால் கிட்கிந்தையில் இருந்தவர்களைக் கண்டிருக்க முடியாது.

ஆகவே கிட்கிந்தைப் பகுதிக்குள் நுழைவதற்கு முன்பே அவள் மயக்கம் தெளிந்தாள்: அங்குமிங்கும் ஆகாயத்தில் பறந்தபடியே பர்ணசாலை மண்ணின் பகுதியில் நடந்தாள்; மிகுந்த தொலைவில் வரும் பொழுதே வானரங்களைக் கண்டாள்; நகைகளைத் துணியில் கட்டி வைத்தாள்; வானரங்களுக்கு அருகில் நேர்மேலே பறக்கும் பொழுது அந்த மூட்டையை அழுத வண்ணமே வீசினாள்; அதனை அந்த வானரங்கள் கச்சிதமாகக் கைகளில் பிடிப்பதற்கு ஏதுவாக முன்னும் பின்னும் காலடி வைத்து எறிந்தாள் என்பதை நம்மால் உணர முடிகின்றது!

இந்தக் காட்சி—தான் பின்னர் வர்ணிக்கப்போகும் காட்சி—கவிச் சக்கரவர்த்தியின் கருத்தில் முந்துற அவர் அங்கு அவள் ஏற்ற செயலைக் கொண்டு 'நடந்தாள்' என்ற சொல்லைப் பெய்துவிட்டார் என அறிகின்றோம்!

## 22. 'கவ்வை இன்றாக நுங்கள் வரவு'

சபரி யன்னை கூறிய இரலை மலையை இராம இலக்குவர் அடைந்தனர். தொலைவில் நின்றும், சுக்கிரீவன் அவர்களைக் கண்டான்; வாலியினுடைய ஆட்களோ என்று அஞ்சி ஓடி மறைந்துகொண்டான்! அனுமனிடம் வந்தவர்கள் யாரோ எனத் தன் அச்சத்தை வெளிப்படுத்தினான்.

அனுமன், சுக்கிரீவனிடம் 'அஞ்சாதே' என்று கூறி விட்டு ஒரு பிரம்மச்சாரி வடிவம் கொண்டு, இராம இலக்குவர் இருந்த இடத்திற்கு அருகில் சென்று ஓரிடத்தில் மறைந்து நின்று அவர்களைக் கூர்ந்து கவனித்தான்.

இராம இலக்குவரைக் கண்டு 'இவர்கள், தேவர்களின் தலைவர்களான மும்மூர்த்திகளோ? என்று சந்தேகித்தான்; மூவராய் இல்லாமல் இருவராய் மட்டும் இருத்தலைக்கண்டு தேவரின் தலைவர்கள் அல்லர் என்று உணர்ந்தான்; என்றாலும், இவர்களுக்கு ஒப்பானவர்கள் யாரும் இல்லை; இவர்களுக்குக் கை கூடாத காரியம் எதுவும் இருக்க முடியாது; இவர்களின் நிலைமை என்ன என்பதை எவ்வாறு தெரிந்துகொள்வது? என்றெல்லாம் ஆலோசித்தான்.

பின்னர், 'இவர்களே தருமமும், தருமத்தின் தகைமையும் ஆவர்; கோபம் இல்லாதவர்கள்; கருணைக் கடல் போன்றவர்கள், இதமான தன்மையர்கள்; இந்திரனும் கண்டு அஞ்சக் கூடியவர்கள், தருமதேவனும் இவர்களின் ஒழுக்கம் கண்டு அஞ்சும் தகைமையர்; மன்மதன் கண்டு அஞ்சும் அழகுடையவர்கள்; எமனும் கண்டால் அஞ்சக் கூடிய வீரம் பொருந்தியவர்கள்' என்று பலவகையாக அவர்களைப்பற்றி எண்ணினான்.

அவர்களைக் கண்டு அன்பினால் தன் நெஞ்சு உருகுவதை உணர்ந்தான்; முன்பு ஒன்றாய் இருந்து இடையில் பிரிந்தவன் மீண்டும் அவர்களோடு சேர்ந்திடப் போகும் பாங்கில் மகிழ்ச்சியுற்றான். 'வன விலங்குகளும் தம் கொடுமை நீங்கி அவர்களைத் தொடர்கின்றன; பறவைகளும் அவர்களுக்குக் குடை பிடித்தாற் போல பறந்து வருகின்றன. மேகங்களோ நீர் தெளித்த வண்ணம் இயல்கின்றன. அவர்கள் திருவடி படிந்து வழியில் உள்ள பருக்கைக் கற்களும் பஞ்சினும் மென்மை பெறுகின்றன. வழியெல்லாம் மரம் செடி கொடிகள் இவர்களுக்குத் தலை வணங்குவ போலத் தாழ்கின்றன; இதனையெல்லாம் காணும் பொழுது தருமமே இவர்கள் உருவில் வந்ததோ! இவர்கள் நம்முடைய பிறவிப் பிணியை நீக்கி மோட்சம் அருள வந்த கடவுளர்களோ? இவர்களைக் கண்டு என் எலும்புகளும் உருகுகின்றனவே! அளவில்லாத பக்தி எனக்கு இவர்கள் பால் தோன்றுகின்றதே' என்றெல்லாம் பெருமிதம் கொண்டான், அனுமன்.

இப்படியெல்லாம் நினைத்து, நல் வழியிலேயே செல்லும் மனத்தை உடைய அனுமன் அந்த இராம இலக்குவர் எதிரில் சென்றான்; சென்று,

"கவ்வை இன்றாக நுங்கள் வரவு". (3764)

என அவர்களை வரவேற்றான், என்பார் கம்பர்

வந்தவர்கள் யார், எதற்கு வந்தனர் என்று தெரிந்து கொள்ளுவதற்குள் அவ்வாறு எதிர்மறைச் சொற் றொடர் கொண்டு ஏன் வரவேற்றான்? இராமன் சூர்ப்பணகையைத் 'தீதில் வரவு ஆகுக நின் வரவு, என்று எதிர்மறையால் அழைத்தானே, அந்தகைய நா இந்த வரவேற்பு!

அங்கு 'தீது + இலை' என்ற சொற் கூட்டு வந்தது' 'இல்' என்பது 'இல்லாத' என்றும், 'இல்லம்' என்றும் இரு பொருள் காட்டி விளையாடியது. இங்கோ, 'இன்று + ஆக' என்ற சொற் கூட்டு 'இன்றைக்கு ஆகுக' என்றும் 'இல்லாது போக' என்றும் இரு பொருள் கொண்டு நிற்கின்றது.

எனவே, 'கவ்வை அதாவது துன்பம் இன்றைக்கு ஆகுக' என்றும், 'துன்பம் இல்லாது போக' என்றும் பொருள் படுகின்றது. ஆம். இந்த இரு பொருளும் அவர்களுடைய தலைவனுக்குத் தேவையான சூழ்நிலை யிலானவையே யாகும்!

முதற் பொருளில் கண்டால், 'உங்கள் வரவால் எங்கள் தலைவனுக்கு, எதிரியான வாலிக்கு இன்று முதல் துன்பம் ஆகுக என்றாகின்றது. மற்றைய பொருளில் கண்டாலோ, 'உங்கள் வரவால் எங்கள் தலைவனுடைய துன்பம் இல்லாது போவதாக' என்ற நம்பிக்கை காட்டுவது ஆகின்றது. அதனால் தான் சுக்கிரீவனிடம் இராம இலக்குவர் வரவை. வாலியைக் கொல்ல எமன் வந்தான்' என்று இயம்பினான்!

மேற்குறிப்பிட்ட இரு பொருள்களோடு அல்லாமல் மூன்றாவதாக ஒன்றும் தோன்றுகின்றது! அது, 'உங்களுக்கு, எந்தத் துன்பமும் இன்றி, உங்கள் வரவு, அமைவதாக!' என்றும், 'உங்கள் வரவால் உங்கள் துன்பம் ஏதும் இருந்தால் இனி இல்லாது போவதாகுக' என்றும்

இராம இலக்குவர்க்குப் பொருந்தும்படியான பொருள் ஆகும்!

இப்பொருள் அமைவதற்கு ஆதாரம் இல்லாமல் இல்லை! இராம இலக்குவரை 'அவர்கள் யாரோ?' என அனுமன் உற்று நோக்கி இருந்த பொழுது,

" சிந்தையில் சிறிது துயர் சோர்வுற, தெருமரலின்
நொந்து அயர்த்தவர் அனையர்; நோஉறச் சிறியர்
அலர்; " (3756)

என்றும் அவன் எண்ணினான்.

ஆகவே, தான் அவ்வாறு நினைந்தது பொய்யாகும் வண்ணம் அவர்களுக்குத் தீது ஏதும் இல்லாமல் இருக்க வேண்டும் என ஆசைப்பட்டான். அப்படிக்கு அன்றி அவர்களுக்கு ஏதும் துன்பம் இருக்குமேயானாலும் தங்களுடைய துணையால் அது ஒழிந்துவிடும் என்ற உறுதியைக் குறிப்பிடவும் எண்ணினான். அதனை உறுதிப்படுத்துபவன் போலவே இராமன் இலக்குவனிடம்

" நல்லன நிமித்தம் பெற்றேம்; நம்பியை பெற்றேம்
நம்பால்
இல்லையே துன்பம் ஆனது; இன்பமும் எய்திற்று. "
(3784)

என்று கூறி அனுமனைப் பாராட்டினான்.

இத்துணை உட்பொருள்களையும் அடக்கி, சொல்லின் செல்வனாகிய அனுமன் விளித்தான் என்று காணும் பொழுது எதிர்மறைச் சொற்றொடர் பிழைபடுவதாய் இல்லாமல் இன்பம் பயக்கின்றது அன்றோ!

## 23. சொன்ன கவிக் குலத்து அரசன்'

இராம இலக்குவர் அனுமனை நோக்கி, 'நீயார்? என்று கேட்டனர். அவன், நான் 'வாயு மைந்தன். தாய் பெயர்

அஞ்சனை ஆகும். என்பெயர் அனுமன். இந்த மலையில் வாழ்ந்து வருகின்ற சூரிய குமாரனுடைய பணியாள்; உங்கள் வரவைக் கண்டு பூரிப்பும் துன்பமும் ஒரு சேர அமைய நீங்கள் யாரெனத் தெரிந்து வரச் சொன்னார்; வந்துள்ளேன், என்றெல்லாம் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறினான். அவனுடைய பேச்சின் திறமையைக்கண்டு இராமன் வியந்தான். 'சொல்லின் செல்வன்' என்று அனுமனை இலக்குவனிடம் குறிப்பிட்டுப் புகழ்ந்துரைத்தான்!

இராமன், அனுமனிடம்,

"எவ்வழி இருந்தான், சொன்ன கவிக்குலத்து அரசன்? யாங்கள்
அவ்வழி அவனைக் காணும் அருத்தியால் அணுக வந்தேம்;
இவ்வழி நின்னை உற்ற எமக்கு நீ இன்று சொன்ன
செவ்வழி உள்ளத்தோனைக் காட்டுதி, தெரிய"
என்றான்.
(3707)

இந்தப் பாடலில் 'சொன்ன' என்ற சொல்லைக் கம்பர் இரு முறை கையாண்டது ஏன்? சுக்கிரீவனைக் குறிப்பிட்டுப் பேசிய கவந்தன் நேரடியாக அவன் பெயரைக் கூறாமல்,

"கதிரவன் சிறுவன் ஆன கனகவாள் நிறத்தினானை"
(3697)

என்றுதான் குறிப்பிட்டான். அடுத்து இரலை மலைக்கு வழி சொன்ன சபரியும்,

"............................................................ வெய்ய
துனை பரித் தேரோன் மைந்தன்" (3704)

என்றே குறிப்பிட்டாள் இப்பொழுது அனுமனும்,

"இம்மலை இருந்து வாழும் எரி கதிர்ப்பரிதிச்
செல்வன்
செம்மல்... .." (3766)

என்றே கூறுகின்றான்!

ஆக, இம் மூவரும் குறிப்பிடும் வீரன் ஒருவனே தானோ? என்று சிந்தித்தான் இராமன். 'எங்களுக்கு முன்னமேயே இருவர் சொன்ன அந்த சூர்ய புத்திரனும் நீ இப்பொழுது சொன்ன சூர்ய புத்திரனும் ஒருவனே தானோ என்று நாங்கள் உணர்ந்து கொள்ளும் வகையில் உன்னுடைய தலைவனை எங்களுக்குக் காட்டுவாயாக' என்ற பொருள்பட, முதலில், 'சொன்ன' (கவந்தன் சபரி சொன்ன)என்று புகன்று பின்னர் தெளிவாக 'நீ சொன்ன' என்று புகன்று நின்றான் எனக் காண்கின்றோம்!

இவ்வாறு கவிச்சக்கரவர்த்தி சொன்ன சொல் பொருட் செறிவும் இன்பமும் அளிக்கக் கண்டு மகிழ் கின்றோமன்றோ!

## 24. நெடிது உவந்து அடியில் தாழ்ந்தான்!

இராம இலக்குவர் அனுமனை அவன் யார் எனக் கேட்டுத் தெரிந்து கொண்டனர். அவனுடைய தலைவனான சுக்கிரீவன் இருக்கும் இடம் எங்கே என்று கேட்டனர். வாலிக்கு அஞ்சி சுக்கிரீவன், தன்னோடு அந்த மலையில் தங்கி இருப்பதாகவும், அவனுக்கு அபயம் அளிக்க வந்ததைப் போலே அவர்களைப் புகழ்ந்தும் பேசினான். 'நீங்கள் யார் என்று எம் தலைவரிடம் புகல வேண்டும்?' என்று பணிவுடன் கேட்டான்.

இலக்குவன், தங்கள் வரலாற்றை எடுத்துரைத்தான்' இறுதியில்,

''அன்னவன் சிறுவனாம் இவ் .ஆண்தகை; அன்னை ஏவ
தன்னுடை உரிமைச் செல்வம் தம்பிக்குத் தகவின் நல்கி,
நல் நெடுங் கானம் சேர்ந்தான்; நாமமும் இராமன் என்பான்
இந் நெடுஞ் சிலைவலானுக்கு ஏவல் செய் அடி யென் யானே'' (3778)

''என்று, அவன் தோற்றம் ஆகி இராவணன் இழைத்த மாயப்
புன்தொழில் இறுதிஆக, புகுந்து உளபொருள்கள் எல்லாம்,
ஒன்றும் ஆண்டு ஒழிவுறாமல் உணர்த்தினன்,'' (3779)

இவ்வாறு இளவல் தங்கள் பிறப்பு, தாய் தந்தையர் சொல் காத்து நாட்டைப் பரதனுக்கு விட்டு விட்டு வந்தது முதல் வந்த இடத்தில் இராவணன் சூழ்ச்சியால் சீதையைக் கவர்ந்து செல்லப் படத் தாங்கள் அவளைத் தேடி அலைந்து கொண்டிருப்பது வரை எல்லாச் செய்திகளையும் ஒன்று விடாமல் கூறினான் என்று பாடிய கம்பர்,

'' ........ ...................... ............உணர்த்தக்கேட்டு
நின்ற அக்காலின் மைந்தன், நெடிது உவந்து,,
அடியில் தாழ்ந்தான் (3779)

என்று குறிப்பிடுகின்றார்!

இராமன் நாடிழந்ததால் அனுமன் மிகவும் மகிழ்ந்தானா! கானகத்தில் அல்லல் உற்றது கேட்டு மகிழ்ந்தானா! கொண்ட மனைவியை இழந்தான்

இராமன் என்ற செய்தியால் மகிழ்ந்தானா! அவனைத் தேடி அலைகின்றார்கள் என்பதை உணர்ந்து மகிழ்ந் தானா?

இதற்காக வெல்லாம் அனுமன் மிகவும் மகிழ்ந்திருந் தால் அவன் ஓர் அறிஞனா? மனிதாபிமானம் பொருந் தியவனா? பிறர் துயர்கண்டு வருந்தும் பிரம்மச்சாரியா? இராமன், அவனைப் பற்றி, இலக்குவனிடம்,

" ஆற்றலும், நிறைவும்: கல்வி அமைதியும், அறிவும்
என்னும்
வேற்றுமை இவனோடு இல்லையாம்" என்றும்,
(3767)

" 'இல்லாத உலகத்து எங்கும், இங்கு இவன் இசைகள்
கூரக்
கல்லாத கலையும், வேதக் 'கடலுமே' என்னும்
காட்சி
சொல்லாலே தோன்றிற்று அன்றே?" என்றும்
(3768)

புகழ்ந்து பாராட்டுவதற்கு உரியவனா? பின் ஏன் நெடிது உவந்தான்?

இராம இலக்குவரைக் கண்டதும் அவர்களைப்பற்றி அனுமன் என்னென்ன எண்ணினானோ அன்னவையே அவர்கள் வாயிலாகவும் தான் அறிந்தான். தன அனுமானங்கள் சரியென உணர்ந்த உணர்வினால் மகிழ்ந்தான்! ஆம், அவர்களைப்பற்றி,

"தருமமும் தகவும், இவர்; தனம் எனும் தனையர்
இவர்;
கருமமும் பிறிது ஓர் பொருள் கருதி அன்று; அது
கருதின்'

அரு மருந்து அனையது, இடை அழிவு வந்துளது;
அதனை
இரு மருங்கினும், நெடிது துருவுகின்றனர்,
இவர்கள்'' (3757)

என்று கருதினான் அல்லவா? அதனை உறுதிப்படுத்தியது போல் இலக்குவன் சொன்ன செய்திகள் அமைந்தன!

'இவர்கள் தர்ம நெறி காத்து—தாய் தந்தையர் இட்ட பணி சிரமேற் கொண்டு-கானகம் வந்தவர்கள்! அரச குமாரர்கள்! இவர்கள் இப்பொழுது தேடி வருவது இடையில் தாங்கள் இழந்த சீதையை!' என்பவையெல்லாம், அனுமன் அனுமானித்ததற்கு இயைய அமைந்துள்ளன அல்லவா! இதனால், முன் பகுதி கேட்டு வேண்டுமானால் சிறிது மகிழ்ந்திருக்கலாம்; பிற்பகுதி கேட்டு இரக்கம் அல்லவா தோன்றியிருக்க வேண்டும்! நெடிது மகிழ்ந்தது ஏன்?

தன் தலைவனான சுக்கிரீவன், அவனுடைய தமையனுக்கே அஞ்சி அஞ்சி வாழ்கின்ற கால கட்டத்தில், தன் தம்பிக்கே நாட்டை விட்டுக் கொடுத்து விட்டு பெற்றோர் சொல் காக்க வந்துள்ள தன்மையால் அகாரணமாகத் தன் தம்பியை விரட்டியடித்துக் கொண்டிருக்கும் வாலியைத் தண்டிக்க இராமன் தயங்க மாட்டான் என்ற எண்ணம் அனுமனுக்கு உறுதியாகியது! அதனால், மகிழ்ந்தான் என்று கொள்ளலாமே தவிர, 'நெடிது' மகிழ்ந்தான் என்பதற்கு இல்லை! ஏன்?

வாலியைத் தண்டிக்கும் பொழுது, வாலி மூத்தோன், சுக்கிரீவன் இளையோன் என்ற உண்மையால், இராமன் மனம் மாறி அவனுக்கு அறிவுரை கூறித் தம்பியின்மேல் இருந்த சினத்தை மட்டும் மாற்றி விட்டு ஆட்சியை வாலியிடமே விட்டுவிட்டால் என்ன செய்வது? நடுநிலை

வகிக்க வேண்டியவர்கள் செய்ய வேண்டிய நெறிமுறை யான நடவடிக்கை அதுதானே!

ஆனால், அனுமனுக்கு, இராமன் அவ்வாறு வாலியை விட்டு விடுதல் திருப்தி தராது! காரணம், தானும் தன்னைப் போன்ற மூத்த அமைச்சர்களும், சான்றோர்களும் 'சுக்கிரீவன் மேல் பிழை இல்லை; தங்கள் வற்புறுத்தலால்தான் அவன் மன்னனாய் அமர்ந் தான்; மீண்டும் ஆட்சியை வாலியே ஏற்றுக் கொள்ள லாம்' என்று அழுத்தம் திருத்தமாக எவ்வளவோ எடுத்துக் கூறியும் வாலி சுக்கிரீவனைத் துரத்தித் துரத்தி அடித்தான். வாலி செல்ல முடியாத சாபம் பெற்றிருந்த தால், ருஷ்ய முகப் பர்வதத்திற்குச் சென்று ஒளிந்து கொண்டிருப்பதால் அல்லவோ சுக்கிரீவன் உயிர் பிழைத் துள்ளான்! அண்ணன் தம்பியர் சச்சரவு எப்படியிருந் தாலும் நாட்டாட்சிக்கென அமர்த்தப்பட்ட அமைச்சர் கள் அந்த நாட்டிலேயே இருந்துகொண்டு நல்ல முடிவு களுக்காகப் பாடுபட்டு நற்பலனை எதிர்பார்த்திருக்க வேண்டும்; அல்லது, தம் பதவி நீங்கி ஒதுங்க வேண்டும். அதற்கு மாறாக அனுமன் என்னும் அறிவு சால் அமைச்சன், இந்நாளைய கட்சிமாறிகளைப் போல், அரசு பதவிக்கு உரிமை இல்லாத சுக்கிரீவனோடு அல்லவா சென்று விட்டான்! சுக்கிரீவனுக்கு ஆன்மீகத் துணைவன் என்ற நிலையில் இருந்திருந்தாலும் வாலி அனுமனைச்சினக்க மாட்டான்; அவனோ, இராமனிடம்

"இம் மலை இருந்து வாழும் எரிகதிர்ப் பரிதிச்
செல்வன்
செம்மலுக்கு ஏவல் செய்வேன்!" (3766)

என்று கூறும் அளவிற்குச் சுக்கிரீவனின் தொண்டனாக—அமைச்சனாக—அன்றோ பணியாற்றி வருகின்றான்!

ஒரு வேளை, தன் தம்பியை மன்னித்தாலும் வாலி தங்களையெல்லாம் மன்னிக்க மாட்டான் என்று

அனுமன் சந்தேகித்தானா? அது நியாயமான சந்தேகம் தானே!

'அறன் அறிந்து ஆன்று அமைந்த சொல்லான்எஞ் ஞான்றுந்
திறன் அறிந்தான் தேர்ச்சித் துணை' (திரு. 636)

என்று திருவள்ளுவப் பேராசான் காட்டிய அமைச்சு இலக்கணம் நிரம்பப் பெற்றவன் ஆயிற்றே, அனுமன்! அதனால், வாலி உயிர் போதல் வேண்டும் என்ற முடிவு கொண்டிருந்தான். இது காரணமாகவே, பின்னர், தன் பேச்சை முடிக்கும் பொழுது, இராமனை 'எம்கடவுள்!' என்று விளிக்கின்றான் (3852)

அதற்கேற்றாற்போல், இராமனின் மனைவியான சீதையை இராவணன் தூக்கிச் சென்றுவிட்டதால் அவன் சினம் கொண்டுள்ளான்; அதற்கு இணையான காரணம் ஒன்றினைக் கூறிவிட்டால் இராமன் வாலியை விட்டு வைக்க மாட்டான்; கொன்றே தீர்வான் என்று அனுமன் நிச்சயித்தான்.

அவன் கண்ணில், சுக்கிரீவனின் மனைவி ருமை அவனைப் பிரிந்திருக்கும் காட்சி தோன்றியது. அவள் எதனால் அவனைப் பிரிந்திருக்கின்றாள் என்ற உண்மை அடிப்படைக் காரணத்தை அவன் உணராமல் இருக்க முடியாது!

வாலி—தாரை, சுக்கிரீவன்—ருமை ஆகிய அண்ணன் தம்பியர் இரு தம்பதிகளும் கிட்கிந்தையில் ஒன்றாக வாழ்ந்து வந்தார்கள். அவ்வாறு வாழ்வது தான் குரங்குகளுக்கு இயற்கை என்பதை நாம் இன்றும் கண்கூடாகக் காண்கின்றோம்! அந்தச் சந்தர்ப்பத்தில் தான் தமையன், தம்பியைத் தவறாகப் புரிந்து கொண்டு வெறியாட்டம் ஆடி அவனைக் கொல்லவும் முயன்றான்; சுக்கிரீவன், வாலி வரமுடியாத மலையில் ஏறி விட்டால், போது

மென்ற பாங்கில் ஒளிந்து கொண்டான். தன் உடைமை கள் எதனைப்பற்றியும் கருதினானல்லன். ஆகவே, அவ னுடைய மனைவியான ருமை, வாலி—தாரையுடன் தொடர்ந்து வாழ்ந்து வரலாயினாள்.

தம்பியின் மேல் இருந்த மிகுந்த சீற்றத்தின் எல்லை யில்—அவனைத் தன் விரோதியாகவே முழுதும் பாவித்து நின்ற நிலையில் வாலி, ருமையை அழைத்துச் சென்று தம்பியினிடம் விடுவான் என்று எதிர்பார்க்க முடியாது. மேலும் அவள் தன் குடும்பத்திலேயே இருந்து வருவது அவனுக்கோ, அவனுடைய மனைவி தாரைக்கோ ஏதும் சுமை இல்லை. சுக்கிரீவனோடு சேர்ந்து கொள்வதற் காகச் சென்ற அனுமன் முதலாயினோர்கள் ருமையை ருஷ்ய முக பர்வதத்திற்கு அழைத்ததாகவோ, வாலி விட வில்லையென்றோ, ருமையே மறுத்துவிட்டாள் என்றோ சொல்வதற்கும் இடம் இல்லை.

இந்த, சூழ்நிலை காரணமான இயற்கைப் பிரிவை இராமனுக்குக் கோபம் மூட்டும் வகையில் எடுத்தியம்பி னால் அவன் வாலியைத் தீர்த்தே தீர்வான் என்று நினைந்தான், அனுமன்; தன்னையும் அறியாமல் நெடிது மகிழ்ந்தான்.

தான் கொண்ட கருத்தை அனுமன் செயல் படுத்தவும் செய்தான்! தன் மனைவியைப் பிரிந்திருந்தமை பற்றி சுக்கிரீவ்னே எங்கும், எப்பொழுதும், எவரிடமும் எடுத்துக் கூறியவனல்லன்; அவள் நடத்தையைப் பற்றிக் குறை காட்டியதும் இல்லை; தமையன் மேல் அபாண்டப் பழி சுமத்தியதும் இல்லை. சுக்கிரீவனுடன் இராமன் விருந்து உண்ணும் பொழுது,

“ பொருந்து நன் மனைக்கு உரிய பூவையைப்
பிரிந்துளாய் கொலோ நீயும் பின்” என்றான். (3820)

விருந்து அளிப்பதற்குப் பெண்கள் வராமையால், 'ஏன்' பரிமாறுவதற்குப் பெண்டிர் இல்லையோ?' என்று மட்டும் இராமன் கேட்டிருந்தால் போதும். சுக்கிரீவன் திருமணம் ஆனவனா இல்லையா என்பன போன்ற செய்திகளை இராமனுக்கு யாராலும் சொல்லப்படாத சமயத்தில் அவன், 'நீயும் உன் மனைவியைப் பிரிந்துள்ளாய் போலும்?' என்று ஏன் கேட்க வேண்டும்? அவனுக்கு அப்போதிருந்த துயர மனோ நிலையே அதற்குக் காரணம் என்று கூறுவதைப் போலே கம்பர்,

" விருந்தும் ஆகி, அம் மெய்ம்மை அன்பினோடு
இருந்து, நோக்கி, நொந்து, இறைவன், சிந்தியா"
(3820)

கேட்டான் எனப் படம் பிடித்துள்ளார்.

இராமனின் இந்த மனோ நிலையையும், அவனுடைய கேள்வியின் தன்மையையும் தனக்குச் சாதகமாகக் கொண்டு,

" உருமை என்று இவற்கு உரிய தாரம் ஆம்
அரு மருந்தையும், அவன் விரும்பினான்" (3852)

என்று கூறி வாலியின் பேரில் பிறன்மனை நயப்பு எனும் பிழையைப் புகுத்தி விட்டான்! இந்தச் சூழ்ச்சியைத் தெரிவிக்கும் கவிச் சக்கரவர்த்தியே, தம் கூற்றாக,

" .........'பரிவு இலன், ஒருவன் தன் இளையோன்
தாரம் வௌவினன்' என்ற சொல் தரிக்குமாறு உளதோ?"
(3854)

என்றுதான் நம்மைக் கேட்கின்றார்! அந்த செய்தி உண்மையானால் அவர்,

'...........' பரிவு இலன், ஒருவன் தன் இளையோன் தாரம் வௌவினன் எனும் 'செயல் தரிக்குமாறு உளதோ?' என்று தானே பாடியிருப்பார்!

ஆக, இந்த 'ருமை' சமாச்சாரமே அனுமனின் கற்பனைக் கதை. இதற்கு இடம் கிடைத்ததே என்றுதான், இலக்குவன் தங்கள் துயரங்களைக் கூறி முடித்த வேளையில், அதற்காக வருந்துவதை விட்டு 'நெடிது மகிழ்ந்தான்,' அனுமன் எனும் மதியூக மந்திரி!

## 25. தருமத்தின் தனிமை தீர்ப்பான்

'தருமத்தின் தனிமை தீர்ப்பான்' என்ற சொற்றொடருக்கு 'அறம் துணை இல்லாமல் தனித்து இருக்கும் நிலையை நீக்க வந்த அனுமன்' என்று சாதாரணமாகப் பொருள் கொள்கின்றோம். இந்த சொற்றொடரைக் கம்பர்

"மின் உருக்கொண்ட வில்லோர் வியப்புற, வேத
நல் நூல்
பின் உருக்கொண்டது என்னும் பெருமை ஆம்
பொருளும் நாடி,
பொன் உருக்கொண்ட மேரு, புயத்திற்கும் உவமை
போதாத்
தன் உருக் கொண்டு நின்றான், தருமத்தின் தனிமை
தீர்ப்பான்" (3781)

என்ற பாடலில் கையாளுகின்றார்.

இராம இலக்குவருடன் அனுமன் அறிமுகம் முடிந்தது. அவர்கள் அவனிடம் தங்கள் வரலாற்றினையும் ஒன்று விடாமல் கூறி விட்டனர். அதனைக் கேட்டவுடனேயே அனுமன் இராமனுடைய திருவடிகளில் தாழ்ந்து வணங்கினான்; அதுவரையில் அனுமன் தன் உருமாறி, பிரம்மச்சாரி வடிவில் இருந்ததால், தன்னை அவன் தொழுதது முறையா என்று கேட்டான். அப்பொழுது அனுமன் தானும் அரிக்குலத்து ஒருவனே; அதனால், இராமனைத் தான் தொழுது நின்றது சரியே என்று சொல்லும்

பாங்கில், தன் சுய உருவைக் காட்டிய சூழ்நிலையில் கவிச் சக்கரவர்த்தி மேற்குறித்த வண்ணம் பாடியுள்ளார். எனவே அத் தொடர்க்கு ஆழ்பொருள் ஒன்றிருக்க வேண்டும்!

'அறத்தின் துணை இல்லாமல் தனியாக இருக்கும் நிலை' என்ருல் 'யாருக்கு அந்த நிலை?' என்ற வினு எழுகின்றது. 'சுக்கிரீவனுக்கு' என்ருல், அவனுடன் அமைச்சனுகத் தானே அனுமன் அதுவரையும் இருந்து வருகின்ருன்; இப்பொழுது திடீரெனச் சிறப்பு என்ன வந்தது? எனவே அதுவன்று என்றாகின்றது!

'இராமனுக்கு' என்று கொண்டால், தானும் இராமனிடம் 'அரிக் குலத்து ஒருவன், என்று இப்பொழுது தானே அறிமுகம் ஆகியுள்ளான்! உடனேயே அந்த அடியானுக்கு இப்படி யொரு சிறப்பா? இல்லை!

தந்தை தயரதன் கூறியதாகத் தாய் கைகேயி சொன்ன உரை கேட்டு இராமன் கானகம் செல்லுவதற்கு முன், கோசலைத் தாயிடம் சென்றான். அவன் அங்கு செல்லும் காட்சியைக் காட்டும்பொழுது, கம்பர்,

'குழைக்கின்ற கவரிஇன்றி, கொற்றவெண்குடையும் இன்றி,
இழைக்கின்ற விதி முன் செல்ல, தருமம் பின்இரங்கிஏக,
.................................... .. .. ........ ... ...... ..... ...
.......................... .... ஒரு தமியன் சென்ருன்'' (1606)

என்று பாடினார்.

ஆனுல், காட்டிற்குள் செல்லச் செல்ல நிகழ்ந்த நிகழ்ச்சிகளால் — இறுதியாக இராவணன் சீதையை எடுத்துச் சென்று விட்ட நிகழ்ச்சி உட்பட-- இராமனே தர்மத்தின் உருவாய் மாற வேண்டியது ஆயிற்று! பிறருக்காகத் தர்மச் செயல்களைச் செய்து கொண்டே

சென்றவன் இப்பொழுது தனக்குத் தானே நல்லவை ஆற்றிக் கொள்ள வேண்டிய தர்மமாகவே மாறி விட்டான்.

அதனால் தான் அனுமன் இராம இலக்குவரை முதன் முதலிலேயே கண்டதும்,

" .......... இங்கு, இவர்களே தருமம் ஆவார்" என்று தருமத்தின் உருவாகவே கண்டான். (3762)

இவ்வாறு, இராம இலக்குவரையே தர்மத்தின் உருவாக, அனுமன் வாய் கொண்டு மாற்றிவிட்ட கவிச்சக் கரவர்த்தி அந்தத் தர்மத்தை—தர்மத்தின் இயக்கங்களை—செயல் படுத்துபவர் யார் என்று சிந்தித்தார்.

இனி, இராமனைச் சுக்கிரீவனுடன் நட்புக்கொள்ளச் செய்து, வாலியை வதம் செய்வித்து, நிற்கப் போவதும் அனுமனே; சீதையைத்தேடி இலங்கைக்குச் சென்று கண்டு பிடிப்பதும் அனுமனே; போர்முனையில் உயிர் போகக் கிடக்கும் இலக்குவன் முதலானோரைச் சஞ்சீவி பர்வதத்தைக் கொண்டுவந்து மறுபிறவி தரப் போவதும் அனுமனே; குறித்த நேரத்தில் தமையன் வராததால் நெருப்பில் விழப் போகும் பரதனைத் தடுத்துக் காக்கப் போவதும் அனுமனே!

இந்தக் காட்சிகளெல்லாம் கவிச் சக்கரவர்த்தியின் கண்முன் இப்பொழுதே தோன்றின. தர்மம் ஆகிய இராமன் தனித்துச் செயல்பட முடியாது; செயல்ஆற்றும் கருவியாய்—செயலாற்றுபவனாய் அனுமனே தொடரப் போகின்றான் என்பதைக் குறிப்பால் உணர்த்த தருமத்தின் தனிமை தீர்ப்பான்!என்ற சொற்றொடரைக் கம்பர் கையாண்டுள்ளார் என்பதை உணர்கின்றோம்!

## 26 கற்பு உடைய சிற்றவை

இராம இலக்குவருடைய வரலாற்றை இலக்குவன் கூற, அனுமன் அறிந்து கொண்டான்; அஞ்சி ஒதுங்கி

ஒளிந்து நிற்கும் தன் தலைவன் சுக்கிரீவனிடம் சென்றான்; இராம இலக்குவரைப் பற்றிய செய்திகளை யும் சிறப்புகளையும் எடுத்துரைக்கலானான்.

அப்பொழுது, அவர்கள் கானகத்திற்கு வந்ததற்குக் காரணம்,

" உளை வயப் புரவியான், உதவ உற்று, ஒரு
சொலால்,
அளவு இல் கற்பு உடைய சிற்றவை பணித்தருளால்,
வளையுடைப் புணரி சூழ் மகிதலத் திரு எலாம்
இளையவற்கு உதவி, இத்தலை எழுந்தருளினான்"
(·793)

என்று குறிப்பிட்டான்.

'சிற்றன்னை பணித்தாள்' என்றாலே போதும்; 'கற்பு உடைய', அதிலும், 'அளவு இல் கற்பு உடைய' என்ற அடைமொழி இட்டது ஏன்? இல்லற வாழ்வில் ஈடுபடாத இந்த அனுமனுக்குக் கற்பைப் பற்றிக் குறிப்பிட வேண்டிய எண்ணம் ஏன் வந்தது!

" தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்" (திரு 56)

என்றல்லவா செந்நாப்போதார் கற்புடைய பெண்ணின் இலக்கணத்தை வகுத்துள்ளார்! அந்தத் தன்மைக்கு ஏற்பக் கைகேயி நடந்து கொண்டாளா?

ஆம்; அவள் அவ்வாறே நடந்து கொண்டாள்! சம்பராசுரப் போரிலே கைகேயி தயரதனுக்குத் தேரோட்டிச் சென்றாள்; போர்ச் சூழலில் சாரதிப் பெண்ணாகிய தன்னை மட்டும் அவள் காத்துக் கொள்ள வில்லை; தேரின் அச்சாணி முறிந்ததால்: தன் கணவன் தயரதனுக்கு ஆபத்து வந்துற்றது என்ற உடனேயே தன் கை விரலையே அச்சாணியாக்கித் தாங்கி, அவனைப்

பேணிக்காத்து உயிர் தப்புவித்தாள். அப்பொழுது அவளுக்குத் தயரத மன்னன் தருவதாக வாக்களித்திருந்த சத்திய சொற்காத்து இருவரங்களைப் பெற்றாள்! அவ்வாறு அவள் பெற்ற வரங்களினால் அனைவரும் அவளைத் தூற்றினர்; பெற்ற மகனே அவளைப் 'பேய்' என்றான்; என்றாலும், அவள் சோர்வு அடையவில்லை; தான் பெற்ற வரங்களை மறுபரிசீலனைக்கு ஆளாக்கி மனம் மாறவுமில்லை. இதனால்தான்,

"அரக்கர் பாவமும், அல்லவர் இயற்றிய வதமும்
துரக்க, நல் அருள் துறந்தனள் தூமொழி மடமான்;
இரக்கம் இன்மை அன்றோ, இன்று, இவ் உலகங்கள் இராமன்
பரக்கும் தொல் புகழ் அமுதினைப் பருகுகின்றதுவே?"

என்று கம்பரே பாடினார்!

இனி, எவ்வளவு மன்றாடியும் தன் மனம் மாறாது பிடிவாதமாய்த் தான் கேட்ட வரங்களை வலியுறுத்தி நின்ற கைகேயியைப் பார்த்து, தயரதன் நெடுஞ்சினமுற்று,

"......................................................................
ஈந்தேன்! ஈந்தேன்! இவ் வரம்; என் சேய் வனம் ஆள,
மாய்ந்தே நான் போய் வான் உலகு ஆள்பவன்; வசை வெள்ளம்
நீந்தாய், நீந்தாய், நின் மகனோடும் நெடிது!"
(1538)

என்று கூறினானே அதனால், 'நின் மகன்' என்று பிரித்துக்காட்டினானே அக்காரணம் கொண்டு கைகேயியின் கற்பில் களங்கம் உண்டோ என்று சுக்கிரீவன் ஐயப்படக் கூடாது என்று நினைந்து அனுமன் அவ்வாறு கூறினானோ?

தன் மனைவி ருமை தன்னை விட்டுப் பிரிந்து தன்னை விரோதித்துக் கொண்டிருப்பவன் வீட்டிலேயே நிரந்தரமாகத் தங்கியிருக்கும் பொழுது, பெண்களின் கற்பைப் பற்றியெல்லாம் பேசினால், தன் தலைவனு டைய மனத்தைப் புண்படுத்தினாலும் படுத்தும் என்று சொல்லின் செல்வனுக்குத் தோன்றாதா?

எனவே, அந்தச் சூழ்நிலையில் அந்தச் சொற் றொடரை அனுமன் கையாண்டதற்கு வேறு ஏதேனும் உட்கருத்து இருக்கவேண்டும்! அது என்ன?

இராம இலக்குவரின் வரலாற்றை எடுத்துக் கூறும் முன்பே, அனுமன் சுக்கிரீவனிடம்,

"ஊழியர்; எளிதின் நிற்கு அரசு தந்து உதவுவார்" (3789)

என்று உறுதியாகக் கூறினான்.

'இது நடைபெறுமா?' என்று சுக்கிரீவன் சந்தேகப் படக்கூடும்! அவன் எப்பொழுதுமே எதற்குமே ஐயுறும் தன்மையன் என்பதை அனுமன் அறிவான். அதனால் தான், இராமனுடைய ஆற்றலிலேயே அவன் ஐயப்பட்டு மராமரங்களைத் துளைக்கும் சோதனைக்கு இராமனை ஆளாக்கினான் என்பதைப் பின்னர் காண்கின்றோம். ஆக, அனுமன், தான் சொன்னதை விளக்கிக் காட்ட முற்படுகின்றான்.

'கைகேயி ஒரு கற்புடைய பெண்; அளவில்லாத கற்புடையவள்; என்றாலும், கொண்ட கணவன் விருப் பத்திற்கு மாறாக வரங்களைக் கேட்டாள்; தன் மகன் பரதன் நாடாள வேண்டுமென்று அவள் கேட்டதைக் கூட தயரதன் திண்மையாக மறுக்கவில்லை; இராமன் காடு செல்வதை மட்டும் வலியுறுத்த வேண்டாம்

என்று அவன் கெஞ்சிக் கேட்டுக் கொண்டான். இந்த அடிப்படையை வைத்து இராமன், தான் காட்டிற்குச் செல்ல முடியாது என்று கூடக் கூறியிருக்கலாம். ஆனால் அவர்களோ,

"நீதியார் கருணையின் நெறியினார்; நெறிவயின்
பேதியா நிலைமையர்; எவரினும் பெருமையார்;"

(3790)

அதனால், ஒரு அளவு இல்லாத கற்புடைய சிற்றன்னையே சொல்லக் கூடாததைச் சொல்ல அவர்களும் அது தங்கள் 'ஊழ்' என்று அடங்கி வந்துள்ளனர்.

"நதியின் பிழை அன்று நறும்புனல் இன்மை; அற்றே,
பதியின் பிழை அன்று; பயந்து நமைப் புரந்தாள்
மதியின் பிழை அன்று; மகன் பிழை அன்று; மைந்த!
விதியின் பிழை; நீ இதற்கு என்னை வெகுண்டது?"

(1734)

என்று இராமன் தொடக்கத்திலேயே இலக்குவனிடம் கூறியவன் ஆயிற்றே! 'அத்தகையவன் உன் நிலையைப் புரிந்து கொண்டால் வாலியை அழித்தற்கோ அவனுடைய மகன் இருக்க உனக்கு மகுடம் சூட்டுவதற்கோ தயங்காது 'அது அவனுடைய விதி' என்று சொல்லிச் செய்கையில் இறங்குவான்!' என்பதை வலியுறுத்தவே, கைகேயின் அளவு இல்லாத கற்பு நிலையைக் காண்கின்றான், அனுமன் எனக் காண்கின்றோம்!

## 27. உன் கிளை எனது!

இராம இலக்குவரைப் பற்றி அனுமன் எடுத்துக் கூறியவை அனைத்தையும் சுக்கிரீவன் கேட்டுக் கொண்டான்; இராமனிடம் சென்றான். நேரில் அவர்களைக்

கண்டு திகைத்து நின்றான். இராமன் சுக்கிரீவனை வரவேற்றான். இருவரும் உரையாடலாயினர்.

இராமன், சவரி கூறியதற்கு இணங்க சுக்கிரீவனுடைய துணையை நாடி வந்திருப்பதாகக் கூறினான். உடனே சுக்கிரீவன்,

" முரணுடைத் தடக்கை ஓச்சி, முன்னவன், பின் வந்தேனை
இருள் நிலைப் புறத்தின் காறும், உலகு எங்கும், தொடர இக்குன்று
அரண் உடைத்து ஆகி உய்ந்தேன்; ஆர் உயிர் துறக்கலாற்றேன்;
சரண் உனைப் புகுந்தேன்; என்னைத் தாங்குதல் தருமம்" (3810)

என்றான் அதற்கு இராமன்.

" ......... ......... ......... ................................ ............
உன் தனக்கு உரிய இன்ப துன்பங்கள் உள்ள, முன் நாள்
சென்றன போக, மேல் வந்து உறுவன தீர்ப்பல்; அன்ன
நின்றன, எனக்கும் நிற்கும் நேர்" என மொழிந்ததோடு, (3811

" மற்று இனி உரைப்பது என்னே? வானிடை, மண்ணில், நின்னைச்
செற்றவர் என்னைச் செற்றார்; தீயரே எனினும் உன்னோடு
உற்றவர் எனக்கும் உற்றார்; உன் கிளை எனது; என் காதல்
சுற்றம், உன் சுற்றம்; நீ என் இன்உயிர்த் துணைவன்." (3812)

என்றெல்லாம் எடுத்துரைத்தான்.

துயரப்பட்டுள்ள இருவர், ஒருவருக்கொருவர் துணை ஒப்பந்தம் செய்து கொள்கையில், 'இனி நீயும் நானும் ஒன்று; உன்னுடைய விரோதி எனக்கும் விரோதி: எந்தத் துன்பம் வந்தாலும் நாம் ஒருவருக்கு ஒருவர் உதவி புரிந்து கொள்வோம். என்னுடைய ஆள், உன்னுடைய ஆள்' என்று பேசிக் கொள்வது உலகியல் முறையே. அந்த வண்ணம் இராமனும் எடுத்துரைத்தான்.

ஆனால், இராமன், 'உன் கிளை எனது' என்று கூறியது ஏன்? 'கிளை' என்றால் 'சார்ந்த நண்பர்கள்—ஆட்கள்' என்று கொண்டு, 'உன்னுடைய ஆட்கள் என்னுடைய ஆட்கள்' என்று உலகியல் வழக்கப்படி கூறினானோ. என்றால், இல்லை! ''கிளைக்கு முன்னமேயே 'உற்றார்' என்ற சொல்லால்'' சார்ந்தவரை-ஆட்களைக்—குறிப்பிட்டு விட்டான். மேலும் 'கிளை' என்ற சொல்லுக்குப் பின்னே, 'என் காதல் சுற்றம்,' 'உன் சுற்றம்' என்று இராமன் கூறியிருப்பதனால் உன் 'கிளை' எனது என்ற சொற்றொடர், 'உன்னுடைய சுற்றம்: என்னுடைய சுற்றம்' என்ற பொருளிலேயே வந்துள்ளது எனத் தெளிகின்றோம்.

அப்படி என்றால் சுக்கிரீவன், தான் வதைபடுவது தன் தமையனாலே என்று இராமனிடம் சொல்லியிருக்க இராமன் சொன்ன சூளுரை முன்னுக்குப் பின் முரணாகின்றது! முதலில், உன்னைப் பகைத்த வாலி எனக்கும் பகைவனே என்று கூறிவிட்டு, அடுத்த வரியிலேயே உன் சுற்றத்தினனான வாலி, எனக்கும் சுற்றத்தினனே என்று கூறுவதைப் போல் ஆகின்றது, அன்றோ? ஒருவனே உறவும் பகைமையும் கொள்ள முடியுமா? பகைமைத் தன்மையால், அனுமன் உறுதியாகக் கூறியது போல, இராமன் வாலியை அழித்து விட்டால் அந்த வாலி எப்படி இராமனுக்குச் சுற்றமாய்த் தொடர முடியும்?

வாலி அழிந்தாலும் அழியாவிட்டாலும் அவன் சுக்கிரீவ னின் சுற்றம் என்ற முறைமை மாறமுடியாது! ஆனால் வாலி வாழ்ந்திருந்தால் தானே அவனை இராமன் சுற்றம் ஆக்கிக் கொள்ள முடியும்!

இந்த இடர்ப்பாட்டைக் கவிச் சக்கரவர்த்தி உணர்ந் தார்! ஓர் அவதாரனுடைய வாயினின்றும் வரும் சொல் —அவன் தான் அவதாரன் என்பதை உணராத நிலையில் சொல்லியிருந்தாலும் கூட— உலகியலில் வெற்றுச் சொல் ஆவதா? ஆகக் கூடாது! என்று முடிவு செய்தார்.

வாலியும் சுக்கிரீவனும் நேருக்கு நேர் போர் செய் யும் பொழுது சுக்கிரீவனின் பகைவனான வாலியைத் தன் பகைவனாகக் கருதி அவனைத் தண்டிப்பதாகக் கூறி அனுப்பினான். ஆனால் சண்டை நடந்து கொண்டிருக் கும் பொழுது தான், உன்கிளை எனது என்று சொன்ன சொல் இராமனின் நினைவிற்கு வந்தது; சுற்றத்தைத் தண்டிப்பதா? என்று விட்டு விட்டான். சுக்கிரீவனையும் வாலியையும் ஒன்று போலத் தம்பியராய்க் கண்டான். ஆனால், சுக்கிரீவன் திரும்ப ஓடி வந்து 'வாலி என்னை இவ்வாறு வதைக்க விட்டு விட்டாயே, அவனை இன்ன மும் விட்டு வைத்துள்ளாயே! என்று கேட்கும் பாங்கில் வருந்திய சிந்தையோடு வாடி வதங்கி இராமனை வேண்டி நின்றான்.

அப்பொழுது இராமன் அவ்விருவரையும் வேற்று மையின்றித் தன் சுற்றமாய்ப் பாவித்திருந்த நிலைக்கு ஏற்ப,

"உள்ளம் குலைந்திடேல் உமை வேற்றுமை தெரிந் திலம்" என்று கூறினான்; கூறிய உடனேயே சுற்றத்துக் குச் (3995) சுற்றமே இந்த சூழ் நிலையிலும் மனம் மாறா மல் ஒருவரை ஒருவர் தண்டிக்கும் மனப் பாங்கில் இன்ன மும் இருக்கின்றனரே; நாமும் வாலியைத் தண்டிக்கும்

பகைமையைக் காட்டிக் கொள்ள வேண்டும் என்று அவனுடைய மனத்தில் பட்டது. அவர்கள் மனம் திருந்தி ஒன்றுபட முதல் சுற்றில் வாய்ப்புக் கொடுத்தான். அது நிறைவேறாதுபோக, அப்போதைக்கு ஒரு காரணம் கூறுவது போலே, 'உங்கள் உடல் கூறு உங்களுக்குள் வேற்றுமையைக் காட்டவில்லை' என்று சொல்வதாகப் பொருள் படும்படி, 'உமை வேற்றுமை தெரிந்திலம்' என்ற சொற்றொடரைப் பெய்தான். இனி, இருவருள் ஒருவர் தீர்ந்தேயாக வேண்டும் என்ற மனோ நிலையில் அவர்கள் இருந்ததால், சுக்கிரீவனிடம் 'உன்னை நான் அடையாளம் கண்டு கொள்வதற்கு வாய்ப்பாக,

"......... ........................................ ...... .. கொடிப்பூ மிலைந்து செல்க" என்று சொல்லி அனுப்பினான்! (3995)

மீண்டும் ஒருவருக்கு ஒருவர் நேராக மோதினர். சுக்கிரீவனை வாலி இரு கைகளாலும் தூக்கிய பொழுது வாலியின் மார்பில் இராமன் அம்பு எய்தான் வாலி வீழ்ந்து பட்டான்; துடித்துக் கொண்டிருந்தான். "உடன் பிறப்பு என்னும் பாசத்தால் பிணிப்புண்ட தம்பி சுக்கிரீவன், கண்ணீரும் கம்பலையுமாய் வாலியின்மீது வீழ்ந்து சோர்ந்தான்.

இந்தக் காட்சியைப் பாடியதும் கவிச் சக்கரவர்த்திக்கே வருத்தம் தோன்றிவிட்டது! வாலியையும் சுக்கிரீவனையும் ஒரு கிளையாக – தன் கிளையாகப் -- பார்த்த இராமன், அவர்களின் பிடிவாத மனப்போக்கால் சுக்கிரீவனுக்குப் பகை தனக்கும் பகை என்ற பாங்கில் தண்டித்து விட்டான். இப்பொழுது அவர்கள் இருவரும் பகைமை மாறிப் பாசத்தால் பிணைப்புண்டிருக்க, இராமன் தானும் வாலியின் பால் சுற்றம் பாராட்ட முடியாமல் பகைவனாகவே நிற்கின்றானே. இது அவன் முன்னம்

சுக்ரீவனிடம் சொன்ன சொல்லுக்கு முழுமையாய்ப் பொருந்தவில்லையே என்று ஏங்கினார்! அந்த ஏக்கத்தைத் தவிர்க்க, வாலி, இராமனை நோக்கி,

"ஏவு கூர் வாளியால் எய்து, நாய் அடியேன்
ஆவி போம் வேலைவாய், அறிவு தந்து அருளினாய்
மூவர் நீ! முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ!
பாவம் நீ! தருமம் நீ!" (4063)

என்று அடுக்கிக் கொண்டே போனவன், இறுதியில்

"........................................ பகையும் நீ! உறவும் நீ!'
என்று கூறி முடித்தான்.

"ஹே! இராமா! இந்தச் சூழ்நிலையில் நீ பகைவனாய்த் தனித்து நிற்கின்றதாகக் கவிச் சக்கரவர்த்தி ஏங்கி நிற்கின்றார்! இல்லவே இல்லை; நீ என் உறவாகவும் இப்பொழுது நிற்கின்றாய்!" என்று வாலியே இராமனைச் சுற்றமாக்கிப் பேசினான். அதனை உறுதிப்படுத்துவது போல், மீண்டும்,

"................................ ....................... .........
..............; மற்று, என் தம்பி நின் தம்பி ஆக
நினைதி;" (4071)என்று வேறு கேட்டுக் கொண்டான்!

ஆன்றோர் சொல்லின் வல்லமை என்னென்பேம், என்னென்பேம்!

## 28. கந்த வேள் வேல் செலாது!

இராம இலக்குவர் அனுமனுடன் சுக்ரீவனுடைய இருப்பிடத்திற்குச் சென்று விருந்துண்ண அமர்ந்தனர். அங்கு பெண்கள் இல்லாமையால், இராமன் சுக்ரீவனிடம் 'நீயும் உன் மனைவியைப் பிரிந்து இருக்கின்றாய் போலும்?' என்றான்.

உடனே அனுமன் முந்திக் கொண்டான்! இராமனைத் தொழுது நின்று, சுக்கிரீவனுடைய நிலையைப் பற்றி எடுத்துரைக்கலானான்.

வாலியினுடைய சிறப்புகளை எல்லாம் கூறினான். 'நாலு வேதங்களையும் நன்குணர்ந்தவன்; அவற்றிற்கு வேலி போல் அமைந்தவன். சிவபெருமானின் பேரருள் பெற்றவன்' என்று அவனுடைய ஆன்மீக வலிமையை விளக்கினான். அதன்பின் அவனுடைய ஆற்றலைப் பற்றித் தக்க சான்றுகளுடன் வர்ணித்தான்! முன்னைய நாளில் தேவர்களும் அசுரர்களும் எதிர் எதிராய் நின்று திருப்பாற் கடலில் மந்தர மலையை மத்தாக்கி, வாசுகிப் பாம்பைத் தாம்பாக்கிக் கடைந்தும் இயலாமற் போக தான் ஒருவனாகவே கடைந்து அமுதத்தை வெளிப்படுத்திய பேராற்றல் பெற்றவன்; நிலம், நீர், தீ, காற்று ஆகிய நான்கு அழிவற்ற பூதங்களின் வலிமையையும் ஒன்ருகத் திரட்டிய அளவு உடைய வல்லமை கொண்டவன்; மாபெரும் மலையினின்று, நெடுந்தொலைவில் உள்ள வேறு மலைக்குத் தாவும் சக்தி உடையவன்; தன்னை எதிர்த்துப் போரிடுபவர்கள் அவனுடைய பிடிக்குள் அகப்பட்டுக் கொண்டால் அவர்களுடைய வலிமையில் பாதி அவனைச் சார்ந்திடும் வரம் பெற்றுள்ளவன். அவனுடைய வேகத்துக்கு முன்னால் வாயுவே தோற்றுப்போவான்' என்றெல்லாம் வாலியின் வலிமையைப் பற்றி அனுமன் கூறிக்கொண்டே சென்றான். இடையில்,

"........................ சுந்த ரே ப
வேல் செலாது அவன் மார்பில்; வென்றியான்
வால் செலாத வாய் அலது, இராவணன்
கோல் செலாது; அவன் குடை செலாது அரோ "

என்றுரைத்தான். (3826)

தன் மனைவியைக் கவர்ந்து சென்றுள்ள இராவணனின் ஆற்றலுக்கும் விஞ்சிய ஆற்றல் உடையவன் வாலி என்பதை இராமன் உணர்ந்து கொள்ளும் வகையில், அனுமன், வாலியின் வால் சென்ற இடத்தில் இராவணனின் ஆட்சியும் வெற்றியும் செல்லாது என்று கூறியது சரியே. ஆனால், முருகனின் வேலும் வாலியின் மார்பில் பாய்ந்திடாது என்றது ஏன்?

குமரனின் வேற்படைக்குக் குறையா? இந்த இடத்தில் முருகன் எங்கே வந்தான்? காணாக் கடவுளை அனுமன் நினைந்தது ஏன்!

வாலி சிறந்த சிவபக்தன் என்பதனால், 'சூலிதன் அருள் துறையின் முற்றினான்' என்று தன் பேச்சின் தொடக்கத்திலேயே அனுமன் கூறிவிட்டான். இடையில், வாலி நாள்தோறும் எட்டுத் திக்குகளுக்கும் சென்று சிவபெருமானைத் தொழுபவன் என்றும் கூறிவிட்டான். அதனால், காரணமின்றிக் கந்தன் தன் வேலை வாலியின் மீது வீசிடமாட்டான்; எனவே. அவன் வேல் வாலியின் மார்பைப் பிளக்கும் சூழ்நிலை இல்லை.

இவ்வாறு, நடவாத ஒன்றைப்பற்றி, 'சொல்லின் செல்வன்' கூறக் கருதியது ஏன்?

"பல சொல்லக் காமுறுவர் மன்றமாசற்ற
சில சொல்லல் தேற்றா தவர்" (திரு 649)

என்று 'சொல் வன்மை' யின் இலக்கணம் இருக்க, வேண்டாதவற்றையா அனுமன் சொல்வான்?

'ஐயனே! வாலியை அடக்க வேண்டிய நிலை ஏற்பட்டிருந்தால், உன் மருகன்—முருகன்—ஒருவனால்தான் முடிந்திருக்கும்! அதற்கு அவசியம் ஏற்படவில்லை; மேலும், தன் தந்தையின் பேரருள் பெற்றுள்ளவனின்

மீதுதான் வேல் பாய்ச்சவும் மாட்டான்!' என்று இராம னிடம் கூற நினைந்தவன், அவ்வாறு குறிப்பிட்டான்.

"சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல் அச்சொல்லை
வெல்லும் சொல் இன்மை அறிந்து" (திரு 645)

என்ற அறிவுரை அவன் அறியாததா?

ஆனால், அங்கு வந்திருக்கும் இராமனுக்கு ஆறு முகன் 'மருமான்' என்பது எப்படிப் பொருந்தும் என ஐயம் தோன்றக்கூடும்! இராமனின் உருவில் வநதுள் ளவன் திருமாலே என்று அனுமன் முன்னமேயே உணர்ந்து கொண்டான். அஃதனைச் சுக்கிரீவனிடம், பின்னர் சுக்கிரீவன் இராமனின் ஆற்றலில் ஐயுறும் பொழுது வெளிப்படுத்துகின்றான்.

"சங்கு சக்கரக் குறி உள, தடக்கையில், தாளில்;
எங்கும் இத்தனை இலக்கணம் யாவர்க்கும் இல்லை;
செங்கண் விற்கரத்து இராமன், அத்திருநெடுமாலே
இங்கு உதித்தனன்; ஈண்டு அறம் நிறுத்துதற்கு".
(3859)

என்று அடையாளங்களை, எடுத்துக் காட்டி உறுதியாகக் கூறினான். மேலும், சிவபெருமானின் வில்லொடித்தல் திருமாலுக்கே அன்றி மற்று எவர்க்கும் ஆகாது; அவ் வில்லை இராமன் ஒடித்ததினால் அவனே திருமால் என்று ஒப்பற்ற சான்று காட்டி உறுதிப்படுத்தினான். அது மட்டுமா! 'என் தந்தை என்னிடத்தில் நீ உலகம் முழுவதும் ஈன்ற திருமாலுக்குப் பணிவிடை செய்யும் பேறு பெறுவாய்! அவனைக் கண்டதும் உன்னையும் அறியாமல் அவன் பால் உனக்கு பக்தி தோன்றும் என்றும் கூறினர்; இப்பொழுது இந்த இராமனைக் கண்டதும் அன்பினால் என் என்பே உருகுகின்றது;

அதனால், இவன் திருமாலே அன்றி வேறல்லன் என்று காரணம் காட்டி நின்றான்!

இதற்கு முன்பே தன் கருத்து சரிதானா என்பதை அனுமன் பரிசீலனையும் செய்து கொண்டான்!

முதலில் மருமகனான முருகனைப் பற்றிக் குறிப் பிட்டான். அடுத்து, திருமாலின் முன்னைய அவதாரங் களைப் பற்றிப் பேசினான். 'வாலி, பூமியைத் தன் கொம்பால் பெயர்த்து மேலே தூக்கிய வலிய திருமாலா கிய பன்றியும், கடலில் கிடந்த திருமாலாகிய பெரிய ஆமையும் சமமாகக் கொள்ளத் தக்கவல்லமை உடை யவன். இரணியனுடைய மார்பைப் பிளந்த நரசிம்ம அவதாரமும் இவனுடைய புய வலிமையை அடக்க முடியுமோ?' என்றெல்லாம் கூறி இராமனின் முகம் நோக்கினான்! இராமனுடைய முகத்தில் வாலி பற்றி மாறுபட்ட கருத்துத் தோன்றியதும், அனுமன் வாலி சுக்கிரீவன் பகைமையை வர்ணித்து, இராமன் வாலி யைக் கொன்று வீழ்த்துவதாகக் கூறும் அள்விற்குச் சினத்தை மூட்டிவிட்டான்!

## 29. இராவணன் கோல் செலாது!

இராம இலக்குவர் சுக்கிரீவனுடன் விருந்துண்ணச் சென்ற இடத்தில் வாலியின் பால் இராமனுக்குச் சீற்றத்தை உண்டாக்கும் வகையில் பேசுவதற்கு முன் பாக வாலியின் சிறப்புகளையும். அவனுடைய வலிமையை யும் விளக்குகின்றான். அனுமன் அப்பொழுது,

"..................................வென்றியான்
வால் செலாத வாய் அலது, இராவணன்
கோல் செலாது; அவன் குடை செலாது அரோ"
(3826)

அதாவது, வாலியின் ஆட்சி இல்லாத இடத்தில்தான் இராவணன் தன் வலிமையைக் காட்டி ஆள முடியும் என்பதாம்! அத்தகைய வலிமையான வால் இருந்ததால் தான் ஆதியில், இராவணனையே தன் வாலில் சுற்றி இழுத்த வண்ணம், மலை மலையாக வாலி தாவித் தாவிச் சென்று விளையாட்டுக் காட்டினான்! இராவணனின் இரத்தம் சிந்தச் சிந்த எல்லா உலகங்களையும் சுற்றி வந்தான்!

இந்த நிகழ்ச்சியைச் சுட்டிக் காட்டித்தான், இராவணன் வாலியின் நலம் விசாரித்த பொழுது அனுமன், 'அரக்கனே! அந்த வெம்மையான சினம் கொண்ட வாலி, இராமனின் அம்பு பட்டு இறந்து பட்டான்; அவனுடைய வாலும் ஒழிந்தது; அதனால் நீ பயப்படாதே, என்று கேலி செய்து பேசினான்!

அத்தகைய வலிமை கொண்ட வாலியைப் பகைத்துக் கொள்ள அஞ்சினான், இராவணன். தெய்வ சாட்சியாக நட்பைப் பூண்டான். இதனை,

"உந்தை என் துணைவன் அன்றே? ஓங்கு அறச்
சான்றும் உண்டால்" (6998)

என்று இராவணன், வாலியின் மைந்தன் அங்கதனிடம் கூறுகின்றான். எப்பொழுது? அந்த நட்பு ஒப்பந்தம் செய்து கொண்ட வாலி இறந்த பின்! அங்கதன், தன் தலைவன் சுக்கிரீவனின் தூதுவனாக இலங்கைக்குச் சென்ற பொழுது!

அதே சமயத்தில் இராவணன் மேலும் கூறுவான்:-

"நிந்தனை இதன் மேல் உண்டோ, நீ அவன் தூதன்
ஆதல்?
தந்தனென் நினைக்கு யானே வானரத் தலைமை; தாழ
வந்தனை; நன்று செய்தாய், என்னுடை மைந்த"
என்றான். (6998)

ஆம்; தனக்கும் வாலிக்கும் ஏற்பட்ட அக்னி சாட்சியான தொடர்பால் அவர்கள் இருவரும் தமையனும் தம்பியும் ஆன உறவு மனப்பான்மை கொண்டனர்; அம் முறைமையால், தந்தை இறந்து பட்ட தனயனுக்குத் தானே தந்தை நிலையில் நின்று, வானரத் தலைமையை அங்கதனுக்குத் தருவதாக உரைத்தான்'

இந்த உறவு முறை ஒன்றைத் தவிர இராவணனும் வாலியும் ஒருவர் மற்றவருடைய வியவகாரங்களில் தலையிட்டதாக ஒரு நிகழ்ச்சியும் கிடையாது! அதற்கு வாய்ப்பிருந்தும் இராவணன் வலிய வாலியினிடம் 'துணைக்கு வரவா?' என்று கேட்கவும் இல்லை. வாலியும் அவனைத் தன்னுடைய விஷயமாகத் தன் தம்பியைத் தண்டிக்க இராவணனை அழைக்கவும் இல்லை.

வாலியின் வால் செலாத இடத்தில் இராவணனின் வலிமை செல்லும் என்பதை முதலிலேயே குறிப்பிட்டுள்ளோம். அப்படியென்றால், சாபம் காரணமாக வாலி செல்ல முடியாத ருஷ்ய முக பர்வதத்திற்கு இராவணன் செல்ல முடியும் அல்லவா? செயல்களில் துணைநிற்கும் ஒப்பந்தம் இருந்திருந்தால், வாலி இராவணனை அம்மலைக்கு அனுப்பி, ஒளிந்து திரியும் சுக்கிரீவனை அப்பொழுதே அழித்திருக்க முடியாதா? இருவருக்குமே அந்த எண்ணம் கிடையாது!

மேலும் ஓரினத்திற்குள்—ஒரு குடும்பத்திற்குள்—நடைபெறும் சச்சரவுகளில் அன்னியரை வரவிடுவதும் வாலிக்குப் பிடிக்காத கொள்கை. அதே போல் இரு வேறுபட்ட இனங்களுக்குள்ளே சண்டை இருந்தால் அவ்விருவருக்குள்ளே அன்றி மூன்றாம் இனத்தவனை இடையிலே ஒறுத்தல் என்ற கொள்கையையும் அவன் வெறுப்பவன். அதனால் தான், வாலி இராமனிடம் வாதிட்ட பொழுது, 'அரக்க இனத்து இராவணனுக்கும்,

மனித இனத்து நினக்கும் இடையில் ஏற்பட்ட சச்சரவு காரணமாக, உங்கள் இருவரின் வேறுபட்ட குரங்கு இனத்து என்னைக் கொல்லலாமா? என்ற பொருள்பட— கருத்துப்பட—

" அரக்கர் ஓர் அழிவு செய்து கழிவரேல், அதற்கு
வேறு ஓர்
குரக்கு இனத்து அரசைக் கொல்ல, மனுநெறி
கூறிற்று உண்டோ?" (4021)

என்று இராமனையே கேட்கின்றான்!

அவ்வாறு பெருந்தன்மையுடன், சுக்கிரீவனை வாலி விட்டு வைத்திருந்ததால்தான் இராமன் அவனுடன் இணைந்தான். அவ்விணைப்பைத் தன் சொல் வன்மையால் பயன்படுத்திக்கொண்டான், அனுமன். இராமனைக் கொண்டு வாலியை வீழ்த்தச் செய்தான்!

இந்த சோக முடிவைத் தான் இராவணன் முதலில் அனுமனிடம், 'தம் முனைக் கொல்வித்து, அன்னாற் கொன்றவற்கு அன்பு சான்ற!' (5893) என்று குத்திக் காட்டி ஏளனம் செய்தான். பின்னர் அங்கதனிடம்,

" தாதையைக் கொன்றான் பின்னே தலை சுமந்து
இரு கை நாற்றி
பேதையன் என்ன வாழ்ந்தாய் என்பது ஓர் பிழையும்
தீர்ந்தாய்;" (6999)

என்று கூறி, தந்தையின் அநியாயமான சாவை நினைவு கூரச் செய்தான்!

'காட்டு வழிப்போகும் ஒரு மனிதன் முறை மாறி கிட்கிந்தை மகுடத்தை உன் சிற்றப்பா சுக்கிரீவனுக்குச் சூட்டி விட்டால் நாடு அவனுடையது ஆகுமோ? அது உன் அரசுதான்; அதனை மீட்டு மன்னனுக்கு மன்னன் தான் முடிசூட்டல் சிறப்பு என்ற பாங்கில், நானே

உனக்குச் சூட்டுவேன் என்று நினைவு படுத்துவதைப் போல,

“ அந் நரர் இன்று, நாளை அழிவதற்கு ஐயம் இல்லை’
உன் அரசு உனக்குத் தந்தேன்; ஆளுதி, ஊழி காலம்;
பொன் அரி சுமந்த பீடத்து, இமையவர் போற்றி
செய்ய,
மன்னவன் ஆக, யானே சூட்டுவென், மகுடம்’’
என்றான். (7000)

ஆக, வாலி உயிரோடு இருந்த வரை ஒருவருக்கு ஒருவர் துணை என்ற—அண்ணன் தம்பி உறவு என்ற—நிலையில் பழகிக் கொண்டனரே அன்றி ஒருவருக்கு ஒருவர் தன் வலிமைத் துணையைப் பரிமாறிக் கொள்ளவில்லை என்பது தெளிவு.

இதனை ஆழ்ந்து பார்த்துப் புரிந்து கொள்ளாமல் விதண்டாவாதம் செய்பவர்களும் உண்டு! இராவணனும் வாலியும் அக்னி சாட்சியாக நட்புப்பூண்டு கொண்டனர். எனவே, இராமன் இராவணனுடன் போருக்குச் சென்றால் வாலியும் இராவணனுக்குத் துணை வருவான்; அந்நிலை துன்பமானது ஆகும் என்று அங்கலாய்த்துக் கொள்வர்; மேலும், இராவண வதத்தில் இராமனுக்குத் துணை நிற்கவேண்டி இப் பூவுலகத்திற்கு வந்த இந்திரன் அந்த இராவணனுடனேயே உறவு கொண்டது சகிக்க முடியாதது! என்று வேறு கூறுவர்!

அந்தோ பாவம்!

“ எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும்
அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு’’ (திரு 423)

என்று திருவள்ளுவப் பெருந்தகை நம்மை எச்சரித்தும், நாம் செம்மறி ஆட்டு மந்தையாய்த் தான்

இன்னமும் இருக்கின்றோம்! இல்லையென்றால், மேலே குறிப்பிட்டுள்ள கூற்றுகளை ஒப்புவோமோ?

அந்த வாலி இராமனிடமே,

"அறை சழல் அலங்கல் வீரர் ஆயவர் புரிவது
ஆண்மைத்
துறை எனல் ஆயிற்று அன்றே? தொன்மையின்
நல்நூற்கு எல்லாம்
இறைவ! நீ, என்னைச் செய்தது ஈதுஎனில்,
'இலங்கை வேந்தன்
முறை அல செய்தான் என்று முனிதியோ? -- முனிவு
இலாதாய்!' (4024)

என்று துணிந்து கேட்டானே!

அதுபோல் ஒரு நிலை. மரியாதைக்கு உரியவர்கள் எது சொன்னாலும் அது சரியே ஆகிவிடுமா? நாமும் அதற்குத் தலை அசைக்க வேண்டுமா? வாலி, தான் இந்திரனின் அவதாரம் என்று எப்பொழுதாவது உணர்ந்திருந்தானா? அவன் இராவணனிடம் வலியவே சென்று துணைதேடிக் கொண்டானா? கொண்ட நட்பும் செயல் முறைத் துணையா? 'ஆம்' என்றால், ஏதாகிலும் ஒரு நிகழ்ச்சியையாவது காட்ட முடியுமா? தான் செல்ல முடியாத ருஷ்யமுகப் பர்வதத்திற்கு இராவணனை அனுப்பி சுக்கிரீவனை அப்பொழுதே தொலைத்திருக்க முடியாதா? அப்படி ஒழித்திருந்தால் இராமனுக்குச் சுக்கிரீவனின் தோழமை கிடைத் திருக்குமா? இறுதியில் வாலி, இராமனிடம்,

"..............................மற்று, என்தம்பி நின்தம்பிஆக
நினைதி; ஓர் துணைவர் இன்னோ அனையவர்
இலை: நீ ஈண்டுஅவ்
வனிதையை நாடிக் கோடி" (4071)

என்றுதான் கூறியிருக்க முடியுமா?

இத்துணையும் எண்ணிப் பாராது, வாலி—இராவண வதத்திற்கு இராமனுக்குத் துணையாக நிற்க வந்த இந்திரன்—இராவணனுடன் நட்புக் கொண்டது தவறு' அவன் கொல்லப்பட வேண்டியவனே!' என்றெல்லாம் தீர்ப்பு வழங்குவது எந்த நீதியின் பாற்படுமோ!

இப்படியெல்லாம் ஆளுக்கு ஏற்பத் தம் நோக்குரை வழங்குவாரை பண்டைய வரன் முறையால் கண்டு ஒப்புதல் ஏலாதாகி விடும் போல் இருக்கின்றதே என்ற கருத்தைக் கம்பர் அன்றே, தாரையின் வாயிலாகக் கழறி விட்டார். அவள் பெருமையாகத் தாங்கள் நினைத்திருந்த இராமனைப் பற்றி—வாலியைக் கொன்ற அநியாயத்தைக் குறித்து,

"அரு மைந்து அற்றம் அகற்றும் வில்லியன்,
ஒரு மைந்தற்கும் அடாதது உன்னினார்;
தருமம் பற்றிய தக்கவர்க்கு எலாம்,
கருமம் கட்டளை என்றல் கட்டதோ?" (4110)

என்று ஐயுற்று அழுகின்றாள்!

இராமனின் அருளாலேயே வானுக்கும் அப்பால் அடைந்தவனையும் நாம் விடாது இழுத்து வந்து மரண தண்டனை வழங்க வேண்டுமா?

## 30 குழை பொரு கண்ணினாள்!

சுக்கிரீவனுடன் இராமன் ஒரு சோலையில் தங்கி உரையாடலாயினான். அப்பொழுது சுக்கிரீவன் இராமனிடம்,

"இவ் வழி, யாம் இயைந்து இருந்தது ஓர் இடை,
வெவ் வழி இராவணன் கொணர, மேலை நாள்,
செவ் வழி நோக்கு, நின் தேவியே கொலாம்,
கவ்வையின் அரற்றினள், கழிந்த சேண் உளாள்?'
(902)

என்றான்.

'அன்றொரு நாள் நாங்கள் இங்கு இருந்த பொழுது இராவணன் ஆகாய வழிச் சென்றான். அவனுடைய வான ஊர்தியினின்றும் ஒருபெண் துயரத்தால் ஓலமிட்ட ஒலி கேட்டது; ஊர்தி நெடியதோர் உயரத்துச் சென்று கொண்டிருந்தால் அவ்வாறு கூச்சலிட்டு அழுதது யார் என எங்களால் அறிந்து கொள்ள முடியவில்லை; ஒரு வேளை உன்னுடைய மனைவிதானோ, என்னவோ?' என்று தெளிவில்லாது பேசிய சுக்கிரீவன் உடனே கூறுகின்றான்:—

''உழையரின் உணர்த்துவது உளது' என்று உன்னியோ?
குழை பொரு கண்ணினாள் குறித்தது ஓர்ந்திலம்;''
(3903)

தொலைவில் வானஊர்தியில் சென்றவள் யாரெனத் தங்களால் கண்டு கொள்ள முடிய வில்லை. என்று கூறியவன் உடனடியாக அவளுடைய கண்ணைப் பற்றி 'குழை என்னும் காதணியைச் சென்று தொடும் அளவிற்கு நெடிய கண்' என்று வர்ணிக்க எப்படி முடிந்தது? கற்பனையா? ஒரு பெண்ணைப் பற்றி அவளை இழந்து நொந்து போயிருக்கும் அவளுடைய கணவனிடமே கற்பனையாக அவள்தன் அங்கங்களை வர்ணித்தல் நியாயமா? தேவையா?

நாகரிகம் தெரிந்த கவிச் சக்கர வர்த்தி இவ்வாறான பழிக்கு இடம் கொடுப்பாரா? இதற்கு விடை வேறு எந்தச் சூழ்நிலையிலாவது பகர்வதற்குக் கூட அவர் காத்திருக்க வில்லை! அடுத்த வரிகளிலேயே,

''மழை பொரு கண் இணை வாரியோடு தன்
இழை பொதிந்து இட்டனள்; யாங்கள் ஏற்றனம்''
(3903)

என்று சுக்கிரீவனைச் சொல்ல வைக்கின்றார்!

'அந்தப் பெண் உரக்கக் கூச்சல் மட்டும் போட வில்லை. தன் கணவனுக்குத் தன்னுடைய நிலையைத் தெரிவிப்பதற்கு என்று எண்ணியோ என்னவோ—நாங்கள் அறியோம்— தன்னுடைய அணிகலன்களைத் தன் ஆடைத் துணியில் மூட்டையாகக் கட்டிக் கீழே வீழ்த்தினாள். அவ்வாறு அவள் அம் மூட்டையைக் கீழே தள்ளும் பொழுது, வெறும் கூச்சல் இட்டாள் என்று சொல்வ தற்கு இல்லாமல், மழை நீர் கண்ணில் பாய்ந்ததோ என்ற அளவிற்கு அழுத வண்ணம் இருந்தாள். இதனை நாங்கள் எவ்வாறு அறிய முடிந்தது என்கிறீர்களா? அம் மூட்டை எங்கோ கீழே வீழ்ந்திருக்க நாங்கள் அதனைக் கண்டெடுத்திருந்தால் கூட அவளுடைய அழிநிலை ஒரு வேளை அறிந்திருக்க மாட்டோம். ஆனால், அப் பொதியை நாங்கள் அப்படியே கீழே விழாமல் கைகளால் ஏந்திப் பிடித்துக் கொண்டோம்.

அணிகலப் பொதியைக் கையில் தாங்கிப் பிடித்துக் கொண்டதால் மட்டும் அவள் அழுகையோ, அவ் வழுகை யின் அளவோ அறிந்திடும் வாய்ப்பு இல்லை, என்பது உண்மையே! ஆனால், அது என்ன பொதி என்று அவிழ்த்தோம். அதில் அவளுடைய குழை என்னும் காதணியும் இருக்கக் கண்டோம். அந்த ஆபரணம் ஈரம் பட்டிருந்தது. பறந்து சென்று கொண்டிருந்தவளின் காதணிக்கு ஈரம்—நீர்—எப்படி வந்திருக்க முடியும்? அந்தச் சூழ்நிலையில் —அவளுடைய துயர ஓலத்திற்கு ஏற்ப ஊற் றெடுத்திக்கக்கூடியது இயற்கையான கண்ணீரேயாக வேண்டும் எனத் தெளிந்தோம் அத்தகைய கண்ணீர் மூக்கணியில் பட்டிருந்தால் அவள் சற்றே அழுதிருப்பாள் என்று தெளிந்திருப்போம். ஆனால் அவளுடைய காதணி யல்லவா நனைந்திருந்தது! எனவே அவள் மழைநீரெனக் கண்ணீர் தன் கண்ணில் குளமாகத் ததும்பி விழும் அள விற்குப் பெரிதும் அழுதிருந்தாள் எனக் கண்டோம்.

அவ்வாறு கண்களில் ததும்பிய நீரைத் துடைப்பதற்கு அவளுடைய காதணி கண்வரை வந்திராது என்பதை அவ்வணியின் அளவே காட்டி நிற்கின்றது. அப்படியானால் அக்காதணியைத் தொடும் அளவிற்கு—தொட்டு ஈரப்படுத்தும் அளவிற்கு—அவளுடைய கண்கள் நெடிதாய் இருந்தன என்பதை அனுமானிக்க முடிந்தது! ஆகவே, அவளுடைய கண்கள், 'குழை பொரு கண்' என்பதை அளந்து உணர்ந்தோம்!' என்று இவ்வளவு விளக்கங்களையும் சுக்கிரீவன் சொல்லாமல் சொன்னதாகக் கவிச் சக்கரவர்த்தி பாடியுள்ளார்!

இந்த அளவிற்குப் பண்பாடும், நாகரிகமும் குன்றா அளவிற்குப் பிறன் மனையை வர்ணிக்கும் பெற்றி கம்பருக்கே அன்றி எவருக்கு வரும்!

## 31. மின் இடைச் சனகி!

இராமனிடம், சுக்கிரீவன் அணிகலப் பொதி ஒன்றைக் காட்டி, 'இவை உன் மனைவியினுடையனவோ' காண்க எனக் கொடுத்தான். இராமன் அவ்வணிகலன்கள் சீதையினுடையனவே எனத் தெளிந்தான்.

சீதையின் நிலை யுணர்ந்து, இராமன் தன் நிலை மறந்து கனல்பட்ட மெழுகு என நெஞ்சம் உருகினான். கண்கள் நீர் சொரியக் கலங்கினான். அவன் பட்ட வேதனை அளவிடற்கு ஆகாததாய்ப் பெருகியது.

இதனைக் கண்ட சுக்கிரீவன், 'இந்த அணிகலன்களைக் காட்டி உன்றன் உணர்வைத் தூண்டி மனம் மிக நோகச் செய்துவிட்டேனே! என இராமனிடம் தன்னைத் தானே நொந்து கொண்டான். இராமனுக்கு ஆறுதல் மொழிகளும் அறைந்தான்.

‘அண்ட சராசரங்கள் அனைத்திலும் நாடித்தேடி உன் தேவியை நான் மீட்டுத் தருவேன்; நீ வருந்த வேண்டா’ என்றான். இறுதியில்,

“என்னுடைச் சிறு குறை முடித்தல் ஈண்டு ஒரீகப்
பின்னுடைத்து ஆயினும் ஆக! பேதுறும்
மின் இடைச் சனகியை மீட்டு, மீள்துமால்—
பொன்னுடைச் சிலையினாய்!—விரைந்து போய்”
(3918)

என்றான்

‘இராம! நாம் ஒருவருர்க்கொருவர் புரிந்து கொண்டதுமே,

“தலைமையோடு, நின் தாரமும், உனக்கு இன்று
தருவேன்” (3855)

என்று என் தமையன் வாலியைக் கொன்று, கிட்கிந்தை நாட்டாட்சியையும் என்னுடைய மனைவியையும் நான் மீண்டும் உடனே பெறச் செய்வதாகச் சூளுரைத்தாயே! அது நின் வரை ஒரு சிறிய பணியே ஆகும். அந்தச் சிறிய செயலைப் பின்னர் பார்த்துக் கொள்வோம். முதலில் நின் மனைவியை மீட்கும் பணியில் விரைந்து செல்கின்றேன்’ என்றான் சுக்கிரீவன்.

அவ்வாறு அவன் உரைக்கும் பொழுது சீதையை ‘மின் இடைச் சனகி’ என்று குறிப்பிடுகின்றான்! அவன் அவளைக் காணவே இல்லையே! அவளுடைய இடையை எப்படி மிக மெல்லியது என அளவெடுத்தான்? ‘குழை பொரு கண்’ என்று அவளுடைய கண்களைச் சுக்கிரீவன் குறிப்பிட்டதையே நாகரிகப் படுத்தி நயமாகப் பாடிய கவிச் சக்கரவர்த்தி இப்பொழுது அவனை விட்டுக் கொடுப்பாரா?

தாங்கள் யாரென்பதையும், தங்கள் வரலாற்றையும் அனுமனுக்கு விளக்கியவன் இலக்குவன். அவன், தன் அண்ணியாரின் அங்கங்களை வர்ணித்திருக்க மாட்டான் என்பது அவனுடைய பண்பு நலன்களை உணர்ந்தவர்கள் நன்கு அறிவர். அவன் கூறாததால் அனுமனும் சுக்கிரீவனிடம் அவளுடைய அங்கங்கள் பற்றி ஏதும் பகராமல்,

"மாயையால், மதி இலா நிருதர்கோன் மனைவியைத்
தீய கான் நெறியின் உய்த்தனன்" (3799)

என்று தான் கூறினான்.

அப்படியிருக்க சுக்கிரீவன் சனகியின் இடையை 'மின்' என எப்படிக் குறிப்பிட்டான்?

அரக்கியருடைய உடல்வாகு போல் மானிடப் பெண்டிரின் உடல் அமைப்பு பெருத்து இராது என்று சுக்கிரீவன் அனுமானித்தானோ? அப்படிக் சற்பித்து அவளுடைய கணவனிடம் கூற வேண்டுமோ?

அவன் இராமனுக்குக் கூறியதோ ஆறுதல் மொழி! ஏதோ, அந்த நேரத்திற்கு ஏற்றதாக அமைந்தது என்று இராமன் நினைத்திடக்கூடாது என்று கருதினான். சுக்கிரீவன் எனவே, 'அவளை என்னால் அடையாளம் கண்டு கொள்ள முடியும்; அவளைத் தான் கண்டு மீட்டு வருவேன்' என்று உறுதி கூறும் முகத்தான் அவளுடைய இடையின் அடையாளத்தைக் குறிப்பிட்டான்.

சரி; அவளுடைய இடையை எப்படி அவன் அறிந்தான்? அவளுடைய மேகலாபரணம் அதனைக் காட்டிக் கொடுத்தது!

பொதியில் இருந்த சீதையின் அணிகலன்கள், அவளுடைய அந்தந்த அணிகலனுக்கேற்ற அங்கங்களை ஒத்தே அமைந்திருந்தன.

"நல்குவது என் இனி? நங்கை கொங்கையைப்
புல்கிய பூணும். அக் கொங்கை போன்றன;
அல்குலின் அணிகளும், அல்குல் ஆயின;
பல் கலன் பிறவும், அப் படிவம் ஆனவே" (3906)

என்ற படியால் மேகலை என்னும் (அல்குல்) இடை அணி காட்டியதை 'மின் இடை' எனப் புரிந்து கொண்டிருந்தான், சுக்கிரீவனும். அவ்வணிகலன்கள் அனைத்தும் சீதையினுடையவே என இராமனும் தெளிந்து கூறிய பின், சனகியின் இடை 'மின் இடை' என வேறெவரும் காட்ட வேண்டுமோ! அவன் அவ்வாறு உணர்ந்ததைக் கவிச் சக்கரவர்த்தி சொல்லில் நமக்கு உணர்த்தி விட்டார்!

## 32. 'சாது' ஆம் என்ற தனுவின் செல்வன்

இராம இலக்குவரிடம் ஓர் அணிகலப் பொதியைச் சுக்கிரீவன் காட்டினான்; 'சில நாட்களுக்கு முன் விமானத்தில் அழுதுகொண்டே சென்ற வண்ணம் ஒரு பெண்மணி இதனை வீசினாள்; நாங்கள் அதனைப் பிடித்துக்கொண்டோம்' இவை உன் மனைவியினுடையவையோ, பார்' என்றான்.

அணிகலன்களைத் தனித்தனியே எடுத்துப் பார்த்து இராமன், அவை சீதையினுடையவே என அடையாளம் கண்டு கொண்டான்: உள்ளம் வெதும்பினான்; கண்ணீர் சோர அழுதான். சுக்கிரீவன் இராமனுக்குத் தேறுதல் மொழிகள் உரைத்தான்.

பேச்சின் இடையில் புகுந்து 'முதலில் வாலியைக் கொல்ல வேண்டும்' என்று அனுமன் கூறினான். இதனைக் கம்பர்.

" ஆதலால், அன்னதே அமைவது ஆம்என,
நீதியால்! நினைந்தனென் என, நிகழ்த்தினான்,
'சாது ஆம்' என்ற, அத்தனுவின் செல்வனும்,
'போதும் நாம் வாலிபால்' என்ன, போயினர்''
(3934)

எனப் பாடுவார்.

இப்பாடலில் வரும் 'சாது ஆம்' என்ற சொற்றொடர்க்கு அனுமன் சொன்னது 'தக்கது, நல்லது ஆகும்' என்று பொருள் கொள்வார் உண்டு; அதற்கு, அடிப்படை, 'சாது' என்பது 'ஒப்புதலை உணர்த்தும் வடசொல்' என்றும் குறிப்புக் கூறுவர்!

கம்பன் வடசொற்களைக் கையாளவில்லை என்று சொல்ல முடியாது. என்றாலும், 'சாது ஆம் என்ற' சொற்றொடரில் உள்ள 'என்ற, என்னும் சொல்லிற்கு 'என்று கூறிய' எனப் பொருள் கொள்ளும் பொழுது தான் 'சாதும் ஆம்' என்ற சொற்றொடர்க்கும். 'தக்கது ஆகும்' என்ற பொருள் பொருந்தும்; 'அனுமன் சொன்னது தக்கது ஆகும். என்று கூறிய அந்த வில் வீரனும்' என்று விரிந்து நிற்கும்.

ஆனால், அடுத்த வரியிலேயே, 'போதும் நாம் வாலி பால் என்ன' என்று கம்பர் பாடியுள்ளார். அதாவது, 'நாம் வாலியினிடத்தில் செல்வோம் என்று கூற' என்ற பொருள் தருகின்றது.

அப்படியானால் 'என்ற', 'என்ன' என்ற சொற்கள் இரண்டும், 'என்று கூற' என்னும் ஒரே பொருள் பட அடுத்தடுத்து வரும்படியாகக் கவிச் சக்கரவர்த்தி பாடு வாரா? இதனைச் சற்று சிந்திக்க வேண்டும்! அவ்வாறு ஆழப் பார்க்கும் பொழுது 'சாது ஆம் என்ற சொற்றோ டர்க்குவேறு பொருள் தோன்றும்! அஃது, அப்பொழுது இராமனுக்கு இருந்த மனோ நிலைக்கும் ஒத்து இருக்கும்!

தனக்கு நாடு இல்லை, தான் காடு செல்ல வேண்டும் என்று தெரிந்த பொழுதும் இராமன் சினக்கவில்லை. சாதுவாக இருந்தான்; தன் தமையன் இராமனுக்கு மகுடம் இல்லையென்று இலக்குவன் கொதித்து எழுந்த பொழுது இராமன் சாதுவாக அவனைச் சமாதானப் படுத்தினான்; பரதன் சேனையுடன் வருவதைக் கண்டு துள்ளி யெழுந்த இலக்குவனைச் சாதுவாக இருந்த இராமன் உண்மை தெளிந்தவனாய்ச் சாந்தப் படுத்தினான்; சூர்ப்பணகை தன்னிடம் வந்து வேண்டாத கோரிக்கையை விடுத்த பொழுதும் இராமன் சாதுவாக இருந்து அவளை நையாண்டி செய்தான். இராம இலக்கு வரை விராதன் தாக்கிச் சென்ற பொழுதும் இராமன் சினவாது மென் முறுவல் பூத்த நிலை காட்டி இறுதியில் அந்த அரக்கனை வெட்டி விழ்த்தினான். கவந்தன் காட்சி யிலும் அவ்வாறே நிகழ்ந்தது.

இராவணன் சீதையை விமானத்தில் தூக்கிச் செல்ல, தான் அவனுடன் போர் செய்து வீழ்ந்து கிடக்கும் நிலையை சடாயு கூறியதும், இராமன் சீற்றம் கொண்டான். இது ஒன்றே அவன் சாந்த நிலைக்கு - சாதுவாய் இருந்த நிலைக்கு—சற்று மாறி உள்ளது! ஆனால் சடாயு, அறிவுரை கூறியதும் அச் சீற்றமும் தணிந்து விட்டது; சாது ஆனான்!

இவ்வாறு, இதுவரை சாதுவாகவே இருந்த இராமன் தன் மனைவியின் நகைகளைக் கண்டு அழுத நிலையில் சாதுவாக அதாவது சினம் அற்றவனாக இருந்ததில் வியப்பு இல்லை, அல்லவா?

இதனைத் தான் கவிச் சக்கரவர்த்தி, 'இதுவரையிலும் சாதுவாகவே இருந்த இராமன், அனுமன் சொன்னவற்றை எல்லாம் சாதுவாக இருந்து கேட்டுவிட்டு சிறிது சினம் காட்டி வாலியைக் கொல்லச் செல்வோம் என்று கூறினான், என்னும் பொருள்பட,

" சாது ஆம் என்ற அத்தனுவின் செல்வனும்
போதும் நாம் வாலி பால் என்ன போயினார்''
எனப் பாடினார் எனக் காண்பது சிறப்புடைத்தது!

## 33. நெடுங் கூந்தல் தீகின்றாள்!

இராமன், சுக்கிரீவன் தன் படை சூழ வாலியின் இருப்பிடம் சார்ந்தான். ஆலோசனை நடத்தினர். இறுதியில், இராமன் சுக்கிரீவனிடம், 'நீ வாலியை வலிய அழைத்துப் போர் புரிவாயாக அந்த சமயத்தில் நான் வேறோர் இடத்தில் நின்று அம்பு எய்து வாலியை வீழ்த்துவேன்' என்றான்.

சுக்கிரீவன், குன்றின் மீது ஏறி நின்று ஆர்ப்பரித்தான். 'நீ வந்து என்னுடன் போர் செய்தால் உன்னை நான் ஒடுக்குவேன்' என்று வாலியின் செவிபட சவால் விட்டான்.

அது கேட்டு மாவீரன் வாலி ஏளனமாய்ச் சிரித்தான். தன் தோள் புடைக்க பெருஞ் சினத்தோடு இளையானோடு பொர வீராவேசத்துடன் புறப்பட்டான். அக்காட்சியைக் கம்பர்,

"போய்ப் பொடித்தன மயிர்ப் புறத்த, வெம்பொறி;
காய்ப்பொடு உற்று எழு வட கனலும் கண்கெட,
தீப் பொடித்தன, விழி; தேவர் நாட்டினும்
மீப் பொடித்தன புகை, உயிர்ப்பு வீங்கவே.''

(3950)

எனக் காட்டுவார். தீப்பொறி பறக்கும் அளவிற்கு வாலியின் சினம் கொழுந்து விட்டெரிந்தது.

அந்நிலையில் அங்கு வந்தாள் அவனுடைய அருமை மனைவி தாரை. கணவனைப் போருக்குச் செல்லாதிருக்க

வேண்டினாள். தான் இருந்த சினத்தின் எல்லையினும், வாலி, தாரையை

" மலைக் குல மயில்!" (3957)

என அன்பு ததும்ப அழைத்துப் பேசலாயினான்! 'என்னை விலக்க வேண்டாம்; வலிய வந்து என்னை வம்புக்கு இழுக்கும் சுக்கிரீவனை அழித்து ஒழித்து விரைவில் திரும்புகின்றேன்' என்றான்.

தாரை மீண்டும் வாலியினிடம், 'உங்களுடைய வலிமை பொருந்திய தோள்களை எதிர்த்து நிற்க முடியாமல் அன்று அடிபட்டு ஓடிய சுக்கிரீவன் இப்பொழுது புதிதாக ஒன்றும் வலிமை பெற்றுவிடவில்லை; ஆனால் அவனுக்கு இப்பொழுது வலிய துணை கிடைத்துள்ளதாலேயே மீண்டும் தங்களை எதிர்த்து வந்துள்ளான்' என்றாள்.

வாலியோ, மீண்டும் தன்னுடைய வலிமையின் மேன்மை பற்றியும், பாற்கடலைக் கடைந்து பிறர்க்கே அமிர்தத்தை ஈந்த வள்ளன்மையையும், தன் பெயர் கேட்டாலே ஏழேழ் உலகத்தவரும் அஞ்சி நடுங்கும் தன்மையையும், எவரேனும் தன்னை எதிர்ப்பின் அவரின் ஆற்றலின் பகுதி தன்னை வந்தடையும் தன்மையையும் அவளுக்கு நினைவூட்டி, அவள் அஞ்சாதிருக்கக் கூறினான்.

உடனே, தாரை, சுக்கிரீவனுக்குத் துணையாக வந்துள்ளவர் இராமன் எனத் தெரிந்தவர்கள் செப்பியதாய் வெளிப்படுத்தினாள்.

இது கேட்டு தாரையைச் சினந்தான். 'மயிலே குயிலே! என்றெல்லாம் அவளை வர்ணித்துப் பேசி நின்றவன், அவளை இப்பொழுது 'பாவி!' எனக் குறிப்பிட்டான். இராமனுடைய பெருமைகளையும், பெருந்தன்மைகளையும் அவனுடைய துணை வேண்டாத் தனித்தன்மையையும் எடுத்து விளக்கினான். தமையனும்

தம்பியும் ஆகிய தங்களுக்கிடையில் நேர்ந்திருக்கும் போரில் இராமன் புக மாட்டான் என்ற தன் முழு நம்பிக்கையை வெளிப்படுத்தினான். இறுதியில், 'நீ இங்கேயே இரு: இமைப் பொழுதில் சுக்கிரீவனையும் அவன் உடன் வந்தாரையும் அழித்து விரைவில் வருகின்றேன்; கலங்க வேண்டாய்' என்று அவளைத் தேற்றினான்.

அதற்கு மேல், தாரை தன் கணவனிடம் பேச முடியாமல் நின்றாள். அவ்வாறு திகைத்து நின்ற அவளைக் கம்பர்,

"விரைக் குழல்" (3970)

என்று குறிப்பிடுகின்றார், அவளுடைய நறுமணம் கமழும் கூந்தலைக் கொண்டு அவள் பெயரை நம்மிடை பரப்புகின்றார்!

வாலி சுக்கிரீவன் போர் நடந்தது. இராமன் மறைந்திருந்து மாவீரன் வாலியின் மீது அம்பெய்தான். இந்த நம்பிக்கைத்துரோகச் செயலின் அடிப்படையில் இராமனுடன் வாலி வாதிட்டான்! இறுதியில் இன்னுயிர் நீத்தான்.

அனைவரும் அகன்றனர். செய்தி கேட்டாள்,

"வேல் விழித் தாரை" (4095)

வாலியின் உடல் மீது வீழ்ந்து புரண்டு, புரண்டு அழுதாள். அப்பொழுது அவளுடைய கூந்தல் அவனுடைய இரத்தத்தில் தோய்ந்து சிவந்தது என்பதனை,

"புரி குழல் சிவப்ப" (4096)

என்ற சொற்றொடரில் தோய்க்கின்றார்.

தாரை தொடர்ந்து ஓலமிட்டு அழுகின்றாள். தன்னுடைய இரு கைகளையும் தலையில் அடித்துக் கொண்டாள்; இடையிடையே தன் கூந்தலை ஒதுக்கி விட்டுக் கொண்டாள். இதனைக் கம்பர்,

"சோர்ந்து, சரிந்து தாழ் குழல்கள் தள்ளி" (4097)

என்ற சொற்றொடரால் படம் பிடிக்கின்றார்.

இத்தகைய அவலக்காட்சியினின்றும் அகன்ற தாரை மீண்டும் இலக்குவனின் முன்னர் வரும் பாங்கில் நம் முன் வருகின்றாள். இலக்குவனுக்கும் முன்னே, நமக்கும் முன்னே, கவிச்சக்கரவர்த்தி அவளைக் கண்டு விட்டு அவளை இனம் காட்டுகின்றார்!

"அவ் விரை செய் வார்குழல் தாரை" (4312)

என அவளைக் குறிப்பிடுகின்றார்!

மீண்டும். தாரைக்கு இலக்குவன் விடை இறுத்தான் என்று சொல்ல வந்த கம்பர், அவளைப்,

"புனை குழலாள்" (4321)

என்பார்!

இவ்வாறு தாரையின் கூந்தலை அவளுடைய கணவன் வாலி இறந்த பின்னுங்கூட, 'புரி குழல்,' 'தாழ் குழல்,' 'விரை செய் வார் குழல்,' 'புனை குழல்,' என் றெல்லாம் வர்ணிக்கும் கம்பர், ஏற்கனவே அக் கூந்தல் தீய்ந்தது என்று ஏன் கூறினார்?

வாலி தன் சினத்தின் உச்ச நிலையில் இருந்த பொழுது, தாரை தடுக்க வந்தாள்.
அதனைக் கம்பர்,

"ஆயிடை, தாரை என்று அமிழ்தின் தோன்றிய
வேயிடைத் தோளினாள், இடை விலக்கினாள்;
வாயிடைப் புகை வா, வாலி கண் வரும்
தியிடை, தன் நெடுங் கூந்தல் தீகின்றாள்"

(3956)

எனக் காட்டியுள்ளார்! அப்படி யென்றால் அவர் முன்னுக்குப் பின் முரணாகப் பாடுகின்றாரா? கவிச் சக்கரவர்த்தி அப்படிப் பாடுவாரா!

மிதிலையிலின்று தயரதன் புதுமணத் தம்பதியர் களுடன் அயோத்திக்குப் புறப்பட்டான்.

''ஏகும் அளவையின் வந்தன, வலமும் மயில் இடமும்
காகம் முதலிய, முந்திய தடை செய்வன;
கண்டான்;
நாகம் அனன், 'இடை இங்கு உளது இடையூறு
என நடவான்,
மாகம் மணி அணி தேரோடு நின்றான். நெறி
வந்தான் (1267)

''நின்றே; நெறி உணர்வான், ஒரு நினைவாளனை
அழையா
'நன்றோ? பழுது உளதோ? நடு உரை நீ,
நயம்' என்ன.
குன்றே புரை தோளான் எதிர், புள்ளின்
குறி, கொள்வான்,
இன்றே வரும் இடையூறு; அது நன்றாய் விடும்'
என்றான்' (1268)

இவ்வாறு சகுனம் பற்றி பால காண்டத்தில் ஆராய்ந் துள்ளார், கம்பர்.

அசோக வனத்தில் சிறைப்பட்டிருந்த சீதை, தன் துணைவி ஆம் திரிசடையிடம்,

''நலம் துடிக்கின்றதோ? நான் செய் தீவினைச்
சலம் துடித்து, இன்னமும் தருவது உண்மையோ?–
பொலந் துடி மருங்குலாய்!– புருவம், கண், முதல்
வலம் துடிக்கின் றில; வருவது ஓர்கிலேன்''
(5100)

"முனியொடு மிதிலையில் முதல்வன் முந்து நாள்,
துனி அறு புருவமும், தோளும், நாட்டமும்,
இனியன துடித்தன; ஈண்டும், ஆண்டு என
நனி துடிக்கின்றன; ஆய்ந்து நல்குவாய்" (5101)

"...........கான் புகுந்த நாள், வலம் துடித்ததே
(5102)

"நஞ்சு அனையான். வனத்து இழைக்க நண்ணிய
வஞ்சனைநாள், வலம் துடித்த; வாய்மையால்
எஞ்சல; ஈண்டு தாம் இடம் துடிக்குமால்;
'அஞ்சல்' என்று இரங்குவாய்! அடுப்பது யாது?
(5103)

என்றாள்.

"என்றலும், திரி சடை, இயைந்த சோபனம்!
நன்று இது! நன்று! எனா, நயந்த சிந்தையாள்;
'உன் துணைக் கணவனை உறுதல் உண்மையால்;
அன்றியும், கேட்டி' என்று, அறைதல் மேயினாள்
(5104)

இவ்வாறாகக் கம்பர் அயோத்தியா காண்டம். ஆரணிய காண்டம், சுந்தர காண்டம் ஆயவற்றிலான சகுனங்களை சீதை - திரி சடை வாயிலாக அலசுகின்றார்.

அத்தகையவர் கிட்கிந்தைக் காண்டத்தில மட்டும் விட்டு வைப்பாரா' தாரையின் நிலையைக் கொண்டு சகுனப் பலனை.நமக்குக்கூறாமல் கூறுகின்றார்!

சுக்கிரீவன் – வாலி போரில் இராமனின் இடையீட்டால் வாலி மாளப்போவது உறுதி. கதைப்போக்கில் அதனை அறிந்திருந்த கவிச் சக்கரவர்த்தி தம்முடைய காவியப் போக்கில் அம்முடிவை ஒரு சகுனங்கொண்டு மறைமுகமாய் மடுக்கின்றார்.

கூந்தல் தீய்வதாய்க் கனாக் காணலும், நனவு மயக்கம் கொள்ளுதலும், அபசகுனமாகும். எனவே நன்றாக இருக்கும்—இருக்கப் போகும்—தாரையின் கூந்தல் தீய்வதுபோல் ஒரு நனவு மயக்கம் காட்டுகின்றார் தம் பாடலில். நாமும் அப்பொழுதே வாலி தாரை நிரந்தரப் பிரிவிற்காய்க் கலங்குகின்றோம்; அனுதாபப் படுகின்றோம்!

# 34. புகழோன்

கிட்கிந்தையின் மன்னன், வாலி! 'அவன் நான்கு வேதங்களின் கரை கண்டு அவற்றைப் பேணி வந்தான்; முதிர்ந்த சிவபக்தன்; எல்லையில்லாத வல்லமை உடையவன்; தனி ஒருவனாய் நின்று பாற்கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமுதம் ஈந்தவன்; அந்த அளவிற்குப் பூமி, நீர், தீ, காற்று ஆகிய நான்கு பூதங்களும் ஒன்று கூடின வலிமை பெற்றவன்; மலைக்கு மலை தாவும் ஆற்றல் படைத்தவன்; எவரேனும் தன்னுடன் பொர வந்தால் அந்த எதிரியின் பலத்தில் பகுதி தன்னை வந்தடையும் வரம் கொண்டவன்; நாள்தோறும் எட்டு திக்குகளுக்கும் பறந்து சென்று அட்ட மூர்த்திகளையும் தொழும் பக்தியாளன்: அவன் பறக்கும்வேகத்தில் காற்றுகூட வேகமாக வீச முடியாது; முருகப் பெருமானின் கூர்மையான வேலும் அவனுடைய மார்பில் நுழைய முடியாது; அவனுடைய நெடிய வால் சென்ற இடத்தில் கூட அந்நாளைய பெரும் வீரனான இலங்கை வேந்தன் இராவணின் ஆட்சி செல்லாது; அவன் தன்னுடைய இடத்தை விட்டு எழுகின்ற அதிர்ச்சியால் மாபெரும் மலைகளும் உதிரும்; அவன் உருவில் கோள்களும் இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து நிற்கும். பன்றி அவதாரத் திருமாலும், கூர்மாவதாரத் திருமாலும்

இணைத்த ஆற்றலுக்குச் சமமான ஆற்றல் உடையவன்; பஞ்ச பூதங்கள் இயங்குவது அவனைக் கண்டு அஞ்சிய தாலேயே என்ற அளவிற்குப் பெருமிதம் கொண்டவன்; ஆதிசேடனும் அவனுடைய போக்குவரத்தை அனுசரித்து பூமி தாழாமல் அங்கும் இங்கும் இடம் பெயர்ந்து உலகைத் தாங்குவது போல் உள்ளான்; எழுபது வெள்ளம் குரங்குப்படை கொண்டவன்; அதனால் அகில உலகமும் அவன் கருத்திற்கு மாறுபடாது; வனவிலங்கு களும் அவன் முழக்கம் கேட்டு அஞ்சும்; பெரு வலியு டைய இராவணனைத் தன் வாலில் சுற்றி வளைத்து அனைத்து உலகங்களிலும் சுற்றி வந்தவன்; பால் வெண்ணிற மேனியை உடையவன்' என்றெல்லாம் அனுமான் வாலியின் பற்பல சிறப்புகளை இராமனிடம் தொடக்கத்திலேயே வர்ணித்துள்ளான்.

அத்தகைய வீரனுடன் ஒருநாள் ஓர் அவுணன் சண்டை செய்தான். இருவரும் ஒருவரை ஒருவர் ஓடி ஓடித் துரத்தி அடித்துக் கொண்டு ஒரு குகையில் நுழைந் தனர். வாலி, தன் தம்பியாகிய சுக்கிரீவனிடம் இடைப் பொழுதில் நாட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டு அந்த அவுணனைத் துரத்திக் கொண்டு குகை யினுள் சென்றான். பல நாட்கள் அவ்விருவரும் வெளியே வரவில்லை. ஆனால், குருதி மட்டும் வெளியே ஆறெனப் பாய்ந்து வந்தது. அதனைக் கண்டு வாலி இறந்து பட்டான் என அனுமன் முதலிய அவனுடைய அமைச்சர்களும் பெரியோர்களும் முடிவு செய்தனர்.

சுக்கிரீவன், தானும் அவ்வவுணனைத் தொடர்ந்து சென்று அழிப்பதாகவும். இயலவில்லை எனில் தானும் போரிட்டு மாள்வதாகவும் கூறிப்புறப்பட்டான். ஆனால், அமைச்சராதி ஆன்றோர்கள் அவனைத் தடுத்தனர். நாடு மன்னன் இன்றி இருத்தல் கூடாது என்று வற்புறுத்தி—சுக்கிரீவனின் எண்ணத்திற்கு மாறாக—

அவனுக்கு முடி சூட்டினர். அவுணன் வாராதிருக்க பிலத்திறுடைய வாயிலைப் பெரும் பாறை கொண்டு அடைத்தனர்.

பின்னாள் கழித்து அவுணனை அழித்து விட்டு வாலி வெளியில் வரலானான் வழியடைத்திருப்பதைக் கண்டான். கூவி அழைத்தும் எவரும் வராதது கண்டு சினந்து தன் காலினால் எற்றி பாறையைத் தகர்த்து எறிந்துவிட்டு வெளியில் வந்தான். சுக்கிரீவன் முடிசூடி இருக்கக் கண்டு 'வஞ்சகம்' எனத் தவறாய் எண்ணினான். அவனை ஓட ஓட விரட்டி அடித்தான். அவன் கெஞ்சினான்; உண்மை நிலையை உரைத்தான்; ஆனால், வாலி ஒப்பாது அவனை ஒழிக்க முற்பட்டான்.

அமைச்சர்கள் முதலியோர் சுக்கிரீவனுடைய பிழை ஒன்றும் இல்லை; தாங்களே அவனுடைய இஷ்டத்திற்கு மாறாக, நாட்டிற்கு மன்னன் தேவை என்ற நிலையில் அவனைக் கட்டாயப்படுத்தி மன்னன் ஆக்கியதாகக் கூறினர். மீண்டும் நாட்டாட்சியை வாலியே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டனர். அவர்கள் கூறியதையும் வாலி பொருட் படுத்தவில்லை. சுக்கிரீவனைத் துன்புறுத்தி அழிக்க ஆவேசம் கொண்டான். சுக்கிரீவன் வேறு வழியின்றி, வாலி வர முடியாத ருஷ்ய முக பர்வதத்தில் சென்று ஒளிந்தான். அவனுக்குத் துணையாக அமைச்சன் அனுமனும் அங்கு சென்றான்.

அமைச்சரவையோர் எடுத்துரைத்ததையும் வாலி பொருட்படுத்தாதது, அவர்களுடைய உணர்வைப் பாதித்தது: நியாயமே! அவ்வாறு அவர்கள் பாதிப்பு கொள்ளவில்லையென்றால் அவர்களுடைய தன்மானத்திற்கே இழுக்குதான்! அந்தத் தன்மான உணர்வுப் பொருமலால்தான் அனுமன் வாலிக்கு எதிராகச் சுக்கிரீவனுக்குத் துணையாய்ச் சென்றான்! அதில் தவறு ஏதும் இல்லை.

முன்னதாக, வாலி—தாரை, சுக்கிரீவன்—ருமை ஆகிய இரு தம்பதியர்களும் கிட்கிந்தையில் ஒன்றாகவே வாழ்ந்து வந்தனர்; வாலியின் அடி பொறுக்காமல் சுக்கிரீவன் நாட்டைவிட்டு ஓடிய பொழுது தன் மனைவி யையும் அவன் இழுத்துச் செல்ல வில்லை என்பது உண் மையில் ஆபத்தான சூழ்நிலையினால் தான். அவளும் அவனை நாடி அப்பொழுதேயோ, அல்லது பின்னரோ சென்று சேர முயன்றதாகவும் இல்லை. வாலியோ, தன் மனைவியை நாடியாவது சுக்கிரீவன் வருவான், அவனைத் தண்டிப்போம் என்று காத்திருந்தான்.

இந்தச் சூழ்நிலையை அனுமன் இப்பொழுது புத்தி சாலித் தனமாகப் பயன் படுத்திக் கொண்டான். வாலி, சுக்கிரீவனைத் தொடர்ந்து அச்சுறுத்தி வருவதோடு அவனுடைய 'மனைவியையும் விரும்பினான்' எனத் தன் 'சொல்லின் செல்வன்' என்ற பட்டத்திற்கு ஏற்ப இராம னிடம் சொல்லி வைத்தான். அப்பொழுதும் அனுமன், வாலியைக் குறிப்பிட ஏதும் கொடுமையான அடை மொழி இன்றி, 'அவன்' என்றுதான் கூறினான்.

ஆனால், அச் செய்தி இராமனுக்குக் கேட்பதற்குக் கடுமையாக இருந்தது. வாலியைக் கொல்வதாகச் சூளு ரைத்தான். வாலியுடன் சுக்கிரீவனை சண்டை செய்யச் செய்தான். தான் வேறு நின்று அம்பு எய்து வாலியை வீழ்த்துவதாகக் கூறினான். அந்த இடத்தில் இராமன் வாலியைக் குறிப்பிடும் பொழுது, 'வாலி என்பது ஓர் வெவ்விடம்'(3944) என்கின்றான்! அந்த அளவிற்கு அனு மனின் சந்தர்ப்ப சூழ்நிலைக் குற்றச் சாட்டு, இராமனை சினம் கொள்ளச் செய்து விட்டது'

அந்த ஒரு சந்தர்ப்பம் தவிர மற்ற இடங்களில் எல்லாம், வாலியை இராமன், 'வாலி' என்றே குறிப்பிடு கின்றான். (3934, 412 ).

அனுமன் வாலியை, 'இந்திரன் புதல்வன் என்னும் பரிவு இலன்' (3772), 'கொடுங் குலப் பகைஞன் ஆகிக் கொல்லிய வந்த கூற்று (377), 'தகை நெடும் பகைஞன் ஆம் இந்திரன் சிறுவன் (3800), 'வெஞ்சின வாலி' (5888)' என்று அவனுடைய சினத் தன்மையைக் காட்டிக் குறிப்பிட்டான்; 'விரை செய்தார் வாலி என்ற அளவு இலா வலியினான் (3707),' 'வரம்பு இல் ஆற்றலான் (3822)' 'சுழலும் வேலையைக் கடையும் தோளினான் (3823]' 'மலையின் நின்று மலையின் வாவுவான் (3824), 'அந்தகன் தனக்கு அரிய ஆணையான் (3834), 'முரண் வலிக் கையான்' (3850),' என்ற சொற்றொடர்களால் வாலியின் பெரு வலியைக் குறிப்பிட்டுக் கூறினான்; 'நாலு வேதம் ஆம் நவை இல் ஆர்கலி வேலி அன்னவன் '(3822), 'சூலிதன் அருள் துறையின் முற்றினான்'(3822). 'அட்ட மூர்த்தி தாள் பணியும் ஆற்றலான்'(3825)' என்று வாலியின் பக்தி நிலையைக் காட்டும் சொற்றொடர்களால் குறிப்பிட்டான்; 'இந்திரன் தனிப்புதல்வன்'(3834) 'இன் அளிச் சந்திரன் தழைத் தனைய தன்மையான்(3834) 'வாலி என்று ஓங்கல்' (5319) என்று வாலியின் பெருமிதம் பற்றிக் குறிப்பிட்டான்; வாலி (5886, 5890)' என்று அவன் பெயரை மட்டும் குறிப்பிட்டும் காட்டினான்.

இவ்வாறு காவியம் முழுவதிலும் வாலி மேல் வெறுப் புணர்ச்சி தோன்றாமல் பேசும் அனுமன் ஒரே இடத்தில், 'கொடுந் தொழில் வாலி (3929), என்று இராமனிடம் குறிப்பிடுகின்றான். வாலியின் பெருமைகளையே குறிப் பிட்டு இராமனிடம் பேசிய அனுமன், தான் கூறிய 'ருமை' செய்தியால் இராமன் வாலியைக் கொல்வதாகச் சொன் னதை, வாலி–சுக்கிரீவன் போர்ச் சூழலில் மறந்து விடக் கூடாது என்பதனால் அந்த சொற்றொடரைக் கையாண்டான். வாலி மாளவேண்டும் என்ற தன் எண்ணம் நிறைவேறப் பெற்றான்!

இராமன், அனுமன் இருவரைத் தவிர பிற பாத்திரங்கள் எல்லாம் வாலியைக் குறை கூறிக் குறிப்பிடவில்லை. சுக்கிரீவன் வாலி தன் மேல் கொண்டுள்ள பகைமையைக் காட்டி, 'கறுவு உடைய வாலி (3752)' என்று ஒரு முறை குறிப்பிட்டான்; பிற இடங்களில், 'முன்னவன் (3810); 'கொற்ற வாலி (3895); 'வாலி(5890)' என்றுதான் குறிப்பிட்டான்.

தாரை, தன் கணவனை விளிக்கும் பொழுது, 'செயிர் தீரா விதி ஆன தெய்வமே! (4099); 'செரு ஆர்தோளா! (4104)' 'எந்தாய்! (4105)' என்று குறிப்பிடுகின்றாள்; பிற இடங்களில், 'வாலி (4108, 4598, 4327)' என்று குறிப்பிடுகின்றாள்.

வானர வீரர்களோ, 'வாலி காலன்' (3885) என்று அவனுடைய வலிமையால் வந்த அச்சங் காட்டிப் பேசினர்.

இராவணனும், 'வாலி (5887, 5889)' என்றுதான் குறிப்பிடுகின்றான்.

அங்கதனோ, தன் தந்தையை 'இந்திரன் செம்மல் (6997)' என்றான்.

இவ்வாறெல்லாம் தன் காவியப் பாத்திரங்கள் வாயிலாக வாலியைக் குறிப்பிட வைத்துள்ள கம்பர் தம் கவிக் கூற்றாக அவனை எவ்வாறு வெளிப்படுத்துகின்றார்

''வாலி (3943, 3946, 3956, 3971, 3972, 3999, 4017 4033, 4045, 4093, 4095, 4112, 4284, 4346, 4659)' என்றும் 'அடுதிறல் வாலி(3994, 3996, 4002)' என்றும். 'அமளிமேல் ஒரு பாற்கடல் கிடந்ததே அனைய பான்மையான் (3947) என்றும், 'வரைத் தடம் தோளினான்(3948),' என்றும் இறுதி ஊழியில் கொழுந் திரைக் கடல் கிளர்ந்தனைய,

கொள்கையான்(39 9)' என்றும், 'கடலின் தான் கடை ஆலமும் ஒத்தனன் 3955)' என்றும், 'இந்திரன் புதல்வன்' (3998),' 'இந்திரற்கு மகன்(4295)' என்றும், 'போர் வாலி (4001)' என்றும், 'ஆளிபோல் வாலி(4009)' என்றும், 'வாசத்தாரவன்(4011)' என்றும், 'செங்கண் வாலி 4037)' என்றும், 'அரி குலத்து அரசு(4058), கவி குலத்து அரசு 4060), திண் தோள் குரக்கு இனத்து அரசன்(4091)' என்றும், 'கால வாலி' 4094) என்றும், வன் திறல் வாலி(6993) என்றும் சாதாரணமாகவோ, அவனுடைய போர் வலி ஆற்றலின் அடிப்படையில் அடைமொழிகளைச் சேர்த்தோதான் ஈரிடங்களைத் தவிர மற்றெல்லா இடங்களிலும் குறிப்பிட்டுள்ளார்.

இவை அனைத்தையும் இணைத்து ஓரிடத்தில் மட்டும்,

"வீரரை யாரோ வியவாதார்?"(4009)

என்று வியந்து போற்றியுள்ளார்.

இவையன்றி வாலியைக் கவிச் சக்கரவர்த்தி இரண்டே இடங்களில் நேரடியாகப் புகழ்ந்துள்ளார்! தன் கூற்றாய் அவர் அவனைக் குறை கூறியோ, இகழ்ந்தோ, பாடினார்.

ஓரிடத்தில் அவனைச் 'சிறியன சிந்தியாதான்' (4061) எனப் புகழ்ந்துள்ளார். ஆம்; அவன் அனுமனால் வீண் பழிக்கு ஆளாக்கப்பட்டு இராமனால் மறைந்திருந்து கொல்லப்பட்டான். (இதனுடைய முழு விளக்கத்தை எமது வாலி வழக்கில் தீர்ப்பு என்ற நூலில் காண்க). இராமன் தன் சுய உருவைக் காணும் (திருமால் எனும தெய்வப் பார்வை) ஞானத்தைக் கொடுத்ததால் நடந்தது அனைத்தையும் மறந்தவன் போலே, தானே, 'தீயன பொறுத்தி' என இராமனிடம் வேண்டுகின்றான். 'வாலி நல்லவன்; கீழ்மையான எண்ணங்களை ஏற்க மாட்டான்; அவன் தன் தம்பி மீது சினம் தணியாத நிலை தவறே!

ஆனால், அதற்குத் துணையாக அனுமனால் கற்பிக்கப் பட்ட—ருமையின் அடிப்படையிலான-குற்றச் சாட்டு கற்பனையானதே!' எனக் கூறுவார் போலே இச் சொற் றொடரைக் கையாண்டு அவனுடைய பெருந்தன்மை யைப் புகழ்ந்து, அவனுக்கு சாட்சியம் நிற்கின்றார்.

'இந்திரன் இராவண வதத்திற்காக உலகில் வாலி யாகத் தோன்றியவன். தான் வந்த காரியத்தை மறந்து யாருக்கு விரோதியாக வேண்டுமோ அவனுடனேயே கூட்டு சேர்ந்து விட்டான். அதனால், அவன், இராம—இராவணப் போரில், இராவணனுக்குத் துணையாக இராவண்ணம் அவன் அழிக்கப்பட வேண்டியவன் தானே?

ஒரு நடிகனை ஒரு குறிப்பிட்ட வேடத்திற்கு நாடக இயக்குனர் அனுப்புகின்றார். அவன் மேடைக்குச் சென்று வேறு விதமாக உரையாடி நடிக்கின்றான். அவனை அந்த இயக்குனர் திரை மறைவில் நின்று இழுத்துக் கொள்வாரா, இல்லையா? அது போலத்தான், இராம னாகிய இயக்குநர் வாலியாகிய நடிகனை மறைந்து நின்று கொன்றார்!''

இது சொற் சாதுரியம் வல்ல பெரும் பேச்சாளர்கள் நம்மைச் சமாதானப் படுத்தக் கூறும் உவமை! இந்த உவமையின் அடிப்படையில் கோளாறு இருப்பதைக் கேட்போரும் புரிந்து கொள்ளாமல்—புரிந்து கொள்ள முயலாமல் அல்லது புரிந்து கொண்டால் பெரியவர் களுடைய கருத்துக்கு மாறுபட வேண்டி வருமே என்று அஞ்சி தலையாட்டி பொம்மைகளாய் ஆமோதித்து விடுகின்றனர்!

இராமன் இயக்குநரா? அவனும் ஒரு நடிகன்தானே? இந்திரன் ஆகிய வாலியும் ஒரு நடிகன்! இவர்களை இயக்குபவனோ முழுமுதற் பொருளாகிய திருமால்! அவனே தான் இராமனாக வந்துள்ளான் என்றாலும்,

அவன் தன்னைத்தானே அவதாரப் புருஷன் என்று உணர்ந்து கொள்ளவே இல்லை என உரைப்பவர்கள் இங்கே மட்டும் அவனைத் திருமால் என்னும் இயக்குந ராக எப்படி ஏற்க முற்படுகின்றனர்? அப்படியே அவனை இயக்குநராக ஒப்புக் கொண்டாலும், அவனுடைய பணி என்ன? மறைவிலிருந்து அந்த நடிகனைத் திருத்த முயல வேண்டும்; இயலாது போனால் திரைச்சீலையை கீழே விட்டுத் தாழ்த்தி நாடக மேடையையே பார்வையாளர் கள் கண்களிலிருந்து சிறிது போழ்து மறைத்து, அவனைச் சீர் செய்து -அல்லது அவனுக்கு மாற்றாக பிறிதொரு ஆளை நடிகனாக நியமித்து—நாடகத்தை முழுமையாக்க வேண்டுமேயல்றி, குறையாக அவன் நடிப்பதாக நினைத்துக் கொண்டு—பிறர் சொற்கேட்டதின் விளை வாய்—அவனை மாய்த்தே தீர்வதா? அப்படி மாய்ப்ப தானாலும், அடிபட்டவனிடம் நாடக மேடையிலேயே நியாயம் பேசிக் கொண்டிருந்தால் அந்த நடிக இயக்குநன் மட்டும் பார்வையாளர்களிடமிருந்து தப்ப முடியுமா?

'ஒரு நடிகனை ஒழுங்காகத் தயார் செய்ய முடியாத இயக்குநரின் திறம் என்னே? அவனை அப்போதைக்கப் போது நினைவு படுத்தித் தன் பாத்திரத்தைச் சரிவர நடிக்கச் செய்யாமல் கடைசி நேரத்தில் கடிந்து தள்ளுவது என்ன முறை? அவ்வாறு செய்ததும் அன்றி நம் கண் எதிரிலேயே அவர்களுக்குள் வாக்கு வாதம் வேறா?' என்றெல்லாம் ஏசாரோ?

ஆகவே, மனித இராமன், விலங்கு வாலியை மறைந் திருந்து கொன்றது உலகியல் நடைமுறைப்படி நியாய மானது அன்று என்றுதான் மனோ சாட்சிக்கு விரோத மின்றிப் பேசுபவர்கள் கூற முடியும்!

இதனைத் தான் கவிச் சக்கரவர்த்தி கம்பரும் வெளிப்படுத்த முயன்றார்! என்றாலும், பிற்காலத்து இலக்கியவாணர்கள் தங்களுக்கு இடையே சொற்

சிலம்பம் ஆடி மகிழ்வுற வேண்டித்தம் கருத்தை மறை முகமான ஒரு சொல்லால் மூடி மொழிந்துள்ளனர்!

'தன் மார்பில் பாய்ந்த அம்பைத் தடுத்து நிறுத்தினான். அதனில் பொறித்துள்ள பெயரைக் காண முற்பட்டான் வாலி' என்பதைக் கூற வந்தவர் அவனைப் 'புகழோன்' என்னும் பெருமிதச் சொல்லால் குறிப்பிடுகின்றார்! அவரும் வாலியின் செயல் தீராப் பழியுடைத்து — காமத்தின் பாற்பட்டது— என்று கருதியிருப்பாரேயானால் அவனுக்குப் புகழுரை சூட்டுவாரோ? அதிலும் அந்தச் சூழ்நிலையில்!

"குப்புசாமியின் தந்தை கிருஷ்ணசாமி. அவர், 'சீர் திருத்தம்' என்ற நாடகத்தில் நடிக்கிறார். அவர் ஏற்கும் பாத்திரத்தின் பெயர் 'சர்வோத்தமன்'. அந்த சர்வோத்தமன், 'அப்பாவி' என்ற பாத்திரத்தைச் சூழ்நிலை காரணமாகக் கொலை செய்து விடுகின்றான்.

இந்தக் காட்சியைக் குப்புசாமி பார்க்கின்றான். வீட்டிற்கு வந்து தன் அப்பாவைக் கொலைகாரன் என்றால் அது அவனுடைய அறியாமையைக் காட்டும்.

அதேபோல், அவன் நாடகத்தில் 'சர்வோத்தமன் கொலைகாரன் அல்ல; கொன்றது என்பது மட்டும் அல்ல 'சர்வோத்தமன்' என்ற பெயர் வேறு அமைந்துள்ளது அத்தகையவர், அந்த 'அப்பாவியின்' உயிரைப் போக்கினால் அவரைக் 'கொலைகாரன்' என்று சொல்வது கூடாது என்று சொன்னால் அது அவனுடைய அறியாமையின் ஆழத்தைக் காட்டும்.

எனவே, அவன், கிருஷ்ணசாமியை வீட்டில் தந்தையாக தக்க மரியாதை தரவும், நாடகத்தில் நடிகனாகக் கொலைகாரன் பாங்கில் பார்த்து ரசிக்கவும் வேண்டும்.

இவ்வாறான ஒழுங்கு நிலை சமப்பார்வை ஏற்கத் தெரியாதவர்கள்—தெரிந்தாலும் அவ்வாறு கருதத் தயங்குபவர்கள்—தான் இராமன் 'இராமாயண' நாடகத்தில் அவன் வாலியைக் கொன்றதைத் தவறாக ஏற்கும் மனோ தைரியம் இன்றி இருப்பர். இராமனின் மூலமான 'திருமாலை' நினைந்து வாலியின் மூலமான 'இந்திரனைக்' கொன்றது சரி என்பர். அவர்கள் திருமால் இராமன் வேடத்தில் நடிப்பதைப் புரிந்துகொண்டு புகழத் தெரியாதவர்களே!

முறைப்படி நியாயமானது அன்று என்றுதான் மனோ சாட்சிக்கு விரோதமின்றிப் பேசுபவர்கள் கூற முடியும்!

இதனைத்தான் கவிச்சக்கரவர்த்தி கம்பரும் வெளிப்படுத்த முயன்றார் என்றாலும், பிற்காலத்து இலக்கியவாணர்கள் தங்களுக்கு இடையே சொற் சிலம்பம் ஆடி மகிழ்வுற வேண்டித் தன் கருத்தை மறைமுகமான ஒரு சொல்லால் மூடி மொழிந்துள்ளனர்!

'தன் மார்பில் பாய்ந்த அம்பைத் தடுத்து நிறுத்தினான்; அதனில் பொறித்துள்ள பெயரைக் காண முற்பட்டான் வாலி, என்பதைக் கூற வந்தவர் அவனைப் 'புகழோன்' (4012) என்னும் பெருமிதச் சொல்லால் குறிப்பிடுகின்றார்! அவரும் வாலியின் செயல் தீராப் பழியுடைத்து—காமத்தின் பாற்பட்டது—என்று கருதியிருப்பாரேயானால் அவனுக்குப் புகழுரை சூட்டுவாரா? அதிலும் அந்தச் சூழ்நிலையில்!

எனவே, வாலியென்னும் சிறியன சிந்தியாதானைப் பற்றித் தன்னுடைய மேலான கருத்தை வெளிப்படுத்தவே அவனைப் 'புகழோன்' என்று அழுத்தம் திருத்தமாகக் குறிப்பிட்டுள்ளார் கம்பர் என்பதை அறிவு பூர்வமாக—வாத பூர்வமாக — மனோதத்துவ நிலைபி

லான—வேண்டுதல் வேண்டாமை இல்லா நோக்கோடு—சீர்தூக்கிச் சமன் செய்யும் கோல்போல் நாம் உணர்தல் வேண்டும்!

## 35. கண்களின் தெரியக் கண்டான்

சுக்கிரீவனை இரு கரங்களாலும் தூக்கிய சமயத்தில் ஓர் அம்பு வாலியின் நெஞ்சில் பாய்ந்தது. அவன் தரை மீது சாய்ந்தான்; அந்த அம்பினைப் பிடித்து நிறுத்தி வெளியில் எடுத்தான்; குருதி பொங்கியது. அதனைக் கண்டு உடன்பிறப்பான சுக்கிரீவனே வருந்தி மயங்கி வீழ்ந்தான்.

வாலி அந்த அம்பை முறிக்கவும் முடியவில்லை! எனவே, அதனில் யார் பெயர் பொறிக்கப் பெற்றுள்ளது என்பதை அறியமுற்பட்டான்.

“ மும்மை சால் உலகுக்கு எல்லாம் மூல மந்திரத்தை, முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும் தனிப் பெரும் பதத்தை தானே
இம்மையே, எழுமை நோய்க்கும் மருந்தினை, ‘இராமன்’ என்னும்
செம்மை சேர் நாமம் தன்னை, கண்களின் தெரியக் கண்டான்” (4013)

எனப் பாடுகின்றார், கவிச்சக்கரவர்த்தி.

‘நாமம் தன்னைக் கண்டான்’ என்றால் போதாதா? ‘கண்களின் தெரியக் கண்டான்’ என்றது ஏன்?

சுக்கிரீவனின் போர்க்குரல் கேட்டது. வாலி போருக்குப் புறப்பட்டான்; தாரை தடுத்தாள்; முதலில்,

“ கொற்றவ! நின் பெருங் குவவுத் தோள்வலிக்கு
இற்றனன், முன்னை நாள், ஈடு உண்டு ஏகினான்;
பெற்றிலன் பெருந்திறல்; பெயர்த்தும் போர் செயற்கு
உற்றது, நெடுந்துணை உடைமையால்” (3958)

என்றாள்.

‘அவனுக்குத் துணையாக எவர் வந்திருக்க முடியும்? என்னை எதிர்க்க எவரேனும் வந்தால் அவர்களின் ஆற்றலில் பாதி என்னை வந்தடையும்! இதனை அறிந்தும் எவரும் வருவாரோ! அப்படி வந்தால் அவர்களையும் அழித்து சுக்கிரீவனையும் ஒழித்து வருகின்றேன்!” என்று வாலி கர்ஜித்தான்.

தாரை மறுபடியும் வாலியினிடம்,

“ ........... ...........அரச! ஆயவற்கு
இன் உயிர் நட்பு அமைந்து இராமன் என்பவன்,
உன் உயிர் கோடலுக்கு உடன் வந்தான் என,
துன்னிய அன்பினர் சொல்லினர்” (3964)

என்றாள்.

அவள் கூறிய ‘இராமன்’ என்னும் செம்மை சேர் நாமம் தன்னை வாலி தன் காதால் கேட்டான். உடனே, அவன் இராமனின் அருங்குணங்களைக் கூறி, தானும் தன் தம்பியும் எதிரும் போரில் அவன் தலையிடமாட்டான் என்பதை எடுத்துரைத்துத் தாரையை இடித்துரைத்

தான். அவன் அவ்வாறு பேசிய நேரம் முழுதும், 'இராமன் என்னும் செம்மை சேர் நாமம் தன்னைத்' தன் நெஞ்சாரக் கண்டான்; 'தருமம்', 'ஐயன்', 'அருளின் ஆழியான்' என்றெல்லாம் அந்த இராம நாமப் பொருளைப் புகன்றான்.

இப்பொழுது, அம்பில் இருந்த எழுத்துகளைப் பார்த்தான்; தான் பார்த்த நாமத்தை அவனாலேயே நம்ப முடியவில்லை; திரும்பத் திரும்பக் கண்களைத் தேய்த்துக் கொண்டு பார்த்தான்; 'இராமன்' என்றுதான் அவனால்—அவனுடைய கண்களால்—பார்த்த சொல் காட்டியது!

இவ்வாறு, 'தன் காதால் கேட்டுச் சுவைத்த நாமத்தை, நெஞ்சார நினைந்து போற்றிய நாமத்தை அம்பில் பார்த்தும் நம்பமுடியவில்லை; தன் கண்ணையே தன்னால் நம்ப இயலவில்லை' என்பதை வலியுறுத்தவே 'கண்ணின் தெரியக் கண்டான்' எனக் கவிச் சக்கரவர்த்தி கூறியுள்ளார் என்று தெளிகின்றோம்.

இத்தொடர் பற்றி புலவர் கீரன் அவர்கள் 12–10–85 திகதியன்று நிகழ்த்திய ஒரு நோக்குரையையும் இதனில் இணைத்து மகிழ விழைகின்றேன்.

" 'கண்களில் தெரியக் கண்டான்' என்பதற்கும் 'கண்களில் தெரிந்து கண்டான். என்பதற்கும் வேறுபாடு உண்டு. ஒன்றினைத் தேடிச் செல்ல, அது கண்ணில் படுமாயின் அதனைத் 'தெரிந்து கண்டது' ஆகும்; ஒன்று, தேடாமல் தானாகவே கண்ணில் படக் காண்பது 'தெரியக் கண்டான்' ஆகும். வாலி, இராம நாமத்தைத் தேடிச் செல்லவில்லை; தன் நெஞ்சில் பாய்ந்த அம்பில் அந்நாமம் தானாக வந்து அவனுடைய கண்களில்

பட்டது. அதனாலேயே கம்பர், கண்களில் தெரியக் கண்டான்' எனப் பாடினார்'' என அவர் தம்முடைய நோக்குரையை விளக்கினார்.

இனி, அவ்வாறு திகைத்துப் பார்த்து வருந்தியவன் அருகில் இராமன் வந்ததைக் கூறும் கம்பர்,

"இறை திறம்பினனால்; என்னே, இழிந்துள்ளோர் இயற்கை! என்னின்,
முறை திறம்பினனால் என்று மொழிகின்ற முகத்தான் முன்னர்,
.................................................................
..........................................வந்து தோன்ற'' (4010)

எனக் காட்டுகின்றார்.

'மொழிகின்றான் முன்னர் வந்து தோன்ற' என்றாலே போதுமே; 'மொழிகின்ற முகத்தான் முன்னர்' என்று ஏன் கூறவேண்டும்?

அம்பினில் 'இராமன்' என்ற பெயரைப் பார்த்ததும் அந்த இராமன் 'நல் அறம் துறந்தனனே' என்று நகைத்து, அத்தகைய அடாத செயலை ஒரு நல்லவன் செய்ததை எண்ணி வாலி நாணம் அடைந்தான்.

"பிறர் பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு', (திரு 1015)

என்பது தமிழ் மறை அல்லவா?

நாணத்தால் அவன் முகம் தொங்கியிருந்த பொழுது இராமன் வாலியின் முன்னர் வரவில்லை. அந்த இறை திறம்பிய செயலை அவன் எடுத்துச் சொல்லத் தயங்க வில்லை; இராமனே யானாலும் அவன் செய்த பிழை பிழையே என்று அச்சமில்லாமல் கூறும் பொழுது

இராமன் அவன் முன்னர் வந்து நின்றான் என வாலியின் ஒளிவு மறைவு இல்லாத—அஞ்சாத— மனப் பாங்கை வலியுறுத்திக் காட்டவே அவன் 'முகத்தை' நம் பக்கம் திருப்பிக் காட்டியுள்ளார், கவிச் சக்கரவர்த்தி. 'மொழிந் தான் முகத்தின் முன்னர்' என்ற சொற்றொடரைக் கையாண்டு!

## 36. உன் தன் ஓங்கு அரு மகன்!

இராமன் மறைந்திருந்து வாலியை வீழ்த்தினான் வாலி தன்னை இராமன் வதைத்தது நெறிமுறையானது அன்று என வாதிட்டான்; இறுதியில், சுக்கிரீவனை இராமனிடத்தில் அடைக்கலப்படுத்தினான். அடுத்தபடியாக,

"... ... .......................................வல்லை
உய்த்தனை கொணர்தி, உன் தன் ஓங்கு அருமகனை"
(4080)

என்று சுக்கிரீவனிடம் கூறினான். அவனும் கூவி அழைத் தான்.

"..............................அணைந்தான் என்ப
கைத் தலத்து உவரி நீரைக் கலக்கினான் பயந்தகாளை"
(40 0)

என, அங்கதனைக் கம்பர் கொணர்ந்து நிறுத்துகின்றார்!

'உவரி நீரைக் கலக்கினவன்' வாலி. அந்த வாலி, தன் தம்பியினிடம் 'உன் மகனை' என்று தான் கூறினான். ஆனால், சுக்கிரீவன் அழைத்ததோ வாலி மகனை—அங்கதனை! இதனால் சுக்கிரீவனுக்குப் பிள்ளை இல்லை என்பது தெளிவு. ஆனால், அங்கதனையே தம்பி சுக்கிரீவனுக்கு மகனாய் உரிமையாக்குகிறான், வாலி! ஏன்? 'என்

தன் ஓங்கு அரு மகனை' என்றோ' 'நம் தம் ஓங்கு அரு மகனை' என்றோ கூறியிருந்தாலே சாலுமே!

ஆன்றோரும், சான்றோரும், அமைச்சரும் சேர்ந்து அன்று வாலி கொல்லப்பட்டான் என்று கருதி, நாட்டிற்கு மன்னன் இன்றி இருத்தல் கூடாது என்று நினைத்தனர். உடனே அவர்கள் என்ன செய்திருக்க வேண்டும்? முறைமை தவிர்தல் இன்றி, மரபு மாறாமல், வாலியின் வாரிசு ஆன அங்கதனுக்கு முடிசூட்டியிருக்க வேண்டும்; அவன் பிள்ளைப் பருவம் தாண்டாதவன் என்ற காரணத்தால் அவனுடைய சிற்றப்பனான சுக்கிரீவனை அரசியல் விவகாரங்களைக் கவனித்துக் கொள்ளும்படி செய்திருக்க வேண்டும். இதுதானே மனு நீதிக்கு ஒத்தது?

இதனை விடுத்து, வாலியின் இளையவனான சுக்கிரீவனுக்கே முடிசூட்டினர். இந்த அடிப்படைத் தவற்றினால் தான் வாலியின் சினம் முதலாய தொடர் நிகழ்ச்சிகள் நடந்தேறின. அங்கதனை ஆட்சி பீடத்தில் அமர்த்தி வாலி சினந்திருந்தால் அனுமன் முதலாயினோர் தாங்களே அதற்குப் பொறுப்பு என்று விளக்கி யிருந்தால் அவன் அப்பொழுதே சினம் தணிந்திருப்பான். மீண்டும் தான் முடிசூடி அனைவருமே ஒற்றுமையாக இருந்திருப்பர். 'ருமை' கதையை ஜோடித்து—கற்பனை செய்து—வீண் விவகாரத்தை உண்டு பண்ணியிருக்கவும் முடியாது; இப்போதைய வாலிவதம் தேவைப்பட்டும் இருக்காது, நடந்தும் இராது.

நீதி நெறி தெரிந்தவர்களும் 'வாலி கொல்லப்பட வேண்டியவனே!' என்றெல்லாம் காவிய அடிப்படை நிகழ்ச்சி ஏதுமின்றி உறுதிப்படுத்தவும் இயலாது!

அவ்வாறு, சுக்கிரீவனுக்கு மகுடம் சூட்டியது மட்டும் அன்று; அங்கதன் என்று ஒரு மகன் வாலிக்கு இருந்தான் என்ற உண்மையே யாருக்கும் தெரியாதது போல் இருந்துவிட்டனரே! சாகக் கிடக்கும் தன் தந்தை விழைந்

ததால் அல்லவா அவன் காட்சிக்கே கொண்டு வரப் பெற்றுள்ளான்!

வாலி—சுக்கிரீவன் குடும்பச் செய்திகள் முழுவதையும் இராமனிடம் விளக்கிக் கூறிய அனுமன் கூட 'இராமனிடத்தில் வாலிக்கு ஒரு மகன் உண்டு; பெயர் அங்கதன்' என்று கூறவில்லையே! கூறினால், 'வாய்மையும் மரபும் காத்து மன உயிர் துறந்தவள்ளல்' திருக்குமாரனாகிய இராமன், 'அங்கதன்—உரிமைப் பிள்ளை இருக்க சுக்கிரீவனுக்கு மகுடம் சூட்டியது சரியன்று. எனவே, வாலி சினந்ததும் பிழை அன்று, என்று நியாயம் கூறிடுவான், என்று அஞ்சினானோ? அதன் விளைவாக வாலிவதம் நடைபெறாது போகும் என்று ஐயுற்றானோ!

" சுக்கிரீவனுக்கு, 'வாலியின் தம்பி' என்ற உரிமை மட்டும் தான் உண்டு"

என்பதைக் கம்பர் உணர்வார். அதனால் தான் சுக்கிரீவனை வாலி பார்த்த பார்வையைக் காட்டும் பொழுது,

"..........உரிமைத் தம்ம மாமுகம் நோக்கி" (4080)

என்று கவிக் கூற்றாகப் பாடினார். அவர் தொடர்ந்து அந்தக் கருத்திலேயே நின்றுவிட்டால் என்ன செய்வது என்று பயந்த வாலி தானாகவே,

"...............உன்தன் ஓங்கு அருமகனை" (4080)

என்ற உரிமையையும் வழங்கி விட்டான். இப்பொழுது, வாலியின் மகன், சுக்கிரீவனின் மகனாகவே ஆகிவிட்டான்! இந்த உரிமையை ஏன் வாலி வழங்கினான்?

"நான் இராமனுடன் உரையாடி இருந்த பொழுது, வந்த செய்திகளில் அங்கதன் பற்றி இராமன் ஒன்றுமே குறிப்பிடவில்லை; அதனால், எனக்கு ஒரு நேர் வாரிசு இருக்கிறான் என்பதை அவன் அறிந்திருக்க வில்லை எனத் தெரிகின்றது; முன்னமேயே என் ஆட்சி பீடத்தில்

சுக்கிரீவனை உட்கார வைத்ததை நான் திரும்பப் பறித்துக் கொண்டேன். ஆக, சுக்கிரீவன் தான் எனக்குப் பின்னாலான நேர் வாரிசு என்று இராமன் தவறாக எண்ணியிருந்திருக்கிறான். அதனால்தான்,

"உலகம் ஏழினோடு ஏழும் வந்து அவன்
உயிர்க்கு உதவி
விலகும் என்னினும், வில்லிடை வாளியின் வீட்டி,
தலைமையொடு, நின் தாரமும், உனக்கு இன்று
தருவென்" (3855)

என்று இராமன் சுக்கிரீவனிடம் சூளுரைத்தான்! அங்கதன் என் மகன் என்று அவன் அறிந்திருந்தால் அவ்வாறு சொல்லியிருக்க மாட்டான்!

இந்த முறையான உரிமையினால் தான் இலங்கைக்கு தூதாக அங்கதன் சென்று இராவணனோடு பேசியிருக்கையில், இராவணன்,

"அந்நரர் இன்று, நாளை அழிவதற்கு ஐயம் இல்லை;
உன் அரசு உனக்குத் தந்தேன்; ஆளுதி ஊழிகாலம்;
பொன் அரி சுமந்த பீடத்து, இமையவர் போற்றி
செய்ய,
மன்னவன் ஆக, யானே சூட்டுவென், மகுடம்" (7000)

என்று சொல்வதாகக் கம்பர் பாடியுள்ளார்!

எப்படியோ! இராமன் ஒன்றைச் செய்தால் அது முறை கேடானது ஆகக் கூடாது! எனவே, அங்கதனை— எனக்குப்பின் பட்டத்துக்கு உரிய என் மகனை—சுக்கிரீவனின் மகனாகவே ஆக்கிவிட்டால் 'அரசு அங்கதனுக்கு' என்ற முறைமை மாறி விடும். சுக்கிரீவன் அரசன் ஆனால் அங்கதன் இளவரசன் ஆவான் என்று வாலி தனக்குத்தானே கருதினான். அவ்வாறு அழுத்தம் திருத்தமாக 'உன் மகனை' என்று குறிப்பிட்டான்! எனவேதான், பின்னால் அரசியல் படலத்திலும்,

"அளவு இலா ஆற்றல் ஆண்மை அங்கதன்,
அறம் கொள் செல்வத்து-
இளவரசு இயற்ற ஏவி .........!" (4147)

என்று கம்பர் பாடுகின்றார்!

அங்கதன் வந்ததைப் பார்த்துக் கொண்டிருந்தான், இராமன்; அவன் தான் சுக்கிரீவனின் ஓங்கு அரு மகன் போலும் என நினைந்தான். ஆனால், வந்தவனோ,

"எந்தையே! எந்தையே!" (4083)

என ஓலமிட்டான்! அவனுக்கு வாலி தேறுதல் கூறிய பொழுது,

"மால் தரும் பிறவி நோய்க்கு மருந்து என
வணங்குமைந்த!" (4089)

எனக் கூறியதும் அங்கதன் வாலியின் மைந்தனே என்று உறுதியாகத் தெளிந்தான், இராமன்! அப்பொழுதுதான் தன் செய்கைகளில் பிழை புகுந்து விட்டது என்று வருந்தலானான்.

உற்ற மகன் உரிமைக்கு இருக்கவும் அதனை அறிந்து கொள்ளாமலே, சுக்கிரீவனுக்கு முடிசூட்டுவதாக உறுதி கூறியது ஒரு பிழை என மனம் வெதும்பினான்.

நேர்ந்து விட்ட ஒரு பிழைக்காக தன்னால் விடையிறுக்க முடியாத தவிப்பில் இருந்தான் இராமன்!

தன்னைத் தாக்கியது இராமனின் அம்பு என்று கண்டு கொண்டான், வாலி; தன் எதிரில் இராமன் வந்ததும், அவன் தன்னைக் கொன்றது நியாயம் அற்றது என்று வாதாடினான். இராமனோ தன் செய்கைக்கு நியாயம் கற்பித்தான். அப்பொழுது,

"தருமம் இன்னது எனும் தகைத் தன்மையும்,
இருமையும் தெரிந்து, எண்ணலை; எண்ணினால்,
அருமை உம்பிதன் ஆர் உயிர்த் தேவியை,
பெருமை நீங்கினை, எய்தப் பெறுதியோ?" (4043)

என்று இராமன், வாலியைக் கேட்டான்! அனுமன் கூறிய குற்றச் சாட்டை நம்பி, இந்த நம்பி கேட்டது சரியே!

ஆனால், அக் குற்றச்சாட்டையே மறுத்தான், வாலி! இராமனிடம்,

"எங்களுக்கு வேத முறைப்படி நடக்கும் திருமணம் என்பதுவும் இல்லை; மனம் போன போக்கில் செயல் படுவதே அல்லாமல் எங்கள் குலத்திற்கு என்று தரும நெறிகளும் இல்லை; இது நாங்கள் பெற்றுள்ள தன்மை; ஆனால், இந்தப் பொதுப் போக்கைக் கூறினேன் என்பதால் நான் தம்பியின் மனைவியை அனுபவித்தேன் என்று கருதி விடாதே! நான் குற்றம் இல்லாதவன்" என்ற பொருள் உணர்த்தி,

" மணமும் இல்லை, மறைநெறி வந்தன;
குணமும் இல்லை, குல்முதற்கு ஒத்தன;—
உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுக்கு அலால்—
நிணமும் நெய்யும் இணங்கிய நேமியாய்! (4047)

பெற்றி மற்று இது; பெற்றது ஓர் பெற்றியின்
குற்றம் உற்றிலன்; நீ, அது கோடியால்!" (404!)

என்று கூறினான்.

ஆனால், அம்பு எய்து விட்ட நிலையில் இராமன், 'இந்த எங்களுடைய பொதுத் தன்மையால் நான் செய்தது பிழை அன்று என்று வாலி கூறித் தப்பிக்க முயல்வதாகக் கருதிக் கொண்டான்.

"தக்க இன்ன. தகாதன இன்ன, என்று
ஒக்க உன்னலர் ஆயின், உயர்ந்துள
மக்களும் விலங்கே; மனுவின் நெறி
புக்கவேல், அவ்விலங்கும் புத்தேளிரே" (4054)

என்றெல்லாம் பேசிக் கொண்டிருந்தான். இதே இராமன் தான், இளவலின் கேள்விக்கு,

"பித்து ஆயவிலங்கின் ஒழுக்கினைப் பேசல் ஆமோ?" (3977)

என்று பதில் இறுத்தவன்.

'சரி. இராமனிடம் மீண்டும் மீண்டும் சொன்னதையே சொல்லிக் கொண்டிருக்க வேண்டா என்று கருதி, வாலி, இராமன் தன் மேல் மறைந்திருந்து அம்பு எய்தது ஏன் என்று கேட்டான். இராமனுடைய திகைப்பை சமாளிக்க, இலக்குவன் ஏதோ பதில் சொன்னான்!

இந்த நிகழ்ச்சியினால் ஏற்பட்ட தவிப்பில் இருந்த இராமனுக்கு, வாலி—அங்கதன் உறவு முறைத் தன்மை மற்றொரு தவிப்பைக் கூட்டியது. அதனால், தன்னைத் தொழுத அங்கதனிடம் இராமன் தன் உடைவாளைக் கொடுத்து இந்தப் பிழையைப் பொறுத்துக்கொள் என்றான்; தன் பிழையுணர்ந்த மனோ நிலையில்.

"............நீ இது பொறுத்தி" என்றான். (4093)

இந்த, பிழை உணர்வு இராமனின் மனத்தில் உறுத்திக் கொண்டே இருந்ததால் தான், சுக்கிரீவனுக்கு மகுடம் சூட்டி, அறிவுரை கூறத் தொடங்கியதும்,

"ஈண்டு நின்று ஏகி, நீ நின் இயல்பு அமை
இருக்கை எய்தி,
வேண்டுவ மரபின் எண்ணி, விதிமுறை இயற்றி, வீர!
பூண்ட பேர் அரசுக்கு ஏற்ற யாவையும் புரிந்து, போரில்
மாண்டவன் மைந்தனோடும் வாழ்தி நல் திருவின்
வைகி." (4121)

என்றுரைத்தான்!

இவ்வாறு ''இறந்த வாலியின் மைந்தனோடும் வாழ்க'' என்று இராமன் சொல்ல வில்லை யென்றால், சுக்கிரீவன் அங்கதனைத் துரத்தி விடுவானோ? இல்லை! மன்னனாய் இருக்க வேண்டியவன் போரில் மாண்ட வாலியாகிய உன் அண்ணனின் மகனே; என்றாலும், இங்கே உனக்கே மகுடம் சூட்டப் பெற்று விட்டது; நீ நாடு சென்று உனக்கேற்ற இயல்பான இருக்கையில் இருப்பாயாக; இருந்து கொண்டு, கிட்கிந்தைப் பேரரசு செவ்வனே நடைபெறுவதற்கான வழி வகைகளை அங்க தனோடு கூடிச் செய்வாயாக' என்று அங்கதனுக்குச் சிறப்புக் காட்டிப் பேசினான்!

மேலும், அங்கதன் இராமனிடம் விடைபெற்றுக் கொள்ளச்சென்ற பொழுது, அங்கதன், கிட்கிந்தை ஆட்சி தன் தந்தைக்குப் பின் தனக்குத் தானே வரவேண்டும் என்ற உரிமைப் போராட்ட மெல்லாம் மேற்கொள்ளா மல் பெரியவர்களின் சொல்லிற்குக் கட்டுப்பட்டிருந்த பெருந்தகைமையை இராமன் நினைந்து பார்த்தான்!

'' சீலம் நீ உடைய ஆதல், இவன் சிறுதாதை என்னா,
மூலமே தந்த நுந்தை ஆம் என முறையின் நிற்றி''
(4140)

என்று அங்கதனிடம் இராமன் கூறிப் போற்றி 'நாடு சென்ற பின் உன் உரிமையைக் கோராமல், இவன் என்ன என் சிற்றப்பன்தானே என்று சுக்கிரீவனை நினை யாமல் உன் தந்தையே என்ற முறையில் நிற்பாயாக; அவனே நாடாளட்டும்' என்று மறுபடியும் நினைவுறுத் தியதே ஆகும்! இல்லையென்றால் விடைபெற வந்த வனிடம் அவன் சீலம் பற்றியும், அவன் உறவு முறை களைப் பற்றியும் பேசுவாவேன்?' வேறு ஆசியுரை வழங்க இராமனுக்குத் தெரியாதா!

அது மட்டுமா! சுக்கிரீவனோடு அனுமனும் கிட்கிந் தைக்குச் செல்ல வேண்டும் என்று வற்புறுத்திய பொழுது,

'' நிரம்பினான் ஒருவன் காத்த நிறை அரசு இறுதி நின்ற
வரம்பு இலாததனை, மற்று ஓர் தலைமகன் வலிதின் கொண்டால்,
அரும்புவ நலனும் தீங்கும்'' என்றான். (4143)

அதாவது 'வாலியின் ஆட்சியைச் சுக்கிரீவன் வலிய என் மூலம் பிடுங்கிக்கொண்டான்' என்று இராமன் கூறினான் என்பதாகும்.

இந்த ஆழ் பொருள்களை எல்லாம் புரிந்து கொள் ளாமல், அல்லது புரிந்து கொண்டாலும் இராமன் மீது குற்றம் சாட்டலாகாது என்ற அச்சத்தால், மதம் மாறிய வர்களும், பழமையிலேயே நிற்கின்றார்கள்! வாலியின் பிழையில்லா நிலையை உணர்ந்து அந்த இராமனாகிய பரம் பொருளே அவனுக்கு,

'' அந்நிலை துறந்து, வானுக்கு அப்புறத்து உலகன் ஆனான்'' (4093)

என்ற நிலையைத் தந்துள்ளதையும் நினைந்து பாராமல் எழுதுகின்றனர் 'வாலி—ருமை' கற்பனைத் தொடர் பைத்தாம் இன்னமும் தம் அறியாமையால் பிடித்துக் கொணடிருப்பது மட்டுமா! அக்குற்றம் இராவணன் செவிக்கும் சென்றதைப் போலேயும், அவன் நம்பியதைப் போலவும் ஒரு தொடர் கற்பனை கொள்கின்றனர்! அதனால், வாலியை வதம் செய்யாமல் அவனைக் கூட்டாக்கிக் கொண்டு இராமன் இராவணனோடு போர் செய்யச் சென்றிருந்தால், 'உன் கூட்டாளி தன் தம்பியின் மனைவியைக் கவர்ந்தவன் தானே!' என அவன் இராமனைக்கேலி செய்திருப்பான் என்றெல்லாம் கனவு கண்டு எழுதுகின்றார்கள்!

'உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல்' என்னும் பெருந்தன்மைக்கொவ்வாது போகின்றது இக்கற்பனைக் கேளிக்கை!

இராவணன் மாவீரன் தன் பிழை உணர்ந்தும் 'நான்' என்னும் பிடிவாதத்தால்தான் சீதையை விடுவிக்காமல் இறுதி வரை போர் செய்தான். அவன், இராமனைக் கேலி செய்து அவன் மனத்தைப் புண்படுத்த வேண்டும் என்ற ஒரு கீழ்த்தரமான நோக்கும் கொண்டிருந்தால் வேறு செய்தியா இல்லை? இராமன் வாலியை மறைந்து நின்று கொன்ற வில்லறம் துறந்த மாண்பினைச் சுட்டிக் காட்டிக் கிண்டல் செய்திருக்க முடியாதா?

'வீரனை வீரனே அறிவான்; வீரனை வீரனே மதிப்பான்! என்ற பாங்கில் மாவீரனான இராவணன் இராமனை ஏளனம் செய்யவில்லை என்பது மட்டும் அல்ல! அவன் இராமனை,

"சிவனோ? அல்லன்; நான்முகன் அல்லன்;
திருமாலாம்
அவனோ? அல்லன்; மெய்வரம் எல்லாம்
அடுகின்றான்;
தவனோ என்னில் செய்து முடிக்கும் தரன் அல்லன்
இவனோதான் அவ்வேத முதல் காரணன்?" (9837)

என்றெல்லாம் மேன்மையாய்க் காண்கின்றான்! பரம்பொருளை உணர்கின்றான்! வெளிப்படையாகவே பாடுகின்றான். அதனால் அன்றோ, அந்தத் தெள்ளிய உள்ளத்து மாவீரனின் முகங்கள் அவன் வீழ்ந்துபட்ட பின்னும் மும்மடங்கு பொலிந்தன!

இயற்கை எய்தியவர் எவருடைய குற்றத்தையும் மறந்து அவருடைய நற்குணம் பற்றிப் பேசுதலே சீரியது; நம் மரபும் கூட! அந் நிலையில் இறந்துபட்ட

இராவணன்பால் இல்லாத ஒரு குற்றத்தைக் கற்பனையாக ஏற்றிப் பேசுதல் வீரனை வீரனாக மதிக்கத் தெரியாத எளிமையே! அவ்வெளிமைக்குக் காரணம் இராமன் யார் என்ற மனத்தெளிவு நமக்கு இல்லாமையே! அவனை மனிதன் என்று இலக்கிய நோக்கில் கொண்டால் அவனை எப்பொழுதும், எங்கும், எதிலும் மனிதனாகவே கண்டு அவனை விமர்ச்சிக்கும் வீர உள்ளம் வேண்டும்! இல்லை; அவனைப் பரம்பொருள் என்றோ, அவதாரன் என்றோ? தான் அவதாரன் என்பதை இராமன் ஒரு பொழுதும், உணர்ந்ததே இல்லை என்றோ பக்தி மனப்பான்மையோடு பார்க்க வேண்டுமென்றால் அவனுடைய செயல்களை ஆராயும் தகுதி நமக்குஇல்லை என்று எந்தவித ஆய்விலும் புகாத பேருள்ளம் வேண்டும்! இவ்விரண்டும் இன்றி நாம் இராமனைப் பார்த்துக் கொண்டிருந்தால் நமக்கு விமோசனமே இல்லை!

## 37 கைகளால் மௌலி மிலைச்சுவாய்

வாலியின் இறுதிக் கடன்கள் நடந்தேறின. மறுநாள் பொழுது புலர்ந்ததும், இராமன், இளவலை நோக்கி,

"கதிரோன் மைந்தனை ஐய! கைகளால்,
விதிபால் மௌலி மிலைச்சுவாய்" என்றான் (4116)

முடி கவித்தலை, கைகால்கள் அன்றிக் கால்களாலா செய்வர்! அப்படியிருக்க இராமன் ஏன் 'கைகளால்' என்ற சொல்லைப் பெய்தான்? கவிதையில், இடத்தை நிரப்புவதற்காக மோனைச் சொல்லாகக் கவிச் சக்கரவர்த்தி அச் சொல்லைப் பெய்தாரோ!

இல்லை, இல்லை! கம்பர் தம் கைகளால் நம்மைப் பழைய காட்சி ஒன்றிற்கு அழைத்துச் செல்கின்றார்!

"......................கிளர் ஞாலம் வரத்தினாலே
மீட்டாள்; அளித்தாள் வனம் தம் முனை, வெம்மை
முற்றி,
நீட்டாத வேல் கண் சிறு தாய் எனக் (கேட்டான்
இளையோன்;) யாவராலும்
மூட்டாத காலக் கடைத் தீ என மூண்டு எழுந்தான்"
(1716)

'கைகேயின் செய்கை நன்று நன்று' எனக் கைகளைப் பிசைந்து ஏளனம் கூட்டிச் சினத்தால் சிரித்தான்.

'எதிர்த்து வந்தவர்களை எல்லாம் அழித்து ஒழிப்பேன்; பூமியின் பாரமாவது குறையட்டும்! என் தமயன் இராமனுக்குத் திருமுடி கவிழ்ப்பேன், இதனைத் தடுக்க முடிந்தவர் தடுத்துக் கொள்ளுங்கள்' என்று கர்ஜித்தான்.

இராமன் இதனை அறிந்து இலக்குவனிடம் வந்தான்; 'நீ இவ்வாறு சினந்து நிற்பது ஏனோ'? என்று கேட்டு நின்றான் இலக்குவன்,

"வலக்கார் முகம் என் கையது ஆக அவ்வானுளோரும்
விலக்கார்; அவர் வந்து விலக்கினும், என் கை
வாளிக்கு
இலக்கா எரிவித்து, உலகு ஏழினோடு ஏழும், மன்னர்
குலக் காவலும், இன்று, உனக்கு யான் தரக்கோடி"
என்றான். (1729)

இராமன் இலக்குவனைச் சாந்தப்படுத்தினான்; வேறு வழியின்றி, இலக்குவன்,

"...................... இருதோள் எனச் சோம்பி ஓங்கும்
கல்லும் சுமந்தேன்;........,..............................."(1746)
என்று தன்னைத் தானே நொந்து கொண்டான்!

அந்தக் காட்சி நினைவிற்கு வந்ததும், இராமன், "நீ எந்தக் கைகளால் உன் தமையனாகிய எனக்கு மகுடம் சூட்டத் துடித்தாயோ அந்தக் கைகளால். 'இப்பொழுது, சுக்கிரீவனுக்கு முடி சூட்டுவாயாக; ஆம், அந்த சுக்கிரீ வனும் உன் தமையனே அன்றோ என்று கூறுவதைப் போலே, "கைகளால் மௌலி மிலைச்சுவாய்'; என்றான்.

அது மட்டுமா! 'விதியாய்' என்ற ஒரு சொல்லையும் அச் சொற்றொடரின் இடையில் வைத்து, "கைகளால், விதியால் மௌலி மிலைச்சுவாய்" என்றான்!

'விதியால்' என்ற சொல்லிற்கு 'விதி முறைப்படி— நெறி முறைப்படி' என்று பொருள் கொள்வதில் பிழை இல்லை. ஆனால், முடிசூட்டு விழாவை இவர்கள் எங்கு கண்டார்கள்? தனக்கே நடக்க இருந்ததையும் இராமன் இழந்தானே! பரதனாவது சூடிக்கொண்டானா என் றால் அவனும் இராமனின் திருவடிகளை அல்லவா தன் தலைமீது சுமந்து சென்றான்! நூல்களில் தாங்கள் பயின்றிருந்த வண்ணம் செய்ய முடியும்; அவ்வாறு தான் நடந்தது என்பதை,

" துறையோர் நூல் முறை மௌலி சூட்டினான் "
(4119)

என்று கம்பரும் கூறியுள்ளார்!

என்றாலும் அவ்வாறு கொண்டால், அனுபவ பூர்வ மில்லாத எந்த ஏட்டுக் கல்வி ஞானமும் முழுமை பெறாதே!' என்று சிந்திக்கும் பொழுதுதான், அந்த 'விதியால்' என்னும் சொல் இருபொருள் காட்டி நிற்கக் காண்கின்றோம்!

ஆதியில், இலக்குவனை இராமன் சமாதானப்படுத் திய பொழுது, தனக்கு முடியின்றிப் போனது விதியின் விளைவு என்றான்.

அடுத்து. சுக்கிரீவனை இலக்குவன் சந்தேகித்த போது இராமன், 'விலங்குகளிடம் நியாயத்தை எதிர் பார்க்கக்கூடாது' என்று கூறிவிட்டான்; ஆனாலும், வாலியின் நியாயமான வினாக்களை ஆய்ந்து பார்த்த இராமன், தன் கையால் வாலி வீழ்ந்தது அவன் விதியே என்று கருதினான்; அதேபோல் வாலியின் நேர் வாரிசாக அங்கதன் இருந்தும், அது தெரியாமல் சுக்கிரீவனுக்குத் தான் முடிசூட்டுவதாக வாக்குக் கொடுத்துவிட்டதும் விதியின் விளைவே என்றும் கருதினான். அதனால் ''இது பொறுத்தி'' என்று அங்கதனிடம் வருத்தமும் தெரிவித்துக் கொண்டான். எனவே, 'எனக்கு மகுடம் இன்றிப் போனது விதியால் என்று அன்று கூறினேனே, நினைவிருக்கின்றதா? அதே போன்று வாலி இறக்க நேர்வாரிசான மகன், அங்கதன் இருக்க. சுக்கிரீவனுக்கு விதியால், கிட்கிந்தை அரசு இப்பொழுது கிடைத்துள்ளது!

தாரை இலக்குவனிடம் பேசும் பொழுது,

'' செம்மை சேர் உள்ளத்தீர்கள் செய்தபேர்
உதவிதீரா;
வெம்மை சேர் பகையும் மாற்றி, அரசுவீற்
றிருக்கவிட்டீர் '' (4326)

என்றாள்.

இரண்டாம் அடியில் வருகின்ற 'உம்'மை அவளுடைய அடி மனத்தை, கருத்தைக் காட்டுகின்றது! 'வெம்மை சேர் பகை மாற்றி விட்டீர்' என்று கூறியிருந்தாளேயானால் 'வாலியைக் கொன்று' அரசை மாற்றினீர்கள் என நின்றிருக்கும். 'வெம்மை சேர் பகை மாற்றி அரசு வீற்றிருக்க விட்டீர், என்று கூறியிருந்தால், 'வாலியைக் கொன்று சுக்கிரீவனை அரசுக் கட்டிலில் அமர்த்தினீர்கள் என்று பொருள்பட்டிருக்கும். ஆனால் 'தன்

கணவன் வாலி இறந்தபின் தன் மகன் அரசு பீடத்தில் அமர உரிமையுள்ளவன் என்று எண்ணியதால், 'வாலியைக் கொன்றீர்கள்; தவறாக, இடையில் அரசு பீடம் ஏறி இறங்கிய அந்த சுக்கிரீவனையே மறுபடியும் தொடர்ந்து அரசு பீடம் பெற்றிடவும் செய்து விட்டீர்கள் என்ற தன் கருத்தினை இலக்குவனுக்கு உணர்த்தவே 'உம்'மையைக் கையாண்டுள்ளாள்.

'அங்கதன் இருக்க சுக்கிரீவனுக்கு ஆட்சி வந்ததை கிட்கிந்தையில் உள்ள சிலரும் ஒத்துக் கொள்ளவில்லை; இராமனின் நட்பால் வந்ததால் அதனை எதிர்க்காமல் விரோதம் பாராட்டினர்' என்றும் சூசகமாகத் தெரிகின்றது.

இலக்குவனிடம் இங்கிதமாகப் பேசும் அனுமன், முதலில்,

"............................மாயா
உதவி கொன்றார்க்கு ஒன்றானும் ஒழிக்கலாம்
உபாயம் உண்டோ?" (4330)

என்று அவர்கள் செய்த உதவி அழியாத ஒன்று எனக் கூறினான். தொடர்ந்து பேசி நிற்கையில்,

"ஈண்டு, இனி நிற்றல் என்பது இனியது ஓர்
இயல்பிற்று அன்றால்;
வேண்டலர் அறிவரேனும், கேண்மை தீர்வினை
யிற்று ஆமால்; (4335)

என்றான். அவர்களுக்கு வேண்டாதவர்கள் யார்? வெளிநாட்டு விரோதிகளோ அல்லர்! இருந்திருந்தால் அப்பிரச்சினையையும் அப்பொழுதே இராமன் முடித்திருப்பான். ஆனால்,

"நிரம்பினான் ஒருவன் காத்த நிரை அரசு இறுதிநின்ற
வரம்பு இலாததனை மற்றுஓர் தலைமகன் வலிதில்
கொண்டால்

அரும்புவ, நலனும் தீங்கும்; ஆகலின், ஐய! நின்போல்
பெரும் பொறை அறிவினோரால், நிலையினைப்
பெறுவது அம்மா! '' (4143)

என்று இராமனே அனுமனிடம் உள்நாட்டுப் பகைமை தோன்றினாலும் தோன்றும் என்று குறிப்புணர்த்திக் கூறினான் அல்லவா? அவ்வாறே, வேண்டலர் தோன்றினர் என்பது தெளிவு. எப்படியோ, அவ்வாறு விதியால் கிடைத்த மௌலியைச்சூட்டுவாய்! என்ற கருத்தை மறை பொருளாய் அமைத்து,

'கைகளால், விதியால் மௌலி மிலைச்சுவாய்! என்று இராமன் இலக்குவனைப் பணித்தான் எனக் கண்டு பூரிக்கின்றோம்.

தொடர்ந்து பார்ப்போமானால், உண்மையில் இலக்குவன் தன் கைகளால் சுக்கிரீவனுக்கு இராமன் சொற்படி முடிசூட்டினானே அன்றித் தன் நெஞ்சார அவனை அந்நாட்டு மன்னனாக ஏற்றுக்கொள்ளவில்லை என்பதுவும் விளங்கும்.

அதற்குக் காரணம் ஏற்கனவே 'சுக்கிரீவன் மேல் இருந்த வெறுப்புணர்ச்சியே! அதனை இலக்குவன்,

'' ........................அறத்தாறு அழுங்கத்
தேற்றாது செய்வார்களைத் தேறுதல் செவ்விது
அன்றால்
மாற்றான் எனத் தம்முனைக் கொல்லிய வந்து
நின்றான் '' (3976)

என்று இராமனிடமே வெளிப்படுத்தியுள்ளான்!

இலக்குவன் தன் கருத்தை வேண்டா வெறுப்பாக அனுமனிடமே சொல்வான்:-

" முன்னும், நீ சொல்லிற்று அன்றோ முயன்றது;
முயற்றுகாறும்,
இன்னும் நீ இசைத்த செய்வான் இயைந்தனம்"
(4344)

என்று கூறினான். அதாவது, நாங்கள் இதுவரை செய்தது எல்லாம் சரியென்று உறுதிப்படுத்திக்கொண்டு செய்யவில்லை; நீ சொன்னதை அப்படியே செயல் படுத்தினோம்! சீதையை மீட்கும் வரை அவ்வாறே உன் சொற்படியே செய்துதானே ஆக வேண்டியுள்ளது என்றவாறு!

இதனை அங்கதன் தெரிந்து கொண்டிருந்ததனால், சுக்கிரீவனிடம்,

" ..................... ............ ......முற்றும்
நயம் தெரி அனுமன் வேண்ட, நல்கினன்,
நம்மை இன்னும்" (4349)

என்றும் கூறுகின்றான்!

கார் காலத்தின் தூண்டுதல்களினால் நொந்து இராமன் புலம்பிக் கொண்டிருந்தான். இலக்குவன் அவனுக்குத், தேறுதல் மொழிகள் கூற முற்பட்டான். அப்பொழுது, 'சீதையைத் தேடுவதற்கு இன்னமும் வானர சேனை வரவில்லையே என்று வருந்து கின்றாயா?' எனக் கேட்க வந்த இலக்குவன் அச் சேனையை 'சுக்கிரீவனின் சேனை' என்று குறிப்பிட வில்லை; 'குரங்குச் சேனை' என்று குறிப்பிடவில்லை; 'கிட்கிந்தைச் சேனை' என்று குறிப்பிடவில்லை.

" வாலி சேனை மடந்தை வைகு இடம்
நாட வாரல் இலாமையோ?" (4212)

என்று இன்னமும் கிட்கிந்தையை வாலியின் நாடாகவும், அதன் சேனையை வாலியின் சேனையாகவுமே தான் கருதிப் பேசினான் என்று உணர்கின்றோம்!

# 38. வெகுண்டு அவன் சாதியாது போதி ஆதி!

கார்காலம் முடிந்தது. ஆனால், சொல்லிச் சென்ற வண்ணம் சுக்கிரீவன் படையுடன் வரவில்லை, சீதையைத் தேடச் செல்வதற்கு. இராமன் வெகுண்டான். தம்பியிடம் அது குறித்துப் பேசலானான். சினம் கொந்தளிக்க, சுக்கிரீவன் வாராது இருந்தானேயானால் அவன் என்ன ஆவான் என்றெல்லாம், இலக்குவனை, சுக்கிரீவனிடம் 'நீதிகளை எடுத்துரைத்து நன்றி மறவாத தன்மையொடு வரச்சொல்' என்றான். அப்பொழுது,

" நீதி ஆதி நிகழ்த்தினை, நின்று, அது,
வேதியாத பொழுது, வெகுண்டு, அவன்
சாதியாது, அவர்சொல் தரத் தக்கனை;
போதி ஆதி'' என்றான். (4276)

இராமன் குரக்கினத்தையே அழிப்பதாகச் சினந்து பேசினான்; இப்பொழுது, சுக்கிரீவனை இலக்குவன் அங்கேயே தண்டிக்காமல் அவன் சொல்லும் சொல்லை மட்டும் கேட்டு வரச் சொல்கின்றானே! ஏன்?

இலக்குவன், சினம் பூண்டானேயானால் எதிரிகளை நிர்மூலமாக்கி விடுவான்; அவர்களை அழித்துவிடவில்லை என்றாலும் அவர்கள் அழிந்ததற்குச் சமமான நிலையில் அவர்களின் அங்கங்களை அறுத் தெறிந்து மானபங்கப் படுத்தி விடுவான். இதனை அறிந்ததனால்தான் இராமன் முன்னம் ஒருமுறை,

" இலக்குவ! உலகம் ஓர் ஏழும் ஏழும் நீ,
'கலக்குவென்' என்பது கருதினால் அது,
விலக்குவது அரிது; அது விளம்பல் வேண்டுமோ?''
(2416)

என்று இளவலின் சினத்தை அடக்கினான்.

உடன் பிறப்பான பரதனையும் அவன் பரிவாரங்களையும் கண்டே அத்தகைய கொந்தளிப்பு உற்றான் என்றால், குரங்குகளின் மேல் எத்துணைச் சினம் கொள்வான்?

சினத்தின் நிலையால் தானே, இலக்குவன் சூர்ப்பணகையின் காது, மூக்கு, தனங்கள் ஆகிய உறுப்புகளை உடனடியாக அறுத்து எறிந்தான். அடுத்து அவனுடைய சீற்றத்தைச் சீண்டி விட்ட அயோமுகிக்கும் அதே கதி ஏற்பட்டதையும் கண்டுள்ளான். இராமன்.

அவ்வாறு, அவன் சுக்கிரீவன், அங்கதன், அனுமன் ஆகியோர் சொன்ன சொல் மாறி நிற்பாரேயானால் தன் சீற்றத்தின் உச்ச எல்லைக்கே சென்றிடுவான்; அதன் விளைவாக அவர்களைக் குறைந்த பட்சம் மான பங்கமாவது செய்து விடுவான்.

இலக்குவன் இவ்வாறு அவர்களைத் தண்டித்து விடுவானேயானால், அவர்களுடைய எதிர்ப்புக்குத் தாங்கள் ஆளாகி விடுவார்கள் என்று அஞ்சினானா இராமன்? அதன் விளைவாகச் சீதையை மீட்பதில் அவர்களுடைய துணை கிடைக்காமல் போகுமே என்று ஏங்கினானா?

இராமனுக்குத் துணை யாரும் தேவையே இல்லை. இதனை, விராதன்,

" அறம் காத்தற்கு, உனக்கு ஒருவர் ஆகும் ஒரு
துணை இன்றி,
கறங்கு ஆகும் எனத்திரிய, நீயேயோ கடவாய்
தான்" (2565)

என்று இராமனிடமே கூறினான். இலக்குவனையும் ஒதுக்கிவிட்டு இராமன் தனியொருவனாக கரதூடணரை

யும் அவர்களுடைய படையினர் முழுமையும் கொன்று வீழ்த்தியதையும் கண்டுள்ளோம்.

சினந்து வந்து சீற்றம் தணிந்து நின்ற இளவலிடம் தாரை,

"ஆண்டு போர் வாலி ஆற்றல் மாற்றியது அம்பு
ஒன்று ஆயின்,
வேண்டுமோ, துணையும் நும்பால்? வில்லினும்
மிக்கது உண்டோ?" 4327)

என்று ஏத்திப் பேசுகின்றாள்!

'இராமன் துணை தேடுவது போல் நிற்பதெல்லாம் வெறும் நடிப்பு; அவன் தன்னாலேயே சீதையை மீட்டுக் கொள்ளும் வல்லமை பெற்றவன்' என்பதை இலக்குவனும் அனுமனிடம்,

"உன்னைக் கண்டு உம்கோன் தன்னை
உற்றவிடத்து உதவும் பெற்றி,
என்னைக்கண்டனன் போல் கண்டு,
இங்கு இத்துணை நெடிது வைகி,
தன்னைக் கொண்டு இருந்தே தாழ்த்தான்;
அன்று எனின், தனு ஒன்றாலே
மின்னைக்கண்டனையாள் தன்னை
நாடுதல் விலக்கற்பாற்றோ" (4340)

என்று கேட்கும் முகத்தான் வெளிப்படுத்துகிறான். அதனால், துணைவர்கள் இன்றிப் போவரே என அஞ்சத் தேவை இல்லை.

அவன், அஞ்சியதெல்லாம், இலக்குவன் சுக்கிரீவனைக் கொன்றால், தான் வாலிக்குக் கொடுத்த வாக்கு பொய்யாகி விடுமே என்பதால்தான்!

வாலி இறக்கும் முன் சுக்கிரீவனையும், அங்கதனையும் இராமனிடம் அடைக்கலப்படுத்தி அவர்களைக் காக்க வேண்டிக் கொண்டான். அப்பொழுது,

“ ஓவிய உருவ! நாயேன் உளது ஒன்று பெறுவது
உன்பால்;

பூஇயல் நறவம் மாந்தி, புந்தி வேறுஉற்ற
போழ்தில்,

தீவினை இயற்றுமேனும், எம்பிமேல் சீறி என்மேல்
ஏவிய பகழி என்னும் கூற்றினை ஏவல்” (4068)

என்று வாலி வரம் கேட்டானே!

அங்கதனை அழைத்து இராமனிடம் காட்டி,

“ ........................... ....... மற்று உன்
கையடை ஆகும்............ .............” (4092)

என்று நம்பிக்கையோடு விட்டுச் சென்றானே!

இவை நினைவிற்கு வந்தன இராமன் தன் சினத்தின் உச்சக் கட்டத்திலும், அவர்கள் தண்டிக்கப்பட்டு விட்டால் வாலிக்கு அளித்த வரங்கள் பொய்த்து விடுமே என்று அஞ்சினான். அதனால், இளவலிடம், அவர்கள் முன்னமேயே ஒப்பியிருந்த வண்ணம் வரமறுத்தாலும் அவர்களைத் தண்டிக்காமல் அவர்கள் சொல்லும் பதிலைக் கேட்டுக் கொண்டு மட்டும் வந்து விட வேண்டும் என்பதைக் குறிக்க வந்த சொற்றொடரே, தலைப்பில் இடம் பெற்றுள்ளது எனத் தேர்கின்றோம்.

## 39 மாமியர் குழுவில் மைந்தன்!

கார்காலம் முடிந்ததும் சீதையைத் தேடுவதற்குத் தன் சேனையுடன் வராத கிட்கிந்தை மன்னவன் சுக்கி

ரீவன் இடம் நோக்கி, இலக்குவன் பெருஞ் சீற்றம் காட்டி வந்தான். கண்ட குரங்குகள் கலங்கிப் போய், ஓடிச் சென்று அங்கதனிடம் கூறினர். அவன, தன் சிற்றப் பாவிடம் சென்றான்; சென்றவன், குடிபோதையில் இருந்த சுக்கிரீவனை எழுப்பமுடியாமல், அனுமனிடம் சென்று செய்தியைத் தெரிவித்தான். இருவரும் சேர்ந்து தாரையினிடம் சென்றனர்.

செய்தி அறிந்து தாரை அவர்களை ஏசிப் பேசினாள். இந் நிலையில் குரங்குகள் கதவுகளைத் தாழிட்டன; இலக்குவனுடன் போர் செய்ய ஆயத்தப் படுத்திக் கொண்டிருந்தன. இலக்குவன் காலால் உதைத்துக் கதவுகளை உடைத்தெறிந்தான். குரங்குகள் அஞ்சி ஓடின. மீண்டும், 'என்ன செய்வது?' என்று தாரையைக் கேட்டனர்.

இடையில், மதியூக மந்திரியான அனுமன், இலக்குவனின் வழியை மாற்றி விட்டால் அவன் அவ்வழி செல்லான் என்றுரைத்தான். அதற்கு இணங்க தாரை மற்றவர்களையெல்லாம் விலகி நிற்கச் சொல்லி விட்டு, பெண்கள் கூட்டம் உடன் வர வந்து, இளவலின் வழியில் எதிர் நின்றாள். அவனுடைய பாதைப்போக்கு மாறியது. அங்கு, மென்மையான, வெண் நகை கொண்ட, வளைகளை அணிந்த, பிடி இடை தாங்க முடியாத தனங்களின் பாரத்தையுடைய மயில் போன்ற பெண்கள் நிரம்பியிருந்தனர். அவர்கள் அணிந்திருந்த ஆபரணங்களின் மின்னிடும் ஒளியையும், அவை பண்ணிடும் ஒலியையும் உணர்ந்தான், இளவல். அவனுடைய சினம் அடங்கிவிட்டது; ஆனால், அவனோ அவ் வணங்குகளைப் பார்க்கவும் நாணி முகத்தைத் தொங்கப் போட்டு நின்றான். இதனை படம் பிடிக்கும் கவிச் சக்கரவர்த்தி,

"தாமரை வதனம் சாய்த்து, தனுநெடுந் தரையில் ஊன்றி

மாமியர் குழுவின் வந்தான் ஆம் என, மைந்தன் நிற்ப''
(4316)

எனப் பாடுகின்றார்.

'மாமி மைந்தன்' என்ற முரண்பட்ட உறவுமுறைச் சொற்களைக் கம்பர் ஒரே காட்சியில், ஒரே வரியில் அமைத்ததின் உட்பொருள் என்னே?

திருமணம் நடந்தேறியதும் மணமக்களைச் சூழ்ந்து நிற்கும் குழுவில் மணமகளுக்கு இணையாகத் தன்னை அழகுபடுத்திக் கொண்டு ஆர்பாட்டமாக செயல்படுபவள் பெண்ணின் தாயாரான மணமகனின் மாமியாரே; (அந்த மாமியைச் சுற்றி நிற்கும் பெண்டிரோ அவளுக்கு இணையான வயதுடைய அலங்காரிகளாகத் தான் இருப்பர்; எனவே, மணமகன் சற்று நாணி நிற்றல் உலகியல் மனோதத்துவநிலை). அதனால், மணமகனின் தாய் அங்கு இராளோ என்று சந்தேகிக்கத் தேவையில்லை; தேவைப் பட்டால் அங்கு அவள் எழுப்பும் குரலே தாயைக் காட்டும். இந்த நிலைதான், இலக்குவனுக்கும் ஏற்பட்டது. அழகுடை மங்கையரைக் காண நாணி நின்றவன் காதில் ஒரு பெண்ணின் குரல் ஒலி கேட்டது! அவள், இராம இலக்குவரின்பெருமைகளைச் சுட்டிக்காட்டிப்பேசினாள்!

அவ்வாறு பேசியது எப்பெண்ணோ என்று இலக்குவன் தன் தலையைச் சற்றே நிமிர்த்துப் பார்த்தான். தங்களைப் பெருமையாகப் பேசினவள் யார் என்ற காரணத்தால் அவன் பார்த்திருக்க மாட்டான்; அது தற்பெருமை போலாகிவிடும்! இதனை யுணர்ந்தே, கவிச்சக்கரவர்த்தி தாரையின் வாயால்,

'' ஐய! நீ ஆழி வேந்தன் அடி இணை பிரிகலாதாய்;
எய்தியது என்னை?'' (4318)

என்று கேட்க வைத்தார்! ஆம்; அண்ணலை எப்பொழுதும் பிரியாமலேயே ஒட்டியிருக்கும் நீ இப்பொழுது எப்

படி அவனைத் தனித்திருக்க விட்டு வந்தாய்?'' என்று கேட்டாள்.

இராமனைப் பிரியாது பின் தொடர வேண்டும் என்னும் பாங்கினை இலக்குவனுக்குத் துவக்கத்திலேயே எடுத்துரைத்திருந்தாள் அவனுடைய தாய், சுமித்திரை.

'' ........ மகனே! இவன் பின் செல்; தம்பி
என்னும்படி அன்று, அடியாரினின் ஏவல் செய்தி;''
(1752)

எனக் கூறினாள். அதற்கு முன்னதாக,

'' உடன் ஏகு'' (1750)

என்று கூறியவள் தொடர்ந்து, அவன் ஏவலாளியாகச் செல்ல வேண்டும் என்றாள். ஏவலாளிக்குச் சுதந்திரமாகத் திரியும் உரிமையும், நேரமும் இல்லை என்பதால் அவள் கூறியதின் கருத்து இராமனை இலக்குவன் பிரியவே கூடாது என்பதாகும்.

அதே கருத்தினை, இப்பொழுது இராமனைப் பிரிந்து வந்திருக்கும் இலக்குவனிடம் தாரை கேட்டதும், அவனுக்குத் தன் தாயின் நினைவு வந்தது. சற்றே ஏறெடுத்துப் பார்த்தான். நின்று பேசியவள்,

'' மங்கல அணியை நீக்கி, மணி அணி துறந்து வாசக்
கொங்கு அலர் கோதை மாற்றி, குங்குமம் சாந்தம்
கொட்டாப்
பொங்கு வெம் முலைகள், பூகக் கழுத்தொடு
மறையப் போர்த்த
நங்கை''(4320)

என்று கண்டான். ஒரு தாயை நினைந்து தலை நிமிர்த்தியவன் நெஞ்சப் பார்வையில் தன்னுடைய மறுதாயார்

உருவங்களும் தெரிந்தன! தந்தை தயரதன் இறந்து விட்டதனால் அவர்களும் இந்த நிலையில் தானே இருப்பர் என வருந்திப் பெருமூச்சு எறிந்தான்.

இதனைக் கூற வந்த கம்பர்,

"இணையர் ஆம், என்னை ஈன்ற இருவரும் என்ன வந்த
நினைவினால் அயர்ப்புச் சென்ற நெஞ்சினன் நெடிது நின்றான்"
(4321)

என்று பாடுகின்றார்.

கம்பர், 'இருவரும்' என்றதனால், இலக்குவனுக்கு அப்பொழுதும் கைகேயின் மேல் இருந்த வெறுப்பு நீங்க வில்லை; அதனால்தான், அவளையும் சேர்த்து 'மூவரும்' என்னாமல், 'இருவரும்' என்றான் என்று கூறுவாரும் உண்டு! அது தவறான கணக்கு ஆகும்! தன்னை ஈன்ற —பெற்றெடுத்த—இருவரும் என்று கூறினான். கைகேயியை நீத்துப் பேசினான் என்றால் கோசலை அவனை ஈன்றாளா? சுமித்திரைதானே ஈன்றாள்! அவன் 'இருவர்' என்றதுகோசலை, கைகேயி இருவரையுமே! தன்னை ஈனாத யாற்றாந் தாயரைத் தன்னை ஈன்ற தாய் நிலையிலேயே கண்டு வளர்ந்தவன், இலக்குவன். அதனால் அவர்கள் இருவரை அச்சொல்லால் குறிப்பிட்டான்!

அப்படியென்றால், தன்னை ஈன்றெடுத்த சுமித்திரை அன்னைய அந்நிலையில் நினைக்கவில்லையா? தாரையின் குரல் கேட்டு முதலில் அவன் நினைந்ததும் நெஞ்சால் கண்டதும் சுமித்திரையைத் தானே! சுமித்திரையே தாரையாக நிற்க மற்ற இருவரையும் அவன் நினைந்தான் என்பதே கவிச்சக்கரவர்த்தி காட்டும் காட்சியாகும்!

# 40. உரைப்பது என்னோ?

கார் காலம் தீர்ந்த பின் சுக்கிரீவன் படையுடன் வந்தான். அப்படை வீரர்களைச் சீதையைத் தேடும் பொருட்டு நான்கு திசைகளிலும் அனுப்பலாயினர். அனுமனை அங்கதன் முதலியவர்களுடன் தென் திசைக்குத் திருப்பினர் அவர்களுக்குச் சுக்கிரீவன் வழியைக் கூறி ஒரு திங்களுக்குள் தேடித் திரும்ப ஆணை இட்டான்.

அனுமனை இராமன் தனி இடத்திற்கு அழைத்தான்; சீதையை, அடையாளம் கண்டு கொள்வதற்காக அவளைப்பற்றிய சில இரகசியங்களைக் கூறினான்.

இராமன் இரகசியமாக அனுமனிடத்து மட்டும் கூறினான் என்பதை, அனுமனும் உறுதிப்படுத்துவான். சீதையை அசோக வனத்தில் கண்டு, தன்னைத்தானே அவளிடம் அறிமுகப்படுத்திக் கொள்ளும் பொழுது,

"வென்றியான் அடியேன் தன்னை வேறுகொண்டு
இருந்து கூறி"

எனக் குறிப்பிடுவான்.

சீதையின் அங்கங்கள் ஒவ்வொன்றின் அமைப்பு அழகு முதலியவை பற்றி உவமைகளோடு ஒப்பிட்டு ஒப்பிட்டுக் காட்டி அவை அனைத்தும் அவளுடைய உறுப்புகளுக்குத் தோற்கும் தன்மையவே என்றெல்லாம் இராமன் வர்ணித்தான். அவளுடைய குரலெழிலையும் போற்றிப் புகழ்த்தான்.

திருமணம் ஆன புதிதில் இராமனும் சீதையும் தனியிடத்தில் பேசிக் கொண்ட சில செய்திகளையும் எடுத்துரைத்தான்!

"விசுவாமித்திர மாமுனிவரின் வேள்வியைக் காத்த பின் நான் அந்த முனிவருடன் மிதிலைக்குச் சென்ற பொழுது கன்னி மாடத்தில் நின்று கொண்டிருந்த சீதையை நான் கண்ணுற்றதை நினைவு படுத்துவாயாக. அவளும் என்னைக் கண்டு காதல் கொண்டதனால், மறுநாள் 'சபையில் வில்லை ஒடித்தவன் அந்த முனிவரோடு, வந்தவர் அல்லன் என்றால் நான் உயிர்விடுவேன்' என்றாள்; அதனையும் நினைவு படுத்துவாயாக, நான் காட்டிற்குப் புறப்படும் பொழுது சீதையும் என்னுடன் புறப்பட்டாள்; 'கானில் வந்து துன்பம் தரப் போகின்றாயா?' என நான் கேட்டேன்; அதற்கு, அவள், 'காட்டில்' என்னைத் தவிரமற்ற எல்லாமே உங்களுக்கு இனியவையோ?' என்று திருப்பிக் கேட்டாள்; அதனையும் அவளுக்கு நினைவுறுத்துவாயாக! 'நீயும் என்னுடன் காட்டிற்கு வரலாம்' என்று ஒப்புக் கொண்டேன்; நகர எல்லை தாண்டினோம்; உடனே, அவள் 'நாம் காட்டிற்குள் வந்து விட்டோமோ?' என்று அறியாமையால் கேட்டாள். இதையெல்லாம் அவளிடம் நினைவு கூட்டுவாயாக" என்று கூறினான்.

இவ்வளவும் நினைவு படுத்திச் சொல்வதற்கு முன்பாகவே, இராமன் சீதையின் உறுப்புகளை வர்ணித்தான் என முன்பே குறிப்பிட்டோம். அவளுடைய திருவடிகள் கணைக்கால், தொடைகள், கொங்கைகள், வயிறு, உந்தி, கூந்தல், என்று அனைத்து அங்கங்களையும் வர்ணித்தான்!

எவ்வளவு தான் தீவிர பிரம்மச்சாரியாக இருந்தாலும் பெண்டிரின் மேற்குறிப்பிட்ட உறுப்புகளைக் காண து இருப்பான் என்பது கற்பனை நம்பிக்கையே! குறைந்த பட்சம் அங்க அடையாளங்கள் கொண்டு ஒருத்தியைக் கண்டு பிடிக்க வேண்டிய அவசியம் ஏற்படும் பொழுதாவது அவற்றைக் கொண்டு காண முயல்வான்

என்பது மனோ தத்துவத்திற்கு விரோதமானது அன்று! இந்த வகையால் தான் இராமன் இவ்வளவையும் இயம்பினான்!

ஆனாலும், கணவனின் கண்ணில் படும்படியாகக் கூடத் தன்னுடைய எந்த அங்கத்தை ஒவ்வொரு பெண்ணும் மறைபொருளாய் வைத்திருக்க முற்படுவாளோ அந்த அங்கத்தை—அல்குலை—இராமன் அனுமனிடம் குறிப்பிட்டானே!

"வார் ஆழிக் கலசக் கொங்கை வஞ்சி போல்
மருங்குவாள் தன்
தார் ஆழிக் கலை சார் அல்குல் தடங் கடற்கு
உவமை – தக்கோய்!—
பார் ஆழிபிடரில் தாங்கும் பாந்தளும், பணி வென்று
ஓங்கும்
ஓர் ஆழித் தேடும் ஒவ்வா உனக்கு நான் உரைப்பது
என்னோ?"

என்றிட்டானே! அது பொருந்துமா?

அனுமன் முதலினோர், சீதையைத் தேடிச் சென்று கொண்டிருந்த வழியில் சயம்பிரபை கண்ணில் பட்டாள். அவள் அந் நகரத்தின் நடுவில் தவம் முழுதும் ஒரு பெண் வடிவத்தைக் கொண்டாற் போன்று ஒளியை உடைய சடையை உடையவளாய்க்காட்சி தந்தாள்! அவளுடைய உறுப்புகளுள் அவளுடைய அல்குலும் தேர்த்தட்டிற்கு இணையானது என்றெல்லாம் வர்ணிக்கப்பட்டுள்ளது.

"தேர் அனைய அல்குல், செறி திண் கதலி செப்பும்
ஊருவினொடு ஒப்பு உற ஒடுக்கி, உற ஒல்கும்"
"நேர் இடை சலிப்பு அற நிறுத்தி, நிமிர் கொங்கைப்
பாரம் உள் ஒடுக்குற, உயிர்ப்பு இடைபரப்ப"

எனப் பாடியுள்ளார் கம்பர்.

அவளைக் கணடவர்கள் அனுமனிடம் இராமன் செப்பிய அங்க அடையாளங்களை இவளின் அங்கங் களோடு ஒப்பிட்டுப் பார்த்து இவள் தான் சீதையோ என்று தேர்ந்திடக் கூறுகின்றனர். அப்பொழுது, அவன் 'எந்தக் குறியை வைத்து இவளைத் தேர்வதோ?' என்று அயர்ந்து போகின்றான் என்றாலும்,

''அக்குவடம், முத்துமணி ஆரம் அதன் நேர் நின்று
ஒக்கும் எனின், ஒக்கும்''

என்று மட்டும் கூறி நிற்கின்றான்.

அனுமன், இலங்கையில் இருந்த அரக்கியரைக் கண்டு கொண்டே செல்கின்றான். ஒவ்வொரு சாராரும் ஒருவகையாகப் பொழுது போக்கிக் கொண்டிருப்பதை அவன் பார்க்கின்றான். ஒரு சாரார்,

''தண்டலை வானடி அன்ன குறங்கிடை,
அல்குல் தட்டில்,
கொண்ட பூந்துகிலும், கோவைக் கலைகளும் சோர,
கூர்ங்கள்
உண்டு அலமந்த கண்ணார் ஊசலிட்டு உலாவுகின்ற
குண்டலம் திருவில் வீச குரவையில் குழறுவார்''

எனக் கம்பர் வர்ணிக்கின்றார். அடுத்த சாரார்.

''....................அல்குல் பூந்துகில் கலாபம் பீறி
..........................................................
........................நிறை தடுமாறுவார்''

என்கின்றார்.

அதே போல, அசோக வனத்தில் இராவணன் வருகின்ற காட்சியைக் காட்டும் பொழுது, கம்பர்,

''வீங்கு தேர் அல்குலார் தாங்கி''

என்று சில பெண்டிரைக் குறிப்பிடுவார்.

இவ்வாறாக அல்குலின் காட்சிகளைக் கவிச் சக்கரவர்த்தி அரக்க அரக்கியர்களின் சூழலின் மட்டும் காட்டுகின்றாரா? மிதிலைக் காட்சிக்குச் செல்வோம்.

'விசுவாமித்திரருடன் இராம இலக்குவர், மிதிலை நகர் வீதிகளில் செல்கின்றனர். அப்பொழுது அங்கு காணப்பட்ட பல காட்சிகளையும் கம்பர் வர்ணிக்கின்றார். அதனில் ஒன்று,

"மெய் வரு போகம் ஒக்க உடன் உண்டு
விலையும் கொள்ளும்
பை அரவு அல்குலார் தம் உள்ளமும்,
பளிங்கும் போல
மை அரி நெடுங் கண் நோக்கம் படுதலும் கருகி,
வந்து
கை புகின் சிவந்து காட்டும் கந்துகம் பலவும்
கண்டார்"

விலைமகளிரின் 'அல்குல்' உவமைகளிலும் அடிபடுகின்றது. கோசல மக்கள் எல்லோரும் மிதிலைக்குச் செல்லும் வழியில் அழகாக ஓங்கி உயர்ந்த மலைகளையும், அவற்றில் அடங்கியுள்ள இயற்கைக் காட்சிகளையும் கண்டு களிக்கின்றனர். அங்கு களி வண்டுகள் மலர்களிலே உள்ள தேனை முழுமையாய் உறிஞ்சிப் பசையறச் செய்திருப்பதைக் காட்ட வந்த கவிச் சக்காவர்த்திக்கு பெண் நாட்டம் கொண்டு அழிந்துபோன இளைஞரின் நிலை நினைவிற்கு வருகிறது! அவர்களை அக்கதிக்கு ஆளாக்கிய—ஆளாக்கும்—மகளிரை,

" ................அல்குல் விற்கும்
பைந்தொடி மகளிர்......................."

எனக் குறிப்பிடுவார்!

அவ்வாறு விலை மகளிரின் பெண் குறியை மட்டுமா குறிப்பிடுகின்றார் கம்பர் தன், சொல்லால்! அதோ, உயரத்தே கன்னி மாடத்தில் நின்றிருக்கும் சீதையைக் காட்டும் பொழுதும்,

"பொன்சேர் மென்கால் கிண்கிணி, ஆரம்,
புனை ஆரம்,
கொண்சேர் அல்குல் மேகலை, தாங்கும் கொடி
அன்னார்,
தன் சேர் கோலத்து இன் எழில் காண சத கோடி
மின் சேவிக்க மின் அரசு என்னும் படி, நின்றாள்"

என்றல்லவா பாடியுள்ளார்!

சாதாரண நிலையில் மட்டுமா சீதையின் அல்குலைப் பற்றிக் கம்பர் கூறுகின்றார்? அவளுடைய மகிழ்ச்சியால் அவள் தன் அல்குல் விரிந்தது என்றும் காட்டுகின்றாரே, வில்லை ஒடித்தவன்,

"கோ முனியுடன் வருகொண்டல்' என்றபின்
'தாமரைக் கண்ணினான்' என்ற தன்மையால்
'ஆம்; அவனே கொல்' என்று, ஐயம் நீங்கினாள்;"

அவ்வாறு சந்தேகம் நீங்கி அவன் தான் முதல் நாள் பார்த்தவனே என்று தெரிந்ததும் அவளுடைய

"வாம மேகலையினுள் வளர்ந்தது, அல் குலே!"
என்பார்!

மிதிலையில் ஒருத்தியின் அல்குலைக் காட்டிய கம்பர், மிதிலை நோக்கிச் செல்லும் அயோத்திப் பெண்களை விட்டாரா! அந்த அல்குலார்க்கு ஆடவர் அஞ்சி விலகி நிற்றலைப் படம் பிடித்துள்ளார்.

"...................................... கலாபம் சூழ்ந்த
பாந்தளின் அல்குலார் தம் பரிபுரம் புலம்புபாதப்
பூந்தளிர் உறைப்ப, மாழ்கி, போக்கு அரிது' என்ன
நிற்பார்

என நிறுத்துவார்!

மலை மேல் சென்ற மாதரைக் கீழ் இறக்கி தங்கச் செய்கின்றார், கவிஞர் அவர்கள். பலவகையான இனிய ஓசைகளில் தம்மை மறந்து இராப் போதைப் போக்கினர். கம்பர் காதில் விழும், அப்பலவாறான ஒலி களிலே

"பொதுப் பெண்டிர் அல்குல் புனை மேகலைப்
பூசல் ஓதை"

ஒன்று!

பூமலர்ச் சோலைகளில் நாகம் இருப்பதில் வியப்பு இல்லை; அவை படம் எடுத்து ஆடுவதும் இயற்கையே. அதனைக் கண்டு மயில் கொத்த வருவதும் இயல்பே. இதனை அடிப்படையாகக் கொண்டு கவிச் சக்கரவர்த்தி ஒரு காட்சியையே அமைக்கின்றார்!

"பாகு ஒக்கும் சொல் நுண் கலையாள் தன் படர்
அல்குல்
ஆகக் கண்டு, ஓர் ஆடு அரவு ஆம் என்று, அயல்
நண்ணும்
தோகைக்கு அஞ்சி, கொம்பின் ஒதுங்கி, துணர்
என்ற
சாகைத் தம் கை, கண்கள் புதைத்துத் தளர்வாளும்"

எனச் சொல்லோவியம் தீட்டுகின்றார் அல்குலின் அடிப் படையில்!

தரையில் திரியும் நாகத்தைத் தண்ணீரிலும் இறக்கி அச்சுறுத்துகின்றார், கவிச்சக்கரவர்த்தி! அவ்வாறு நாகத்தை அல்குலின் துணை கொண்டு இறக்குகின்றார்!

தேரிடைக் கொண்ட அல்குல் கொண்டவர்கள் நீர் விளையாடி இருக்கும் பொழுது,

" கலை கடந்து அகல் அல்குல், கடம்படு
முலைகள், தம்தமின் முந்தி நெருங்கலால்,
நிலை கடந்து பரந்த" நீருக்குள்ளே

தங்கள் கால்களை நாகம் சுற்றிக் கொண்டது என்று சிலர் அஞ்சுகின்றனர்; அது பின்னும் நகராததால் அதனைக் கைகளால் பிடித்துப் பார்த்தால், அம்மம்ம அது மேகலை என்னும் ஆபரணமே!

"பொன் தொடி தளிர்க் கைச் சங்கம் வண்டொடு புலம்பி ஆர்ப்ப,
எற்று நீர் குடையும் தோறும், ஏந்து பேர் அல்குல் நின்றும்
கற்றை மேகலைகள் நீங்கி, சீறடி கவ்வ, 'காலில்
சுற்றிய நாகம்' என்று, துணுக்கத்தால் துடிக் கின்றோரும்"

என்று தண்ணீருக்குள் தன்னுடைய சொற் கருவி கொண்டு புகைப்படம் எடுக்கின்றார்!

தெளிவான நிலையில் இருக்கும் பொழுதே பெண்களின் அல்குல் தெரிகின்றது என்றால், அவர்கள் குடி போதையில் இருக்கும் பொழுது கேட்கவா வேண்டும்! ஒருத்தி அதனை மறைப்பதைப் போல், தன்னையும் அறியாது, அப்பகுதியைக் குறிப்பாகக் காட்டு கின்றாளே!

" மின் என நுடங்குகின்ற மருங்குலாள் ஒருத்தி வெள்ளை
இன் அமிழ்து அனைய தீம்சொல், இடை தடுமாறி என்ன,

வன்ன மேகலையை நீக்கி, மலர்த்தொடை அல்குல்
சூழ்ந்தாள்;
பொன்னரி மாலை கொண்டு, புரிகுழல் புனைய
லுற்றாள்!''

அது, போதையால் அவள் அறியாது செய்தது. ஒருவன் அறிந்தே செய்கிறான்; தன் மனைவிக்குச் சினம் மூட்டியிருந்தான்; அதனால் வந்த ஊடலைத் தீர்ப்பதற்குக் குடித்துக் கும்மாளமிட்டிருந்த பொழுது, அவளுடைய மேகலையைப் பிடிக்க அது அறுந்து விட்டது. எங்கிருந்து வீழ்ந்தது?

..........…அல்குலில் பரந்த மேகலை
அற்று உகு முத்தின் முன்பு, அவனி சேர்ந்தன''

என்கின்றார் கம்பர்.

ஊடலைப் போக்க முயன்றவனைத்தான் பார்த்தீர்கள்? இதோ கூடல் நாடும் வேறோர் ஆண் மகனும் அந்த ஆபரணத்தை அவிழ்த்தான்; அவிழ்த்து என்ன செய்தான்?

''நிறை அகல் அல்குல் புல்கும் கலன் கழித்து
அகலநீத்தார்''

இனி, போதையில் இருக்கும் பொழுது பெண்களே ஆடவரை நாடிச் செல்வர் என்பதற்கு எடுத்துக் காட்டாக,

'' கொலை உரு அமைந்தெனக் கொடிய நாட்டத்து ஓர்
கலை உருவு அல்குலாள், கணவற் புல்குவாள்''
என்று பாடுகின்றார்.

கன்னிப் பெண்கள் கட்டழகன் ஒருவனைக் காண முயல்வதும் ஒரு வித போதை தானே! மிதிலை நகர்த்

தெருவில் உலாவச் சென்றான், இராமன். அவனைக் காண வேண்டும் என்ற போதை கொண்டு நெருங்குவோருள் ஒருத்தி,

"கருங்குழல் பாரம், வார் கொள் கனமுலை
கலைசூழ் அல்குல்"

கொண்டிருந்தாள்! மற்றொருத்தி,

"பனி வரும் கண் ஓர் பாசிழை அல்குலாள்"

இவ்வாறு யார் யாரோ அல்குலுக்கு அணி பூட்டிக் கொள்ளும் பொழுது, திருமணப்பெண் சீதைக்கு அலங்காரம் செய்பவர்கள் விடுவார்களா?

" நிறம் செய் கோசிக நுண் தூசு நீலி நீவாத அல்குல்
புறம் செய் மேகலையின் தாழத் தாரகைச் சும்மை பூட்டி.
திறம்செய் காசு என்றசோதி பேதை சேயொளியின் சேர்ந்து
கறங்குபு திரிய, தாமும் கண் வழுக்குற்று நின்றார்"

'கண்ணுக்குக் குளுமையான வண்ணம் பொருந்திய பட்டாடையின் கொசுவம் நீங்காத அல்குல்' என்று வர்ணித்தால் மட்டும் திருப்திப்படுமா?

"..................ஆடல்
மை அரவு அல்குலால்..............."

என்றும் சொல்லிப் பார்க்கின்றார்!

மனம் மகிழ்வுறும் சூழ்நிலையில் எல்லாம் மற்றைய அங்கங்கள் காணப்படுகின்றனவோ இல்லையோ, இந்த அல்குல் மட்டும் முந்திக் கொள்கின்றது!

மறுநாள் காலையில் இராமனுக்கு மகுடாபிஷேகம என்ற மகிழ்ச்சியில் அயோத்தி ஆழ்ந்திருந்தது. அதனால்

விடியலில் பற்பல குதூகலமான நிகழ்ச்சிகளும் ஒலிகளும் தோன்றின. அவற்றுள்,

" .................முத்து ஒலித்து எழும் அல்குலார்
இழை ஒலித்தன...................."

அங்கே, இளைஞர்களும், இளம் பெண்களும் அங்கு மிங்கும் நகர முடியாத நெரிசலில் நகர முயல்கின்றனர். அவ்வளவு கூட்டத்திற்குக் காரணம்,

" பாகு இயல் பவளச் செவ்வாய், பணைமுலை பரவை அல்குல்,
தோகையர் குழாம்"

ஆகும்.

மகிழ்வுச் சூழலில் இவ்வாறு என்றால் அவலத்தின் போழ்து? அல்குல் இருக்குமிடம் தெரிவதில்லை; அதனை அலங்கரிக்கும் 'மேகலை' அணி மட்டும் பார்வையில் படுகின்றது!

இராமனுக்கு முடிசூட்டு விழா இல்லை என்பதை மக்கள் அறிந்து மன வேதனைப் படுகின்றனர், மாதர் களின் அல்குல் கவலையால் அழிந்தே விட்டது, போல்;

" பைந் துணர் மாலையின் பரிந்த மேகலை"

" ...... .......மேகலைத் தடங்
கடலிடைப் புகுந்த................"

ஆனால், பரதன் இராமனைத் திரும்ப அழைத்து வரச் செல்லும் பொழுது, பெண்டிரின் அல்குல் இருந்தது; மேகலை இல்லை; அதன் ஒலியும் இல்லை.

"விரி மணி மேகலை விரவி ஆர்க்கில
தெரிவையர் அல்குல்"

கணவன், மனைவி மனம் விட்டுப் பேசும்பொழுது அவளை அவன் 'அல்குல்' எனவே அழைத்தாலும், அவள் சினப்பதில்லை. சினை ஆகு பெயரால் அவன் உரிமை யோடு தன்னை அழைப்பதாகவே ஏற்றுக் கொள் கின்றாள். இதோ இராமனே தன் இல்லாளை விளிப்ப தைப் பார்க்கலாமே! சித்திர கூடத்தில் இயற்கை எழிலைக் காட்டி வரும் பொழுது இராமன் சீதையை,

''பாந்தள் தேர், இவை பழிபடப் பரந்த பேர்
அல்குல்!''

என்றே விளித்துப் பேசுகின்றான்!

இப்படியெல்லாம் அல்குலைக் காட்டிப் பேச அதனைக் கம்பர் எங்கே கண்டார்! இராமனைத் திரும்ப அழைத்து வருவதற்குச் சென்ற மாதர்கள் ஓடத்தில் கங்கையைக் கடக்கும்பொழுது கண்டு விட்டார் போலும்!

'இயல்வு உறு செலவின் நாவாய், இருகையும் எயினர் தூண்ட,
தூயல்வன் துடுப்பு வீசும் துவலைகள், மகளிர் மென்தூசு
உயல்வு உறு பரவை அல்குல் ஒளிப்பு அறத் தளிப்ப, உள்ளத்து
அயர்வுறும் மதுகை மைந்தர்க்கு சுயாஃவுயிர்ப்பு அளித்தது அம்மா!

என்று கம்பர் தாம் கண்டு கொண்டதைப் பிறர் மேல் ஏற்றி வியக்கின்றார்!

இதனை அவர் காமவல்லி சூர்ப்பணகையிடமும் கண்டாரோ? என்னே வியப்பு; அவளைப் பற்றிய வர்ண னையில் அல்குல் இடம் பெறவில்லை; என்றாலும், அச் சொல்லை அவளுடைய வாய் வழியாகக் காதால்

கேட்டார்! இராவணனிடம் சூர்ப்பணகை சீதையின் அழகினை விரித்து உரைக்கையில்,

“................................ ‘ஐய! ஆழித்
தேர், அவள் அல்குல்................................
என்று காட்டினாள்.

அத்தோடு விட்டாளோ! பின்னும்,
“தேர் தந்த அல்குல் சீதை, தேவர் தம் உலகின்,
இம்பர்
வார் தந்த கொங்கையார் தம் வயிறு தந்தாளும்
அல்லர்.”
என்று மேன்மை காட்டினாள்!

அரக்கியின்வர்ணனையில் அந்தஇராவணன் மட்டுமா மயங்கினான்! கவிச்சக்கரவர்த்தியே தன் கவிக் கூற்றாகக் கூட,

‘பணம் தாழ்அல்குல் பனிமொழியார்க்கு அன்புபட்டார்
படும் காமம்
குணம் தான் முன்னம் அறியாதான் கொதியா
நின்றான்”

என்று அந்த உறுப்பையே வைத்து காமச் சுவையை அளந்து காட்ட முற்படுகின்றார்!

மனத்தால் சீதையை நினைந்து மதி மயங்கி நிற்கும் இராவணனுக்கு அவள் உருவெளித் தோற்றமாய்த் தெரிகின்றாள். அவன்,

“புடை கொண்டு எழுகொங்கையும், அல்குலும்,புல்கி
நிற்கும்
இடை, கண்டிலம்; அல்லது எல்லா உருவும் தெரிந்ததாம்
விடம் நுங்கிய கண்உடையார் இவர்; மெல்ல மெல்ல,
மட மங்கையர் ஆய், என் மனத்தவர் ஆயினாரே,”

என்று புலம்புகின்றான்.

இராவணனுக்கு மட்டுமா சீதையின் அல்குல் தூக்கம் வராத கதியைக் கொடுப்பது? இராமனுக்கும் அதே கதி தான்! அதனைக் கம்பர்,

"படம் பரந்தனைய அல்குல், பால் பரந்தனைய
இன்சொல்,
தடம் பெருங் கண்ணினாள் தன் தனிமையை நினைய
லுற்றான்"

எனப் பாடுகின்றார்.

அல்குலை இவ்வாறாகப் பற்பல இடங்களில் பரவலாக பரப்பிக் காட்டும், கம்பர், காம வேகத்தால் அவதிப்பட்டுத் தங்கள் பெண் குறியை, வலிய வந்து ஆடவர் பாலே காட்டி நின்று தண்டிக்கப் பெற்ற நிலையில் 'அல்குல்' என்ற சொல்லைப் பெய்திடாமல், கவிச்சக்கரவர்த்தி தம் சொற்களால் மறைத்துக் காட்டுகின்றார்!

இலக்குவனின் அழகில் மயங்கி அவனைக் கூடியே ஆகவேண்டும் என்று கொழுப்பு ஏறி, தானே அவனைக் கடத்திச் சென்று இன்பம் அனுபவிக்கப் போவதாக,

"எடுத்தனென் ஏகினென், என் முழை தன்னுள்
அடைத்து, இவன் வெம்மை அகற்றிய பின்னை,
உடற்படுமால்; உடனே உறும் நன்மை;
திடத்து இதுவே நலன்"

என்று வெட்கம் கெட்டு வெளிப்படையாக வாய்விட்டுச் சொல்லி அவனை அணுகிய அயோமுகியின் அந்த உறுப்பைக் கவிச்சக்கரவர்த்தி

"......................'பட அரவம் இசைக்கும்
கடிதடம் உற்றவள்"

என்றே மறைத்துக் காட்டுகின்றார்!

அரக்கியின் காமாந்தகாரச் சூழ்நிலையிலேயே அவ்வாறு மறைக்கும் மனப்பக்குவம் கொண்ட கம்பர்

அமரர் தலைவன் காட்சியில் மட்டும் வெளிப்படையாகப் பேசுவாரா?

அகலிகையின் அல்குலை வேடதாரியாக வந்து அனுபவித்தான், இந்திரன். தன்னுடன் உறைந்திருப்பது, தன் கணவரே என்று ஆரம்பத்தில் நம்பிய அவளால், இன்பத்தின் உச்சக்கட்டத்தில், அதனை நல்குபவர், தன் கணவராகிய கௌதமராக இருக்கமுடியாதுஎன்று உணர்ந்தும், கூடியவனைப் பிரித்துத் தள்ளிவிடும் வெறுப்புணர்ச்சி பெறவில்லை. அனைத்தும் ஓய்ந்த பின் அங்கு வந்தார் கௌதமர். இவ்வளவு நேரிடை நிகழ்ச்சியைப் படம் பிடிக்கும் பொழுது, அதற்கு இலக்கான அவ்வுறுப்பை, இந்திரன் தன் உடல் முழுதும் பெறக் கடவன் என்று முனிவர் சாபம் கொடுத்ததை

'ஆயிரம் மாதர்க்கு உள்ள அறிகுறி உனக்கு உண்டாக'
என்று
ஏயினன்; அவை எலாம் வந்து இயைந்தன, இமைப்பின்
முன்னம்"

என்று தான் மறை பொருளாய்க் கூறுகின்றார்.

'அல்குல்' என்ற சொல் 'பெண்குறி' என்ற பொருளொடு 'தொடைக்கும் இடைக்கும் இடைப்பட்ட சுற்றுவட்ட உடல்பகுதியையும் பிரித்துக் காட்டும்.

கவிச் சக்கரவர்த்தி அச் சொல்லைக் கையாண்டுள்ள இடங்கள் அனைத்தையும் ஆழ்ந்து பார்த்தால், 'பெண் குறி' என்ற பொருளில் வரும் பொழுது மறை முகமாகவும், தொடை—இடை நடுவு உறுப்பைக் காட்ட அச் சொல்லை அப்படியேயும் அமைத்துள்ளமை தெரிகின்றது.

என்றாலும், 'அப்பகுதி பற்றியும் அனுமனிடம் இராமன் கூற வேண்டுமா? 'என்பாரும் உண்டு. இராம

னுக்கு அனுமன் மேல்—அவனுடைய பிரம்மச் சரியத்தின் மேல்—முழு நம்பிக்கை உண்டு. அதலால் ''அவன் மாதர் நலம் பேணாது வளர்ந்தவன்'' நினைவாலுய குரங்குப் புத்திக்கு ஆளாக மாட்டான் என்பதனாலேயே, சீதையின் அங்க மச்ச அடையாளங்களைத் தெரிவித்தான்! அவ்வாறு தெரிவிக்கத் தொடங்கும் பொழுதே, அனுமனை,

''........................ நீதி வல்லோய்!
காண்டி எனின், குறிகேட்டி!

என்று கூறிய இராமன், இந்த அல்குல் உறுப்பைப் பற்றிப் பகரும் பொழுது மீண்டும் அவனை,

'' .................. தக்கோய்!''
என விளித்துப் பேசுகின்றான்!

அதாவது, 'அனுமன், பால் உணர்ச்சிகளுக்கு அப்பாற் பட்டவன்; சொல் பேதங்கள் அவன் மனத்தையோ, செய்கையையோ பாதிக்கா' என்ற காரணத்தினாலேயே அவனிடம் மட்டும் சீதை பற்றிய இரசியங்களைக் கூறினான் இராமன்.

அவ்வாறு சொல்லி வரும் பொழுது, 'அல்குல்' உறுப்பைப் பற்றி,

''...... உனக்கு நான் உரைப்பது என்னோ?'' என்கிறான்! அதற்குக் காரணம், அனுமன் ஏற்கனவே சீதையின் அல்குலின் அமைப்பை அறிந்துள்ளான் என்பதாகும்!

எங்கு கண்டான்? எப்படிக்கண்டான்? இதனை அறிவதற்குச் சற்று பின் நோக்கிச் செல்ல வேண்டும்!

சீதையின் அணிகலன்களின் பொதியை அவிழ்த்த பொழுது அதனை அவனும் கண்டுள்ளான்!

சீதையின் பற்பல உறுப்புக்களுக்கான அணிகலன்கள் அந்தந்த உறுப்புக்களின் அமைப்பையே பெற்றிருந்தன என்பதைச் சொல்லும் பொழுது கம்பர்,

"நல்குவது என் இனி? நங்கை கொங்கையைப் புல்கிய பூணும், அக் கொங்கை போன்றன, அல்குலின் அணிகளும் அல்குல் ஆயின பல் கலன் பிறவும், அப்படி வம் ஆனவே" எனச் சொல் வார்க்கின்றார்.

அதற் கேற்றாற் போல் அனுமன் இலங்கையில் பல மாதரின் அல்குல் பகுதியையும் கண்டு ஒப்பு நோக்கியுள்ளான் என்றும் பார்க்கின்றோம்!

அதற்கு முன்னும் கூட அனைத்துக் குறிகளையும் ஒப்பிட்டுப் பார்த்துத் தேடியுள்ளனர். அதனைக் கம்பர்,

"புக்க நகரத்து இனிது நாடுதல் புரிந்தார்; மக்கள் கடை, தேவர்தயை, வான் உலகின், வையத்து, ஒக்க உறைவோர் உருவம், ஓவியம் அலால், மற்று எக் குறியின் உள்ளவும்; எதிர்ந்திலர், திரிந்தனர்."

எனவே, இராமன் தன் இல்லாளின் அல்குல் உறுப் பைப்பற்றிய அடையாளத்தையும் பிறபல உறுப்புக் களோடும் சேர்த்து, அனுமனிடம் கூறி அனுப்பியதில் அசூயைப்பட வேண்டியது ஒன்றும் இல்லை என்ன வாகும்,

## 41. பழி இல்லான்

காவியத்தில் அனுமன் காட்சி தோன்றியது. முதலில் அவனைக் கவிச் சக்கரவர்த்தி பற்பல சொற்களால் படம் பிடித்து நமக்குக் காட்டுவார்.

"அஞ்சனைக்கு ஒரு சிறுவன்" (3754)

"தன்னைத்தான் அலது ஒப்பு இலாதான்" (3759)

"செவ் வழி உள்ளத்தான்" (3764)

"காற்றின் வேந்தற்கு அஞ்சனை வயிற்றில் வந்தேன்" (3765)

"இசை சுமந்து, எழுந்த தோளான்" (3766)

"சொல்லின் செல்வன்" (3768)

"மெய்ம்மையின் வேலி போல்வான்" (3775)

"காலின் மைந்தன்" (3779)

"கேள்வி நூல் மறை வலாளன்" (3780)

"பாழி அம் தடந்தோள்வென்றி மாருதி" (3780)

"தருமத்தின் தனிமை தீர்ப்பான்" (3781)

"குரக்கு உருக் கொண்டோன்" (3783)

"குரக்குச் சீயம்" (3785, 4775)

"மந்தர மணிப் புய நெடும் புகழினான்" (3786)

"மநதிரம் கெழுமு நூல் மரபு உணர்ந்து உதவுவான்" (3800)

"பொன்னையே பொருவுவோன்" (3801)

"அஞ்சனை சிறுவன்" (3813)

"அஞ்சனை சிங்கம்" (3814)

"மாருதி" (3821, 4145, 4329. 4336, 4343, 4344, 4356, 4453, 4478, 4541, 4564, 4571, 4577, 4587, 4593, 4674 4677, 4685, 4718, 4725, 4886, 4915)

"அனுமன்" (3857, 4070, 4071, 4310, 4385, 4386, 4426, 4451, 4586, 4591, 4666, 4773, 4894, 4895)

"வன் திறல் மாருதி" (3928, 4549)

"நீதி சால், வன் தாள் மால் வரை அன்ன, மாருதி" (4111)

"மெய்ப் போர் மாருதி" (4117)

"பொய்த்தல் இல் உள்ளத்து அன்பு பொழிகின்ற புணர்ச்சியான்" (3142)
"பெரும் பொறை அறிவினோன்" (4143)
"தருமம்தானே போன்றவன்" (4144)
"கோது இல் சிந்தை அனுமன்" (4294)
"மந்திரத் தனி மாருதி" (4295)
"வன் துணை வயிரத் திண் தோள் மாருதி" (4328)
"அந்தம் இல் கேள்வியன்" (4329)
"இயம்ப வல்லான்" (4329)
"நன்கு உணர் மாருதி" (4402)
"நீதி வல்லோன்" (4478)
"தக்கோன்" (4483, 4494, 4719)
"கடலினும் நெடிது கற்றோன்" (4486)
"சான்றோன்" (4497, 4512)
"நெடிது காண்போம்" (4498)
"நல்லோன்" (4510, 4578, 4581)
"அறிஞன்" (4519)
"ஐயன்" (4550, 4919)
"பொன் நெடுங்கிரி எனப் பொலிந்த தோளினான்" (4551)
"வெவ் விழைவு இல் சிந்தை நெடு மாருதி" (4575)
"பெரியோன்" (4587)
"மாருதேயன்" (4602)
"வாய்மை சால் ஆரியன்" (4602)
"கோது இலான்" (4679)
"காற்றின் சேய்" (4686)
"வன் திண் தோள் வலி மாறு இலாதவன்" (4693)

"மேலை விரிஞ்சன் வீயினும் வீயாமிகை நாளோன்"
(4719)
"நூலை நயந்து நுண்ணிது உணர்ந்தோன்" (4719)
"காலனும் அஞ்சும் காய் சின மொய்ம்பன்" (4719)
"கடன் நின்றோன்" (4719)
"ஆலம் நுகர்ந்தான் ஆம் என வெம் போர்
அடா் கிற்போன்" (4719)
"வெப்புறு செந்தீ, நீர், வளியாலும் விளியாதோன்"
(4720)
"செப்புறு தெய்வப் பல் படையாலும்
சிதையாதோன்" (4720)
"ஒப்பு உறின், ஒப்பார் தான் அலது இல்லோன்"
(4720)
"ஒரு காலே குப்புறின், அண்டத்து அப்புறமேயும்
குதிகொள்வோன்" (4720)
"நல்லவும் ஒன்றோ, தீயவும் நாடி, நவை தீரச்
சொல்லவும் வல்லோன்" (4721)
"காரியம் தானே துணிவுற்றோன்" (4721)
"வெல்லவும் வல்லோன்" (4721)
"மீளவும் வல்லோன்" (4721)
"மிடல் உண்டே கொல்லவும் வல்லோன்" (4721)
தோள் வலி என்றும் குறையாதோன்" (4721)
"மேரு கிரிக்கும் மீது உற நிற்கும் பெரு
மெய்யோன்" (4722)
"மாரி துளிக்கும் தாரை இடுக்கும், வர வல்லோன்"
(4722)
"பாரை எடுக்கும் நோன்மை வலத்தோன்" (4722)
"சூரியனைச் சென்று, ஒண் கையகத்தும் தொட
வல்லோன்" (4722)

"அறிந்து, திறத்து ஆறு எண்ணி, அறத்து ஆறு அழியாமை

"மறிந்து உருள, போர் வாலியை வெல்லும் மதி வல்லோன்" (4723)

"பொறிந்து இமையோர் கோன் வச்சிர பாணம் புக மூழ்க

"எறிந்துழி, இற்று ஓர்புன் மயிரேனும் இழ்வாதோன்" (4723)

"ஒல்கல் இல் வீரத்து உயர் தோளோன்" (4724)

"பார் உலகு எங்கும் பேர் இருள் சீக்கும் பகலோன் முன்"

"தேர் முன் நடந்தே, ஆரிய நூலும் தெரிவுற்றோன்" (4724)

"நீதியில் நின்றோன்" (4725)

"வாய்மை அமைந்தோன்" (4725)

"நினைவாலும் மாதர் நலம் பேணாது வளர்ந்தோன்" (4725)

"மறை எல்லாம் ஓதி உணர்ந்தோன்" (4725)

"ஊழி கடந்தோன்" (4725)

"உலகு ஈனும் ஆதி அயன் தானே என யாரும் அறைகின்றோன்" (4725)

"அண்ணல் அம் மைந்தர்க்கு அன்பு சிறந்தோன்" (4726)

"புண்ணியம் ஒன்றே என்றும் நிலைக்கும் பொருள் கொண்டோன்" (4726)

"அடங்கவும் வல்லோன்" (4727)

"அமர் வந்தால், மடங்கல் முனிந்தாலென்ன வலத்தோன்'; (4727)

"முற்றும் முடிக்கும் தொழில் அல்லால்,

இடம் கொட, வெவ்வாய் ஊறு கிடைத்தால்
இடையாதோன்'' (4727)

''நல் நெறியானும் பொறையானும் பண்டிதன்''
(4728)

''பார்த்து இனிது உய்க்கும்படி வல்லோன்'' (4728)

''வேண்டிய போதே வேண்டுவ எய்தும் வினை
வல்லோன்'' (4728)

''அறிவாளன்'' (4730)

''உவமையாலும் திருவடி என்னும் தன்மை
யாவர்க்கும் தெரிய நின்றோன்'' (4736)

''பரிதி மைந்தன்'' (4737)

''மக ஆமை முதுகில் தோன்றும் மந்தரம் என்னும்
ஆனோன்'' (4738)

''அண்டம் தாங்கும் பொன் நெடுந் தூணின்
பாத சிலை என, பொலிந்து நின்றோன்'' (4739)

''ஆண் தகை'' (4741, 4760, 4886)

''வீரன்'' (4753, 4756, 4759, 4772, 4773, 4776, 4798, 4810, 4829)

''பொருப்பை ஒப்பான்'' (4754)

''அலங்கல் தாழ் மார்பன்'' (4755)

''இசையுடை அண்ணல்'' (4758)

''சுருதி அன்ன சேவகன்'' (4759)

''நாயகன் தூதன்'' (4763)

''வேகத்தான்'' (4764)

''அறம் பொருள் நிரப்பும் அண்ணல்'' (4766)

''சூலத்தான்'' (4732)

''அண்ணல்'' (4777, 4822, 4902, 4917)

''பொரு அரும் உருவத்து அண்ணல்'' (4778)

''நாகம் அன்னான்'' (4779)
''அழுங்கா மனத்து அண்ணல்'' (4791)
''உயர்ந்த தோளன்'' (4795)
''நீதி நின்றோன்'' (4796)
''பொன்தார் அகல் மார்பன்'' (4797)
''மெய்ம்மை பூண்டான்'' (4801)
''ஊழி வெங்காலும் ஒத்தான்'' (4802)
''விசும்பு நிரம்பு மெய்யன்'' (4804)
''மூன்று உற்ற தலத்திடை முற்றிய துன்பம் வீப்பான்'' (4805)
''கோள் வாய் அரியின் குலத்தோன்'' (4806)
''வண்மையாளன்'' (4807)
''நல் அறிவாளன்'' (4808)
''பொன் மேனியன்'' (4812)
''ஆய் திறத்தவன்'' (4818)
''அணுக்கன்'' (4819)
''பெரிய கோள் அரி'' (4822)
''தடக் கையன்'' (4823)
''கலுழன் ஒத்தான்'' (4823)
''சாகா வரத் தலைவரில் திலகம் அன்னான்'' (4824)
''வாலொடு ஆகாயம் உற்ற கதலிக்கு உவமை ஆனான்'' (4824)
''இராகவன் தூதன்'' (4887)
''என்னுடை அனுமன்'' (4891)
' நம்பி'' (4899)
''தூண் ஆம் என்னும் தோள் உடையான்'' (4909)

இவ்வாறெல்லாம் அனுமனுடைய அறிவு, ஆற்றல், பண்பு, உடலமைப்பு, வீரம் அவன் கொண்ட தூது,

முதலியவற்றின் அடிப்படையில் அவனை ஏற்றிப் போற்றி அறிமுகப் படுத்திய கவிச் சக்கரவர்த்தி இலங்கா தேவியுடன் அவன் பொருது நின்ற நேரத்தில்,

"பழி இல்லான்" (4924)

என்று குறிப்பிடுகின்றார்! ஏன் இந்த எதிர்மறைச் சொல்?

பெண்ணோடு பொருதலே பழிக்கு ஆளாக்கும் சூழ் நிலை காரணமாக பெண்ணோடு பொர நேரிட்டாலும், அவளைக் கொன்று வீழ்த்துதல் பெரும் பழிக்கு ஆளாக் கும். இதனை இராமனே உணர்ந்திருந்தான். அரக்கியே யானாலும் தாடகை ஒரு பெண் தானே. அவளைக் கொல்லுதல் சீரியதன்று எனத்தயங்கி நின்றான். ஆனால், விஸ்வாமித்திர மாமுனி—தனக்கு மந்திரங்கள் உபதே சித்த குரு—அவளைப் பெண்ணாகக் கருதாமல் கொல்ல வேண்டும் என்று இட்ட ஆணையினால் கொன்றான். அந்த நிகழ்ச்சி அவன் மனத்தை உறுத்திக் கொண்டே இருந்தது. அதனால் 'வில்லறம் துறந்தேன்' என்று பின் னொரு சமயத்தில், தானே குறிப்பிட்டான்.

'அத்தகைய பழி அனுமனைச் சார்ந்து விடுமோ?' எனக் கம்பர் கருதினார்! ஏனென்றால் அவன்,

"இற்றுச் சூலம் நீறு எழல் காணா, எரி ஒப்பாள்
மற்றும் தெய்வப் பல படை கொண்டே
மலைவாளை
உற்று, கையால், ஆயுதம் எல்லாம் ஒழியாமல்
பற்றிக் கொள்ளா, விண்ணில் எறிந்தான்." (4923)

அவளுடைய உயிர் போய்விடுமோ என்று கவிச் சக்கர வர்த்தி அஞ்சினார் போலும்! அவர் அவ்வாறு அஞ்சு வதற்கும் காரணம் இல்லாமல் இல்லை. முன்னரே, அனுமன் இரண்டு பெண்டிரை வெல்ல வேண்டிய தாயிற்று!

முதலில், ''சுரசைப் பெயர்ச் சிந்தை தூயாள்'' (4805) எதிர்த்தாள். அவள் உண்மையில் அரக்கி அல்லள். இலங்கை நகர் நாடித் தனியே செல்லும் அனுமனின் ஆற்றலை அனைவர்க்கும் உணர்த்த தேவர்கள் வேண்டினர். எனவே அவள் அரக்க உருவு எடுத்து வந்தாள். வான்முட்ட ஓங்கி நின்றாள்; 'என்னுடைய கொடிய பசியை ஆற்றும் வகையில் என்னுடைய இருக்கைக்கே வந்து விட்டாய்; நீயே என் வாயில் புகுந்து எனக்கு உணவு ஆவாயாக; உனக்கு வேறு வழி இல்லை' என்று ஆர்ப்பரித்தாள்.

அனுமனும் அவளுனடய பசிக்காக மனம் இரங்கியவன் போலே பேசினான், 'இராமன் இட்ட பணியை முடித்துப் பின் நான் மீள்வேனேயானால் உன் பசிக்கு நான் இரையாவேன்; நீ உண்ணலாம்' என வெகு இங்கிதமாகப் பேசினான்.

தேவர்கள் (அனுப்பியவர்) ஆசையினாலே அனுமனின் சொல்லாற்றலை சுரசை உணர்ந்தவளாய், 'உன் சொல் கேட்டு நானும் நம்பி விடுவேனா? இப்போதைக்கு என்னிடமிருந்து தப்புவதற்கான சாதுர்யப் பேச்சு இது என யான் அறியேன் என நினைக்கின்றாயா?' என்று அனுமனைக் கேட்கும் பாங்கில் அவள் சிரித்தாள். இதோ; இப்பொழுதே. அனைத்துலகங்களும் காண உன்னை உண்டு என் பசி ஆறுவேன்' என அவள் சபதமிட்டாள்.

தன் சொல் மாயம் அவளை மயக்க முடியாததனால், செயல் பாயம் ஆற்றத் துணிந்தான், அனுமன்! 'உன்னுடைய கோரமான பெரிய வாயினுள்ளேயே புகுந்து செல்கின்றேன்; உன்னால் இயன்றால் என்னைத் தின்னலாம்' என உரைத்தான்.

சுரசை அனுமனை விழுங்கும் அளவிற்காகத் தன் வாய் பிளந்தாள்; பல அண்டங்கள் புகுந்தாலும் அந்தத்

திறந்த வாயை அடைக்க முடியாத அளவிற்கு இடை வெளி ஏற்பட்டது. அத்தகைய பெரிய வாயும் சிறிதே என்று சொல்லும் வகையில் அனுமன் தன் உடலை மிக மிகப் பெரிதாக்கிக் கொண்டான். அவ்வாறு வளர்ந் தவன் திடீரெனத் தன் உடலைச் சிறிதாகச் சுருக்கிக் கொண்டு சுரசையின் வாயில் நுழைந்தான்; தனக்கு அவன் உணவு ஆகிவிட்டான் என அவள் நினைந்து மூச்சு விடுவதற்குள் உள் நுழைந்தவன் வெளிவந்துவிட் டான். தன் உடலை சாதாரண நிலையின தாக்கி மேலே செல்ல முற்பட்டான்.

சுரசையும் தன் அரக்க உருவை மாற்றித் தன் சுய உருக் காட்டினாள்; அனுமனின் சாகசங்களைப் புகழ்ந் தாள்; தாயினும் மிக்க அன்போடு அவன் மேற்கொண் டுள்ள செயல்கள் யாவற்றிலும் வெற்றி காண ஆசி கூறினாள்.

எனவே, அனுமன் சுரசை என்னும் பெண்ணோடு பொருதேயாக வேண்டிய கட்டாயம் ஏற்பட்டாலும், அவன் தன்னை அவளை நம்பச் செய்து ஏமாற்றும் சாகசங்கள் புரிந்தான் என்றாலும், இறுதியில் அந்தப் பெண்ணிற்கு ஏதும் ஆபத்து நேரவில்லை என்பது மட்டும் அன்று, அவளே அவனுக்கு ஆசி கூறினாள் என்பதனால் அச் செய்கையின் அடிப்படையில் பழி என்பதே கம்பர் கருத்தில் தோன்றவில்லை.

அடுத்து, வான் வழியை அடைத்து நின்றாள் அங்காரதாரை, அனுமன் வருதல் கண்டு 'என்னைக் கடந்து செல்ல வல்லவன் யார்?' என ஆர்த்து எழுந்தாள்.

அவள் கோரமான உருவம் பெற்றிருந்தாள்; கா வழிச் செல்லும் பார்வையுடைய கண்கள்; கடல் ஓசை போல ஒலிக்கும் சிலம்புகள் அணிந்த கால்கள்; பிறைமதி

போன்ற கோரப் பற்கள்; யானைத் தோல் போர்த்த உடல்; மாபெரும் உலகத்திற்கே வழி போன்ற பெரிய வாய்; இத்தகைய உறுப்புகளைக் கொண்ட அங்கார தாரை முன்னாளில் திருமாலுடன் போரிட வழி தேடிச் சென்ற மது, கைடபன் என்ற அரக்கர்களை ஒத்து, தன் வலிய கால்கள் கடலிலும், தலை, வான் முகட்டிலுமாக அமையும்படி நின்றார்,

அவள் அறத்திற்கும் அருளுக்கும் அப்பாற் பட்டவள் என்பதை அனுமன் உணர்ந்தான். அவளுடைய வாய் வழி அல்லாமல் அந்த இடத்தைக் கடக்க வேறு மார்க்கமே இல்லை எனக் கண்டு வருந்தினாள். அவள் வாயையே பிளந்துவிடும் முடிவு ஏற்றான்.

அவளை நோக்கி 'நிழலைக்கொண்டே அந்நிழலுக்கு உரியோனை ஈர்த்துக் கொள்ளும் வரம் அடைந்துள்ளாய்; அதனால் ஆகாய வழி செல்லும் நான் மேலே செல்ல இயலாமல் தடுத்து வானை முட்டும்படி நிற்கின்றாய்

என் அவசரத்தை நீ அறிய வில்லை; நீ யார்? ஏன் இங்கு இவ்வாறு நிற்கின்றாய்?' எனக் கேட்டான்.

அதற்கு அவள், 'என்னைச் சாதாரணப் பெண் என்று நினைந்து விடாதே; என் அருகில் வருபவர்கள் தேவர்களேயானாலும் உயிர் இழப்பர்; எமனே துணையாக வந்தாலும் என்னிடமிருந்து தப்பிச் செல்ல இயலாது; எனக்கு இரை ஆகியே தீர வேண்டும்' என்று கூறினாள். அவ்வாறு கூறிக்கொண்டு அனுமனின் பேச்சுக்கே இடமின்றி அவனை விழுங்கும் அளவிற்குத் தன் வாயைப் பிளந்து விட்டாள். அவனுக்கு வேறு வழியே இல்லை; அவன் அவளைப் பெண் என்று உணர்ந்தாலும் அவளை ஒதுக்கிச் செல்ல முடியாது போயிற்று. எனவே, அவளுடைய வாயினுள் பேருடலுடன் புகுந்தவன், கண

நேரத்தில் அவளுடைய வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளிப் பட்டான், அவ் வரக்கி இறந்தாள்,

ஆக, இந் நிகழ்ச்சியில் அனுமன் பெண் கொலைக்கு ஆளானான் என்றாலும் அது அவளாகவே ஏற்படுத்திக் கொண்டு விட்ட சூழ்நிலை என்பதால் இக் கட்டத்திலும் அனுமனுக்குப் பழி என்பது கம்பர் கருத்தில் படவில்லை.

மூன்றாவதாக இலங்கா தேவி அனுமனைத் தடுத்து நிறுத்தினாள்; அவனுடன் சண்டையிட்டாள். அவன் அவளை விண்ணில் தூக்கி எறிந்தான். 'அவள் கதி என்ன ஆகப் போகின்றதோ?' என்று தோன்றிய உடனேயே கம்பர் கருத்தில் பழி உணர்வு வந்துற்றது. அவ்வுணர்வு தோன்றியதும் முதலிரண்டு பெண்களுடன் அவன் மோதியதும், அவர்களுள் அங்காரதாரை அழிந்ததும் கம்பரின் நினைவுக்கு வந்தன; என்றாலும், அவன் மீது பழி இல்லை என்பதை உறுதிப் படுத்திவிட்டு இலங்கா தேவி மாண்டு விட்டால் பழி அனுமனைச் சார்ந்துவிடும் என அஞ்சுகின்றார்!

எனவே, 'தூக்கி எறியப்பட்ட அவள் தாக்குப் பிடித்துக் கொண்டு, சினத்தினால் மேகம் போல முழக்கம் செய்தாள்; குன்றுகளைப் பெயர்த்தெடுத்துப் பந்தாட வல்ல தன்னுடைய கைகளால் அனுமனை அடிக்கக் கை ஓங்கினாள்' என்று அவளுடைய கோரச் செயலை வர்ணித்தார்.

மறுபடியும், தான் அனுமனைப் 'பழி இல்லான், என்று குறிப்பிட்டதை வலியுறுத்துவதைப் போலவே' கம்பர்,

"....................பெண். இவள் கொல்லின் பிழை
என்னா)

ஓடியா நெஞ்சத்து ஓர் அடி கொண்டான்'' (4925) எனப் பாடுகின்றார்.

அனுமனின் அடிபட்டதும் இலங்காதேவி மண்ணில் வீழ்ந்தாள்; நொந்தாள்; எழுந்தாள். தன் வரலாற்றினை அனுமனிடம் கூறிச் சென்று உய்ந்தாள்!

இனி, இதற்கு முன் 'பழி' என்னும் சொல்லின் அடிப்படையில் அனுமன் குறிப்பிடப் படவில்லையா என்பதையும் பார்த்தல் ஏற்புடைத்தாகும்

இலங்கைக்குக் கடல் கடந்து செல்வதற்கு ஒவ்வொரு வரும் தம்தம் இயலாமை காட்டி இறுதியில் அனுமனே ஏற்றவன் என முடிவெடுக்கின்றனர். அனுமனை விளித்துத் தங்கள் எண்ணத்தை வெளிப்படுத்தி அவன் இசைவைப் பெறச் சாம்பன் அனுமனது ஆண்மையைப் பெரிதும் புகழ்கின்றான்! அவ்வாறு சொன்ன புகழுரை களில் ஒன்றாக வந்தது 'பழி அற்றீர்' (4722) என்ற விளிச் சொல். அது அடுக்கடுக்காக வந்த காரி யத்தை போற்றுரைகளுள் ஒன்று என்ற அளவில் நின்று முக்கியத்துவம் பெறவில்லை.

ஆனால் இங்கு, அனுமன் இலங்காதேவியாம் பெண்ணோடு பொருது அவளை வீழ்த்தினாலும், அவளுடைய உயிரைப்போக்கி பெண் கொலை என்னும் பழிக்கு ஆளாகவில்லை என்று உறுதிப் படுத்தவே தக்க இடத்தில் 'பழி இல்லான்' என்ற சொற்றொடரால் அனுமனைக் குறிப்பிடுகின்றார், கவிச் சக்கரவர்த்தி என அறிகின்றோம்.

## 42. 'கண்ணின் கண்டான்'

இலங்காதேவி, தன் வரலாற்றைக் கூறி, ''அறம் வெல்லும்; பாவம் தோற்கும்''' (4929) என்று அனுமனி டம் இயம்பிச் சென்றாள். அவனும் இலங்கையுள் புகுந்

தான். ஒளி மயமான அந்நகருள் அவன் தன் வடிவைச் சுருக்கிக் கொண்டு சென்றான்.

அவ்வாறு சீதையைத் தேடிச் செல்லும் அனுமன் வழியில் பற்பல நிலைகளில் இருந்த அரக்க அரக்கியர்களைக் கண்டான். 'மஞ்சனம்' ஆடுவாரை;(4938) மாடத்து உம்பர் மழையின் வாய் பொத்துவாரை' (4939), 'நாடகம் காண்கின்றாரை. (4940), 'அடு நறவு அருந்துவாரை' 4941), 'ஒருவர் பால் ஒருவர் வைத்த காதல் அம் கள் உண்டார் போல் முறை முறை களிக்கின்றாரை' (4942), 'கலன் தெரிந்து அணிகின்றாரை' (4943), 'சிலம்பு விம்மி ஒலிபட உதைக்கும் தோறும், மயிர்ப் புளகு உறுகின்றாரை' (4944), 'கணவரைக் கனல்கின்றாரை' (4945), 'தீம் தேன் மாந்தினர் மயங்கு வாரை' (4946), 'நலன் உறு கணவர் தம்மை நவை உறப்பிரிந்து அலமரும் உயிரினோடும் நெடிது உயிர்த்து அயர்கின்றாரை '(4947), 'ஏதி அம் கொழுநர் தம்பால் எய்திய காதலாலே, தூதியர் முறுவல் நோக்கி, உயிர் வந்து துடிக்கின்றாரை' (4948) 'மலர்ப் பலி வகுக்கின்றாரை' (4949), 'விழாவோடு வருகின்றாரை' (4950), 'கள்ள வாள் நெடுங் கண் என்னும் வாள் உறை கழிக்கின்றாரை' [4951), 'ஓவியம் அனைய மாதர் ஊடினர், அருங்கதவு அடைக்கின்றாரை' (4952), 'புது மனை புகுகின்றாரை' (4953), 'புது மணம் புணர்கின்றாரை' (4954), 'இயக்கியர், அரக்கி மார்கள், நாகியர், எஞ்சு இல் விஞ்சை முயல் கறை இலாத திங்கள் முகத்தியர் முதலினோரை' (4955) கண்டு சென்ற அனுமன், கும்பகர்ணனைக் கண்டான்.

இதைக் காட்ட வந்த கவிச் சக்கரவர்த்தி,

"...... . ...................... கும்பகருணனைக் கண்ணின்
கண்டான்" (4955)

கனப் பாடுகின்றார்.

'கும்பகருணனை அனுமன் கண்ணால் கண்டான்' என்று இதற்குப் பொருள் கொள்வர். அப்படியென்றால் அவன், மேலே குறிப்பிட்ட அனைவரையும் கண்ணால் காணாது எவ்வழிக் கண்டான்? அவர்களையும் கண்ணால் தானே கண்டிருக்க முடியும்! அப்படி இருக்க,கும்பகருணனை மட்டும் கண்ணால் கண்டான் என்று எளிமையாகப் பொருள் கண்டால் போதுமோ?

இதற்கு விளக்கம் அளிப்பதைப் போலே, 'அனுமன் பிறரை யெல்லாம் கண்டது மட்டும் அல்ல; அவர்கள் யார்? அவர்களின் செய்கைகள் என்னென்ன? அச் செய்கைகளின் சூழல்களும், காரணங்களும் எவை யெவை? என்றெல்லாம் ஆய்ந்தான்! இப்பொழுது கும்பகருணனைக் காண்கின்றான்'' என்னும் பொருளில்,

"............................ ........................முதலினோரை—
மயக்கு அற நாடி ஏகும் மாருதி, மலையின் வைகும்,
கயக்கம் இல் துயிற்சிக் கும்ப கருணனைக் கண்ணில்
கண்டான்'' (4955)

எனப் பாடுகின்றார்.

அப்படியானால், கும்பகர்ணன் செயலை அனுமன் ஆய்ந்திட வில்லையா? ஆம்; அவன் செயலை ஆய்ந்திடத் தேவை இன்றி ஆகியது என்பதைக் குறிக்கவே கம்பர் 'கண்ணில்' என்ற சொல்லைச் சேர்த்துள்ளார்.

கும்பகருணன் மலை போல் கிடந்தான். ஒரு வேளை அவன் அயர்ச்சியால் படுத்துள்ளானோ என்று அனுமன் ஐயப்படவில்லை என்பதைத் தெளிவுறுத்தவே, 'கும்பகர்ணனுடைய கண்ணில் அவனுடைய கவலையற்ற தூக்க நிலையைக் கண்டான்' என்பதைக் காட்டி 'கண்ணில்—கும்பகர்ணனுடைய கண் வழியாக' என்று அச்சொல்லைக் கவிச் சக்கரவர்த்தி பெய்துள்ளார்.

இனி, கம்பரின் கண்ணில் இக்காட்சியைக் காண முயல்வோம்; பின்னால் வரும் நிகழ்ச்சிக்கு ஏற்ப 'கும்ப கர்ணனைக் கண்ணில் கண்டான்' என்ற சொற்றொடர் அமைந்து விட்டது என்பதைச் சுவைக்கலாம்!

சுக்கிரீவனுக்கும் கும்பகர்ணனுக்கும் போர் நிகழ்ந்தது. சுக்கிரீவன் உணர்விழந்தான். அவனைக் கும்ப கர்ணன் இருகைகளாலும் தூக்கிச் சென்றான். இராமன், அவன் நகர்க்குள் செல்லக் கூடிய வாயிலை அடைத்து நின்றான். கும்பகர்ணன் இராமனைக் கண்டான். அவனுடைய செயலுக்காக இடித்துரைத்தான். பேசிக் கொண்டிருக்கும் பொழுதே கும்பகர்ணனின் உடற் புண்ணிலிருந்து குருதி சிந்தி, சுக்கிரீவன் மேல் விழுந்தது. அதன் விளைவாக, அவனுக்கு மயக்கம் தெளிந்தது. அவ்வாறு மூர்ச்சை நீங்கியவுடனேயே கும்பகர்ணனின் கைகளின் பிடி நெகிழ்த்தி அவனுடைய காதையும் மூக்கையும் சுக்கிரீவன் கடித்துத் துண்டாக்கி விட்டுத் தாவினான்.

இராமனுக்கும் கும்பகர்ணனுக்கும் இறுதியில் போர் நிகழ்ந்தது. முதலில் கைகளை இழந்தான்; பின்னர் கால்களை இழந்தான். முடிவில் இராமன் கையால் தான் வீழப்போவதை உணர்ந்த கும்பகர்ணன், இராமனிடம் தன் தலையைக் கடலில் இடுமாறு வேண்டினான். காரணம் காதொடு மூக்கும் இழந்த முகம் கண்டு அனைவரும் இகழ்வரே என்பதுதான்! இராமனும் அதற்கு இசைந்தான். இராமனுடைய அம்பு கும்பகர்ணனுடைய தலையைக் கொய்து கடலுள் ஆழ்த்தியது.

"மாக் கூடு படர் வேலை மறி மகரத் திரை வாங்கி,
மேக் கூடு, கிழக்கூடு, மிக்கு இரண்டு திக்கூடு,

போக் கூடு கவித்து, இரு கண் செவியூடும் புகை
உயிர்க்கும்

மூக் கூடும் புகப் புக்கு மூழ்கியது, அம்முகக் குன்றம்''

எனப் படம் பிடித்துள்ளார். கம்பர்.

ஆக, அன்று கும்பகர்ணன் உறங்கிக் கொண்டிருந்த பொழுது மூடிய நிலையிலாவது அனுமன் அவனுடைய கண்களைக் கண்டான். பின் வரப்போகும் காட்சியில் எல்லோரையும்போல் அல்லாது, அவனுடைய கண்களை யாரும் பார்க்க முடியாத நிலை அமையப் போகின்றது. என்று முன் கூட்டியே கவிச் சக்கரவர்த்தி, உரைக்காமல் உரைப்பதாக அச்சொற்றொடர் நிற்கின்றது!

# 43. தன் உணர்வினால் உணர்ந்தான்

இலங்கையினுள் புகுந்த அனுமன் சிற்றுருக்கொண்டு ஆங்காங்கு இருந்த அரக்கர் நிலை முதலியவற்றைக் கண்டு கொண்டே வந்தான். அந்தந்த அரண்மனைப் பகுதிகளில் சீதையை இனம் கண்டு முயன்று தேடினான்.

ஒரு பிரிவில் மலையென ஓர் உருவம் கிடந்து உறக்கத்தில் இருப்பதைக் கண்டான் அவனைக் கண்ணின் கண்டான். என்பதன் விளக்கத்தை முன்னைய கட்டுரையில் ஆய்ந்தோம். அவனை அந்த உறக்க நிலையிலேயே கூர்ந்து கவனித்தவன், 'அரக்கர் கோ எனா நின்ற குணம் இலி இவன்' எனக் கொண்டான், ஆம்; அவனுடைய வீரதீரமான உடல் வாகுவைக் கண்டு இவன்தான் இராவணனோ?' என்று ஐயுற்றான்! சினம் தலைக்கேறியது.

உடனே, அனுமன் நினைவிற்கு இராவணாதியர் மூவர் ஆயிற்றே; வல்லமை மிக்க அம்மூவருள் இவன் யாவனோ? எவனேயாயினும் ஆகுக. இவனுக்குப் பத்து

தலைகளும் இருபது தோள்களும் இன்மையால் இராவண னாய் இருக்க முடியாது! என்று நினைந்து சினம் தணிந்தான்.

'மூவரின் ஒருவன் ஆம் ஈட்டான்' என்பதற்கு மும்மூர்த்திகளில் ஒருவன் என்று சொல்லத் தகுந்த அளவிற்குப் பெருமை பொருந்திய அனுமன்' என்று பொருள் கொள்வாரும் உண்டு. அனுமன் இலங்கை யினுள் புக்கதுமே,

"...............வீதி ஏகுதல் இழுக்கம் என்னா
தன் தகை அனைய மேனி சுருக்கி, மாளிகையின் சார
சென்றனன்......................................." (4934)

என அவன் மறைந்து சென்றதாகக் கூறியுள்ளார், கவிச் சக்கரவர்த்தி. அப்படியிருக்க அவனை மும்மூர்த்திகளுள் ஒருவனாக ஈண்டு கம்பர் காட்ட வேண்டிய தேவை என்னே! மேலும் கும்பகர்ணனைக் கண்டதும் "ஏவனோ இவன்?" (4964) என்று ஐயுற்ற அனுமன், தனக்குத்தானே விடையிறுத்துக்கொள்பவனாகி, தன் சினம் தணிந்ததும்,

"எவன் ஆயினும் ஆக" (4966)

என்று சொல்லிச் செல்கின்றான். எனவே, இலங்கைச் சகோதரர் மூவர் என அனுமன் அறிந்திருந்தான். அவருள் வல்லமை பொலிய காம்பீர்யமாக உறங்கிக் கொண்டிருக்கும் இவன் எவனோ? என்று ஐயுற்றான் எனக் கோடலே ஏற்புடைத்தாகும்.

இனி, கும்பகர்ணன் இருப்பிடத்தை நீங்கிச் சென்ற அனுமன் மற்றோர் மாளிகையைக் கண்டான். அம்மாளி கையில் பெருமை பொருந்திய ஒருவனைப் பார்த்தவன், கும்பகர்ணனைக் கண்டதும் சினந்ததுபோல் சினக்க வில்லை,

"அவன் உணர்வைத் தன் உணர்வினால்
உணர்ந்தான்" (4971)

அம்மாளிகையைத் தேனைச் சிந்துகின்ற கற்பக மரங்கள் சூழ்ந்துள்ளன; நறுநிழல் பரவியுள்ளது; பளிங்கு மேடைகளோடு பவளமயமாக அது திகழ்கின்றது. அத்தகைய மாளிகையினுள் இருக்கும் உருவமோ முன்னைய மாளிகையில் கண்டவனது போன்றே கறுப்பாய்த்தான் மிளிர்ந்தது. என்றாலும், அவனிடம் காணப் பெற்ற வன்மை இவனிடத்தில் காணப் பெறவில்லை. அதனால், அனுமன் தன் இயற்கை நிலையிலேயே நோக்கலானான்.

அன்று, இராம இலக்குவரைக் கண்டதும் சுக்கிரீவன் அஞ்சிய காரணத்தினால் அனுமனும் மறைந்து நின்று அவர்களை உணர முற்பட்டான்.

"நெஞ்சு அயிர்த்து, அயல் மறைய நின்று,
கற்பினின் நினையும்" (3754)

எனக் கவிச் சக்கரவர்த்தி அனுமனைப் படம் பிடித்தார்.

அந்தப் படம் அவருடைய நினைவிற்கு இப்பொழுது வந்தது. அதனால், அவன் வீடணனை இன்ன தன்மையன் என்று புரிந்து கொள்வதற்கு முன்னரே கவிக் கூற்றாக,

"..................... கரு நிறத்தோர் பால்

வெளித்து வைகுதல் அரிது என, அவர் உரு மேவி,
ஒளித்து வாழ்கின்ற தருமம் அன்னான்தனை
உற்றான்" (4970)

எனப் புகன்று விட்டார்!

அதற்கேற்ப, அனுமன் அன்று இராம இலக்குவரைப் பற்றி,

" கதம் எனும் பொருண்மை இலர்;
கருணையின் கடல் அனையர்;
இதம் எனும் பொருள் அலது, ஓர் இயல்பு
உணர்ந்திலர் இவர்கள்" (3758)

என்று நினைந்ததைப் போலவே, இன்று வீடணனைப் பற்றி,

" குற்றம் இல்லது ஓர் குணத்தினன் இவன்" (4971)
எனக் கருதுகின்றான்.

எனவே: அனுமனைத்தான் நன்குணர்ந்த தன்மையைக் கம்பர், அவன் மேலேயே ஏற்றி, அவன் வீடணனை உணரும் பாங்கினை, வீடணனுடைய உள்ளத்தைத் தன் உள்ளத் தெளிவினால் அனுமன் கணித்தான் 'என்றதற்கான சொற்றொடராய்,

" அவன் உணர்வைத் தன் உணர்வினால்
உணர்ந்தான்"
எனப் பெய்துள்ளார்.

# 44. பொன் துன்னும் மணிப் பூணாள்!

இலங்கை நகருள் பற்பல மாளிகைகளில் மறைந்து நின்று, மறைந்து நின்று சீதையைக் கண்டு கொள்ள முயன்று, அனுமன் அயிர்த்தான். சீதையைக் காண இயலவில்லை; மனம் வெதும்பி,

"..... .. ...........அந்தோ' இத் நெடு நகரில்
பொன் துன்னும் மணிப் பூணாள் இலள்" (5059)
என்று பொருமி, திரும்பிச் செல்ல எண்ணினான்.

ஈண்டு, சீதையை, 'பொன்னாலான ஆபரணம் அணிந்த பெண்மணி' என்று குறிப்பிட்டது ஏன்? என்றா

வது அவளை அணிகலன்கள் பூண்ட நிலையில் அனுமன் கண்டிருந்தானா?

"பொன்சேர் மென் கால் கிண்கிணி ஆரம்
புனை ஆரம்
கொன்சேர் அல்குல் மேகலை தாங்கும் கொடி
அன்னார்
தன் சேர் கோலத்து இன் எழில் காண, சதகோடி
மின் சேவிக்க மின் அரசு என்னும்படி நின்றாள்"
(510

என்று முதன் முதலில் மிதிலையில் கன்னி மாடத்தில் சீதையை நிறுத்திக் காட்டிய பொழுது கூட, கம்பர், அவளுடைய பொன்னாபரணங்களை நமக்குக் காட்டவில்லை. பொன்னாபரணங்களை அணிந்துள்ள தன் தோழியரின் நடுவில் அவள் ஒரு மின்னொளியென நின்றாள் என்று தான் வர்ணிக்கின்றார்! வர்ணனையில பளிச்சிடும் கவிதைச் சொல்லாபரணம் கொண்டு சீதையும் பொன்னாபரணங்களைப் பூண்டிருந்தாள் என நாம் அனுமானிக்க வேண்டியுள்ளது!

அதனை உறுதிப்படுத்துவதைப் போல், கம்பர்,

"இழைகளும் குழைகளும் இன்ன, முன்னமே
மழைபொரு கண் இணை மடந்தை மாரொடும்
பழகிய எனினும், இப் பாவை தோன்றலால்,
அழகு எனும் அவையும் ஓர் அழகு பெற்றதே!"
(513)

என்றும்,

"அருகில் நின்று அசைக்கின்ற ஆலவட்டக் கால
எரியினை மிகுத்திட, இழையும், மாலையும்
கரிகுப" (531)

என்றும் பாடுவார் கவிச் சக்கரவர்த்தி. மீண்டும்,

" நிழல் இடு குண்டலம் அதனின், நெய் இடா,
அழல் இடா, மிளிர்ந்திடும் அயில் கொள்
கண்ணினாள்" (522)

என்றும்,

"பொலங்குழை மயிலை" என்றும் (524)

"காதொடும் குழை பொரு கயற் கண் நங்கை" (525) என்றும்,

"கனங் குழையாள்" (683) என்றும்,

"கனங் குழையைக் காதலித்து" (686) என்றும்,

காதல் நோயால் வாடும் சீதையைக் காட்டுவதனால் அவள் குண்டலங்கள் அணிந்திருந்தாள் என்பதை வெளிப்படுத்துகின்றார். அது மட்டுமா!

"தழங்கிய கலைகளும் நிறையும் சங்கமும்
இழந்தவள்" (523) என்றும்,

"பொன் தொடி மடந்தை" (709) என்றும்,

பாடியதனால் அவள் சங்கு வளைகளையும் அணிந்திருந்தாள் என்பதும் தெரிகின்றது. காதல் நோயால் அவள் சோர்ந்து விழுந்த நிலையில்,

"கலம் குழைந்து உக" (524)

நேர்ந்ததால் அவள் மேலும் பல ஆபரணங்களை அணிந்திருந்தாள் என்றாகின்றது. அவற்றுள் சில நூலால் கோக்கப்பட்டிருந்தன என்பதுவும்,

"எரிந்த வெங்கனல் சுட, இழையில் கோத்த நூல்
பரிந்தன" (529)

என்ற வரிகளால் தெரிகின்றது.

இராமன், சீதையின் உரு வெளித்தோற்றத்தால் நைந்திடும் பொழுது, அவளுடைய

"வண்ண மேகலைத் தேர் ஒன்று" (623)
தெரிகின்றது!

உலாவரும் இராமனின் அழகினை அனுபவிக்கும் ஓர் ஆரணங்கிற்கு சீதையின் தனங்களின்மீது உள்ள அணிகலம் மிளிர்கின்ற காட்சி தெரிகின்றது.

"... .. ................... ... ...பொலன் குழைப் பூண்
முலைச் சீதை" (1086)

என்கின்றாள்.

சாதாரண நிலையிலேயே சீதையின் அணிகலன்கள் பற்றி இவ்வாறெல்லாம் குறிப்பிட்டுள்ள கம்பர், அவளைத் திருமண மண்டபத்திற்கு அழைத்து வரும் கூட்டத்தில் அவளுடைய உருவைக் காண முடியாத அள விற்கு அவளுக்கு அணிகலன்களைப் பூட்டிவிடுவார் என்பதில் வியப்பு உண்டோ!

"அமிழ் இமைத் துணைகள் கண்ணுக்கு அணி
என அமைக்குமா போல்
உமிழ் சுடர்க் கலன்கள், நங்கை உருவினை
மறைப்பது ஓரார்" (1119)

எனத் தோழியரிடத்துக் குறை காண்கின்றார்!

பெண்களிடத்தில் குறை கண்டால் எவர்தான் தப்ப முடியும்! கவிச்சக்கரவர்த்தி மட்டும் என்ன? 'மேனியை மூடினால் மட்டும் போதுமா? நெற்றி தெரிகின்றதே!' என்று அப் பெண்கள் சொல்வதைப் போலே,

"விதியது வகையால் வான மீன் இனம் பிறையை
வந்து
கதவுறுகின்ற தென்னக் கொழுந்து ஒளி கஞலத்
தூக்கி,

மதியினைத் தந்த மேகம் மருங்கு நா வளைப்பது
என்ன,
பொதி இருள் அளக பந்தி பூட்டிய பூட்டும்
இட்டார்'' (1121)

சுட்டியென்னும் அணியைச் சீதையின் நெற்றியிலே ஒளி வீசும்படி தொங்க விட்டனர்; முன் நெற்றியை ஒட்டிய கூந்தல் பிரிவிலே பூட்டு என்னும் அணியை இட்டனர்

கவிச் சக்கரவர்த்தியின் வர்ணனைகளில் சொல்லழகு ஊட்டி ஊசலாடும் காதணி எங்கே? இதோ; தோழியர் சீதைக்கு அக் குழைகளையும் ஒளி வீசும்படி ஊசலாட அணிவித்து விட்டனரே!

ஆணழகன் இராமனுக்கு ஆரணங்கு சீதை கழுத்தை நீட்டப் போகின்றாள் என்று எண்ணியவுடனேயே அவளுடைய கழுத்தில் அணிகலன் எங்கே என்று தேடினார்கள். 'மாங்கல்யம் அணிந்த மாதரார்க்கு எல்லாம் சீதையே இலக்குமியின் அம்சமான மாங்கல்யமாய்த் திகழும் போழ்து இவளுடைய கழுத்துக்கு என்று தனி ஆபரணம் ஏது? என்று விட்டுவிட்டார்களா? திருமாலின் சங்கு ஒத்த அவளுடைய கழுத்தில் ஒன்றுக்கு ஒன்று பொருத்துகின்ற அணிகலன்களை எல்லாம் மாட்டி விட்டனர்!

ஏற்கனவே அவளுடைய தனங்களின்மேலே ஆபரணங்கள் அழகாக, அமர்ந்துள்ளன, அந்த ஆபரணங்களுக்கு ஆரமா முத்து மாலை! நன்று நன்று.

ஆம், முத்து மாலை யென்றால் வெண்மையாகத் தானே இருக்கும், இவளுடையது செந்நிறமாசத் திகழ்கின்றதே! அதுவா? சீதையின் மேனிச் செம்மை அவள்தன் தனங்களின் வழி அம்முத்து மாலையின் மீது வீசுவதால் வெள்ளை அணியே செந்நிறமாய் மிளிர்கின்றன! அனைந்திற்கும் சிகரம் வைத்தாற் போல் அக் கொங்கைகளின் மேல், நீல மணி பதிக்கப் பெற்றுள்ளது!

---

இராமனின் 'தோள் கண்டார் மட்டும் தோளே கண்டவராய்' நிற்பரோ? சீதையின் தோள் அழகும் அத் தகையதே! அதனைப் பிறர் கண்டு அயர்ந்து நிற்றல் ஆகாதே என்ற கூச்சத்தால். சிவந்த ஒளி மயமான பது மராகமணிகள்—முத்துகள் ஆகியவற்றைக் கோவையாக பொருத்தப் பட்ட மூங்கிலுக்கு இணையாக ஆபரணங் களைப் பொருத்தி விட்டன!

அவ்வாறு அழகு செய்யப்பட்டுள்ள தோள்களில் தொடங்கும் கைகள் சும்மா தொங்குமா? இதோ இரத்தினக் கடகங்கள்! பற்றாக் குறைக்கு சங்கு வளை கள்!

துடியிடையாளின் மேற்பகுதிகளில் ஆ ப ர ண மாளிகை அமைத்தால் அவ்விடை தாங்குமா? ஒடிந்து விடாதோ! அந்த ஆபத்து நேராமல் மேகலாபரணம் மணியாரம் தாரகைச் சும்மை என்றும் பெயரைப் பெற்ற முத்து வடங்கள் கலாபம் முதலிய இடையணிக ளால் ஒட்டுச் சுவர்கள் எழுப்பப் பெற்று அழகின் வலு அமைந்து விட்டது! எவ்வளவு ஆபரணங்களைக் கண் டால் நம் கண்கள் கூசுமோ கூசாதோ' அவை, உமிழ்ந்த செவ்வொளி தோழியரின் கண்கள் கூசி மழுங்கும்படிச் செய்தது!

அங்கம் அங்கமாய் அணிகலன் அணிந்த அம்மையின் திருவடியைச் சேவிக்காமல் இருக்கலாமோ! அதோ, நமக்கும் முன்னே சிலம்புகள் அவள் திருவடியைச் சேர்ந்து ஆர்ப்பரிக்கின்றனவே! தனித்து நின்று ஆர்ப்ப ரிப்பா; இல்லையில்லை; கோக்கப் பட்ட பாத சாலம்; பாம்பினுடைய தலையைப் போலச் செய்யப்பட்ட நூபுரம் ஆகிய இரண்டு அணிகளும் உடன் உள்ளன.

இவ்வளவு ஆபரணங்களும் சேர்ந்து ஒளி வீச சீதை,

"பொன்னின் ஒளி" (1144)

ஆகி மணி மண்டபம் அடைந்தாள் எனக் கவிச்சக்கர வர்த்தி அவளையே ஒரு பொன்னுருப் பெண்ணாக்கிக் காட்டுவார்!

தான் மணமகனைத் தேர்ந்தெடுக்க வேண்டிய கட்டத்திலேயே சீதை பொன்னுருப் பெற்றாள் என்றால், தேர்ந்தெடுத்த ஆண்தகை இராமன் அவளைக் கைப் பிடிக்க வேண்டிய கட்டத்தில் திருமண மண்டபத்தில் நுழையும் போழ்து,

"ஓர் செம் பொன் கொம்பர்" (1238)

என வந்தாள் என்பது சொல்லவா வேண்டும்!

பற்றாக் குறைக்குத் தங்கள் திருவடி வீழ்ந்து வணங்கிய மருமகள் சீதைக்கு மாமியர் மூவரும் எண்ணற்ற கோடிக் கணக்கான பொற் காசுகளையும், அளவில்லாத கோடிக் கணக்கான அழகிய அரிய அணிகலன்களையும் வேறு தந்துள்ளனர்!

அயோத்தியினின்று திருமணத்திற்குச் சென்ற பல்லாயிரவருள் நாம் இருந்து காணவில்லையென்றாலும் கவிச் சக்கரவர்த்தி கம்பர் சொல்லாயிரம் கொண்டு தரும் விருந்து கண்டு சீதையை நாம் காண்கின்றோம்! ஆனால், அனுமன் அவளைக் காணவே இல்லையே!

மிதிலையில் இராமன்–சீதை திருமணத்திற்கு வந்து கண்டு களித்த திரளான கூட்டத்துள் அனுமனும் இருந்தானோ? இருந்திருந்தால் அவனுடைய உடல் அனைவரையும் ஈர்த்து அப்பொழுதே அவனை நமக்குக் கம்பர் அறிமுகப்படுத்த நேர்ந்திருக்குமே! மேலும், ருஷ்ய முக பர்வதத்திற்கு இராம இலக்குவர் வந்த பொழுது அவர்களை அவன் அடையாளம் கண்டுகொண்டிருக்க முடியும்; மறைந்து நின்று அவர்கள் யாவர் என அவன் காண வேண்டி இருந்திராது.

இனி, இவ்வளவு ஆபரணங்களைப் பூண்ட சீதை எப்பொழுதும் அவற்றைக் கொண்டிருந்தாளா?

இராம இலக்குவர் கானகப் புறப்பட்டுவிட்டனர். அறிந்தாள் சீதை; தானும் ஆரணியத்திற்கு வருவதாக இராமனிடம் கூறினாள்; அவனோ, அவளைத் தவிர்க்க நினைந்து பேசலுற்றான்; அவளோ, அவன் பேசி முடிப்பதற்கு முன்னே உள் சென்று சீரை உடுத்தி வந்து கானகக் காட்சி தந்தாள். அவ்வாறு மரவுரி உடுத்தியவள் அனைத்து அணிகலன்களையும் நீத்தாள் எனக் கூறவும் வேண்டுமோ?

'ஆம்; அதற்கு சாட்சி வேண்டும்!' என்றால் அத்திரி முனிவரின் ஆசிரமத்தில் காணலாம்!

சித்திர கூடத்தை விட்டுச் சென்ற இராம இலக்குவரும் சீதையும் தண்டக வனத்தினுள் புகுவதற்கு முன் அத்திரி முனிவரின் ஆசிரமத்தில் ஓரிரவு தங்கினர்; உண்டனர். அப்பொழுது அம்முனிவரின்

"பன்னி, கற்பின் அனசூயை பணியால், அணிகலன்,
துன்னு தூசினோடு சந்து, இவை சுமந்த சனகன்
பொன்" (2520)

என்று பாடி, கவிச் சக்கரவர்த்தி, சீதைக்கு அனசூயை ஆபரணங்கள் பூட்டினாள், என்று கூறுகின்றாள். ஏற்கனவே, சீதை அணிகலன்கள் பூண்டு வந்திருந்தால். அந்த அம்மை ஆபரணங்கள் தந்திடும் அவசியம் வந்திராது.

ஆக, மிதிலை, அயோத்தி ஆபரணங்கள் இல்லை என்றாலும் அனசூயை அளித்த ஆபரணங்களையாவது சீதை அணிந்திருந்த பொழுது அனுமன் கண்டானா? அவற்றையும் ஆகாயத்தில் பறந்து சென்ற நிலையிலேயே அனைத்தையும் பெரிதாக்கிச் சுக்கிரீவக் கூட்டத்தார்

எடுக்கும்படியாக இட்டாள். அப்படியிருக்க, அனுமன்

''பொன் துன்னும் மணிப் பூணாள்''

என்று சீதையைத் தேடியது ஏன்?

இந்நிலையில் தான் நாம் கம்பரின் சொற்பொருள் திண்மையைக் காண முடிகின்றது! ஆயிரம் வகைப் பூக்களை 'மலர்' என்ற சொல்லாற் குறிப்பிட்டாலும், அம் 'மலர்' எனும் சொல் தனித்து வரும் பொழுது 'தாமரை' யையே குறிப்பிடும். அதுபோல், எத்துணை வகை ஆபரண்ணங்கள் பொன்னால் செய்யப் பெற்று தனித்தனிப் பெயர் உற்றாலும் ''பொன் அணி' எனத் தனித்து நின்றால் அது மங்கையரின் மங்கல நாணையே குறிக்கும் என்னும் அடிப்படையைக் கம்பர் காட்டுகின்றார்.

மங்கல நாணின் மகிமையைக் காட்டவே, கம்பர்,

''மாதர் அருங்கலமும், மங்கலமும் சிந்தி (1699)

என்றும்,

''உன் கழுத்தின் நாண், உன் மகற்குக் காப்பின் நாண் ஆம்'' (1653)

என்றும்,

'' மான் அணி நோக்கினார் தம் மங்கலக் கழுத்துக்கு எல்லாம்
தான் அணி ஆன போது, தனக்கு அணி யாது மாதோ?'' (1123)

என்றும் பால காண்டத்திலேயே பாடியுள்ளார்.

அத்தகைய மங்கலப் பொன் அணியைச் சீதை நீங்கினாள் இல்லை என்பதை அனுமன் அறிவான்!

சீதை இட்ட அணிகலப் பொதியை அவிழ்த்த போழ்து அதனில் கொங்கை புல்கிய பூணும், அல்குலின்

அணிகளும், பிற உறுப்புகளின் அணிகலன்களும்தான் காணப்பட்டனவே அன்றி, அவளுடைய மங்கலப் பொன் அணி இடம் பெறவில்லை. மேலும், இராமன் புலம்பிய பொழுது,

" விலங்கு எழில் தோளினாய், வினையினேனும், இவ்
இலங்கு வில் கரத்திலும், இருக்கவே, அவள்
கலன் கழித்தனள்; இது கற்பு மேவிய
பொலன் குழைத் தெரிவையர் புரிந்துளோர்கள்
யார்?" (3920)

என்று, சீதை ஆபரணங்களைக் கழற்றியதைத்தான் குறிப்பிட்டானே அன்றி 'மங்கல நாணையும் நீத்தாள் என்ற பாங்கில் குறிப்பிடவில்லை.

எனவே, சீதையை மங்கல நாணுடன் காணும் வேட்கையில் தேடிய அனுமன் அவளைக் காணாது அயர்ந்தான். 'அவள் இருந்தால் நிச்சயம் மங்கலப்பொன் அணியளாய்த் தானிருப்பாள். இன்றேல் உயிரோடு இராள்' என்று உறுதி கொண்டிருந்தான். அதனால் உடனே,

" கொன்றானோ, கற்பு அழியாக் குலமகளை? கொடுந்
தொழிலால்
தின்றானோ? எப் புறத்தோ செறித்தானோ, சிறை?
சிறியேன்
ஒன்றானும் உணரகிலேன்" (5060)

என்று பொருமுவான்.

இவ்வாறெல்லாம் கவிச்சக்கரவர்த்தி சொற்களையும், சொற்றொடர்களையும் கையாண்டு நாட்டின் நாகரிகத்தை, பண்பாட்டைக் காட்டாமல் காட்டிச் செல்கின்றார் எனக் கண்டு மகிழ்கின்றோம்!

# 45. வெந்தழலால் வேய்கேனோ?

இலங்கை முழுதும் அனுமன் சீதையைத் தேடினான்; காணவில்லை. அவளை இராவணன் கொன்றானோ, தின்றானோ என்றெல்லாம் ஐயுற்றான். சீதையைக் கண்டு பிடித்தே வருவான் என்று நம்பியிருப்பவர்கள் எல்லோரும் ஏமாந்திடும் நிலையில் ஊர் திரும்புவதா என வெதும்பினான். 'யார் யாரோ காணப் படுகின்றார் கள், சீதை ஒருத்தியை மட்டும் காணேனே' என்று ஏங்கினான். சினம் பொங்கியது,

" வல் அரக்கன்தனைப் பற்றி, வாயாறு குருதி உக,
கல் அரக்கும் கரதலத்தால், 'காட்டு' என்று
காண்கேனோ?
எல் அரக்கும் அயில் நுதி வேல் இராவணனும்
இவ் ஊரும்,
மெல் அரக்கின் உருகி உக, வெந்தழால்
வேய்கேனோ?" (5064)

என்று தன் மனத்துள்ளே சீறி வீழ்ந்தான்.

இராவணனைப் பிடித்துத் தன் முரட்டுத்தனத்தைக் காட்ட அனுமன் எண்ணியது சரி; அவனைச் சாகடிக்கத் துடித்ததும் சரி. ஆனால், இலங்கைக்கு எரி ஊட்டுவ தாகச் சினந்தானே! அது ஏன்?

அனுமன், 'சொல்லின் செல்வன்' என்பது மட்டும் அல்ல. ஆன்றோர் வாய்ச் சொல் போன்றே அவன் சொல்லும் பலிக்கும் தன்மையன!

இராம-இலக்குவரைக் கண்டு வந்தவுடனே சுக்கிரீ வனிடம்,

"............... ............................ விரை செய்தார்
வாலி என்ற அளவு இலா வலியினான் உயிர்
தெறும்"(3787)

என்றான்; அவ்வாறே நடந்தேறியது!

இராவணனோடு தன் கரதலத்தால் சண்டை செய்வதாகக் கூறினான்; நடந்தேறியது. அந் நிகழ்ச்சியை.

"என் தோள் வலி அதனால் எடுத்து யான் எற்றவும், இறவா
நின்றாய் எனின், நீ பின் எனை, நின் கைத் தல நிரையால்–
குன்றே புரை தோளாய்–மிடல் கொடு குத்துதி: குத்தப்
பொன்றேன் எனின், நின்னோடு எதிர் பொருகின்றிலென் என்றான்"
(7182)

என்ற பாடலால் அறிகின்றோம்.

இராம–இலக்குவரைப் பற்றி, சுக்கிரீவனிடம்,

"நீதியார்; கருணையின் நெறியினார்; நெறிவயின்
பேதியா நிலைமையார்; எவரினும் பெருமையார்;
போதியாது அளவு இலா உணர்வினார்; புகழினார்"
(3790)

என்றெல்லாம் அவர்களுடைய நீதி நெறிகளையெல்லாம் எடுத்துக் கூறியவன், 'நீ அரசனாவாய்' என்றான். அவ்வாறே வாலியின் நேர்வாரிசான அங்கதன் இருந்தும், சுக்கிரீவன் அரசன் ஆயினான்!

இனி, இலங்கை எரி மூளும் என அவன் நினைந்து உரைத்தது மட்டும் பொய் ஆகலாமா?

அனுமனின் வீர சாகசங்கள் குறித்து இராவணனிடம் கூறப் பெற்றது; அவன் சயித்தியத்தை உடைத்து வீசியதையும் அறிந்தான்; அனுமனைப் பிடித்து வருமாறு இராவணன் வீரர்களை ஏவினான். அவ்வீரர்களை அனுமன் சிதைத்து அழித்தான். சம்புமாலி வந்தான்; வதை பட்டான். பஞ்ச சேனாபதிகள் படைகளுடன் வந்தார்கள்; அனைவரும் அழிந்து பட்டனர். இராவணன் மகன் அக்க குமாரன் பொருதான்; பொன்றினான். இறுதியில் இந்திரசித்து போர் செய்யும் பொழுது அயன் படையை விட்டான்; அதற்கு அனுமன் அடக்கம் காட்டினான். கட்டுண்டவனாய் அரசவைக்குக் கொண்டு வரப் பட்டான்.

விசாரணை முடிந்தது இராவணன் அனுமனைக் கொல்ல ஆணையிட்டான். வீடணன் இடைபுகுந்து தூதுவனைக் கொல்லுதல் முறையன்று என்று நெறி பேசினான். அவன் பேச்சுக்கு மரியாதை கொடுத்தான் தமையன்.

என்றாலும், அளவில்லாத அழிவுகளை ஏற்படுத்தி விட்ட அனுமனின் வாலில் தீக் கொளுவப் பணித்தான், இலங்கை வேந்தன். அவ்வாறே செய்தனர்.

அனுமனோ தன் வாலை இலங்கை மீது நீட்டிட, அத் தணல் கொண்டே இலங்கையை எரித்து அழித்தான்.

ஆம்; இப் பின் நிகழ்ச்சியைக் கவிச் சக்கரவர்த்தி கதைப் போக்கில் அறிந்திருந்ததனால் தன் காவியப் போக்கிலும் அனுமன் வாயிலாக ‘வெந்தழலால் வேய்கேனோ?’ என்ற சொற்றொடரை இட்டு அதனை மெய்ப்பித்துள்ளார்!

# 46. உன் துணைக் கணவன்!

அசோக வனத்தில் சிறை பட்டிருந்த சீதை சதா சர்வ காலமும் இராமன் நினைவாகவே இருந்தாள். பழைய நினைவுகள் எல்லாம் வந்து அவளுடைய மனத்தில் ஏக்கத்தையும் துயரத்தையும் நிரப்பி நின்றன.

அங்கு விபீடணனின் செல்வி திரிசடை வந்தாள். அவளிடம் சீதை தன்னுடைய இடக் கண் துடித்ததைக் கூறி நிமித்த பலன் கேட்டாள். சீதை, திரிசடையை,

"............................என் துணைவி ஆம்" (5099)

என விளித்து,

"; ..................ஈண்டு தாம் இடம் துடிக்குமால்;
'அஞ்சல்' என்று இரங்குவாய்! அடுப்பது யாது?" (5103)

என்றாள்.

அவள் அவ்வாறு கேட்டதற்குத் திரிசடை,

"உன் துணைக் கணவனை உறுதல் உண்மையால்" (5104)

என்று பதில் இறுத்தாள்.

'உன் துணை' என்றாலே 'கணவனைக்' குறிக்கும். அப்படியிருக்க அவள் 'உன் துணை' என்பதோடு 'கணவனை' என்ற சொல்லையும் சேர்த்தது ஏன்?

இராமனும் சீதையும் மணத் தவிசில் அமர்ந்திருந்த காட்சியைக் கம்பர்,

"மன்றலின் வந்து, மணத் தவிசு ஏறி,
வென்றி நெடுந்தகை வீரனும், ஆர்வத்து
இன் துணை அன்னமும், எய்தி இருந்தார்:
ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்" (1244)

என்று படம் பிடித்தார். அப்பொழுது அந்த இராம னுக்குத் 'துணை' சீதையெனக் கவிக் கூற்றாய்க் கூறினார்.

'துணை' என்ற சொல்லிற்கு, 'அளவு, ஆதரவு, ஆயுத முனை, இணை, உதவி, ஒப்பு' என்று பல பொருள்கள் இடத்திற்கு ஏற்பப் பொருந்தும் இவ்வாறான எளிய பல பொருள்களிலே இச் சொல்லைக் கம்பரும் காவியம் முழுமையிலும் ஆங்காங்கே கையாண்டு உள்ளார்.

என்றாலும் கணவன் மனைவியைக் குறிப்பிட்டுப் பேசும் வாய்ப்புக்களில் எல்லாம் 'துணை' என்ற சொல் வரின் அது 'கணவனை' அல்லது 'மனைவி'யைத்தான் சமயத்திற்கு ஏற்பக் குறித்து நிற்கும்.

மிதிலையில் இராமனுக்கும் சீதைக்கும் திருமணம் நிச்சயம் ஆகியுள்ள செய்தியைச் சனகரின் தூதுவர் கொண்டுவந்த ஓலை மூலம், தயரதன் அறிந்தான். முரசு அறைவித்தான்; சேனையரும் ஊர்மக்களும் ஏராளமாகத் திரண்டு புறப்பட்டனர், மணவினை காண. அவ்வாறு புறப்பட்டவருள் சில பெண்டிரைக் குறிப்பிடும் பொழுது, கம்பர்,

" உழை கலித்தன என்ன, உயிர் துணை
நுழை கலிக் கருங் கண்ணியர் நூபுர
இழை கலித்தன." (778)

என்பார். இதில் வரும் 'துணை'க்குப் பொருள் 'கணவர்' என்றாகி, 'கணவரின் உயிர் வரையிலும் பாய்ந்து செல்லக் கூடிய வலிமை பெற்ற—கடுமையான கண் களை உடைய மகளிர் அணிந்துள்ள சிலம்பாகிய அணி கலன், உழை என்கின்ற இசையைப் போல ஒலித்தது' என்ற பொருள் பெறுகின்றது.

அவர்கள் செல்லும் வழியில் உள்ள மலைகளையும் மலைசூழ்நிலை நிகழ்ச்சிகளையும் கவிச் சக்கரவர்த்தி வர்ணிக்கும் பொழுது,

"பம்பு தேன் மிஞிறு தும்பி பரந்து இசைபாடி ஆட,
உம்பர் வானகத்து நின்ற ஒளிவளர் தருவின் ஓங்கும்
கொம்புகள், பனைக் கை நீட்டி, குழையொடும்
ஒடித்து, கோட்டுத்
தும்பிகள், உயிரே அன்ன துணை மடப்
பிடிக்கு நல்கும்'' (844)

எனப் பாடுகின்றார்.

அந்த மலையில் இருக்கின்ற—தந்தங்களை உடைய, ஆண் யானைகள், மிகுந்த தேனை விரும்புகின்ற வண்டுகளும் தும்பிகளும் நிறைந்து இசைபாடி ஆடிக் கொண்டிருக்க, மேலே உள்ள தேவலோகத்தில் நிற்கின்ற, ஒளி வீசும் கற்பக மரங்களின் உயர்ந்த கிளைகளைத் தளிர்களோடு ஒடித்து, தமக்கு உயிர் போன்ற இளமை பொருந்திய பெண் யானைகளுக்குக் கொடுக்கும்! என்பது காட்சி.

மிருகங்கள் ஒன்றுக் கொன்று இணைந்துவிட்டாலும் அவற்றிற்குக் 'கணவன்', 'மனைவி' என்ற சொற்களை நாம் கையாளுவது இல்லை; ஆனால், அவற்றின் பிணைப்பு கணவன்—மனைவி பிணைப்பிற்கு ஒப்பாகும்.

எனவே, இப்பாடலில் (கணவன் ஆகிய) ஆண்யானை (மனைவி ஆகிய) பெண் யானைக்குக் கொடுக்கும் என்பதைச் சுட்டிக்காட்ட உயிரே அன்ன துணை' என்ற அடைமொழியைக் கம்பர் கையாண்டுள்ளார்.

கைகேயி பிடிவாதமாய் நின்றதனால், அவள் கேட்ட இரண்டு வரங்களையும் அளித்துவிட்டுத் தயரதன் மூர்ச்சையாகிக் கிடக்கின்றான். கோசலை தன் கணவ

னிடம் வருகின்றாள். அவன் இருக்கும் அவல நிலை கண்டு வாய்விட்டு அரற்றி அழுகின்றாள். அப்பொழுது,

“ துறந்தான் மகன் முன் என்னையும்; துறந்தாய்
நீயும் துணைவா!
அறம்தான் இதுவோ? ஐயா, அரசர்க்கு அரசே!”
(1673)

எனக் கதறுகின்றாள்.

‘எனையும்’ என்ற ‘உம்’மை வந்ததால் ‘(இராமன்) மகன் முன்னம் என்னையும் உன்னையும் விட்டுச் சென்று விட்டான்’ என்று குறிப்பிட்டவள், மீண்டும், ‘நீயும் என்ற’ உம்மை கொண்டு, ‘என்னை நீ கூட துறக் கின்றாயா?’ என்று கேட்கின்றாள்.

தன் முன் தயரதன் இருக்க அந்தக் கோசலை அவனை முன்னிலைப் படுத்திப் பேசும்பொழுது ‘நீயும்’ என்றதே போதும். அப்படியிருக்க, ‘முதலில் போனவன் மகன்; அடுத்து என்னைத் துறக்க நினையும் நீ யார்? என் கணவன் அன்றோ! மகனுக்கு என்மேல் அன்பு இல்லையென்றாலும், அன்பு ஆழ்ந்து இருக்க வேண்டிய கணவரும் அவ்வாறு பிரியலாமா? இவ்வாறு மகனும், மணவாளனும் ஒருவர் பின் ஒருவராய் எனக்குத் தீங்கு இழைத்தால் நான் யாரிடம் முறையிட முடியும்? மன்ன னிடம் தானே!’ என்ற பாங்கில் அதே தயரதனை ‘மன்னர் மன்னனே!’ என்று அடுத்த வாயிலேயே விளிக் கின்றார்.

ஆகவே, இப்பாடலில் வரும் ‘துணை’, மனைவியை விட்டு நீங்காதிருக்க வேண்டிய அன்புப் பிணைப்பு கொள்ளும்ஆடவனை–கணவனைக்–குறித்து நிற்கின்றது.

தயரதன் மாண்டான்; கணவனை இழந்த கோசலை வருந்திப் புலம்பினாள். இந்த சோகத்தைப் பாடும் பொழுது, கம்பர்,

"அருந் துணை இழந்த அன்றிற் பெடை என,
அரற்றலுற்றாள்" (1901)

என உவமை காட்டுகின்றார்.

மிருகங்களே அன்று; பறவைகளுக்குள்ளும் தாம் பத்திய உறவு உண்டு. ஆனால், அவற்றையும் கணவன்–மனைவி என்றுரைப்பதில்லை. இழப்பு ஏற்பட்டது பெண் அன்றில் பறவைக்கு; அதனை. 'இழந்த அன்றில் பெடை' என்றார். அது எதனை இழந்தது?' தன்னோடு இணைந்திருந்த ஆண் அன்றில் பறவையை! அதனைக் குறிப்பிட 'அருந்துணை' என்ற சொற்றொடரைக் கம்பர் கையாளுகின்றார்!

ஆக, ஈண்டும், 'துணை' என்ற சொல் 'கணவன்' என்ற உறவு காட்டி நிற்பதைக் காண்கின்றோம்.

இராம, இலக்குவரும் சீதையும் காட்டுவழிச் செல்கின்றனர். அப்பொழுது சீதைக்கு இராமன் அவ் வனத்தில் காணும் காட்சிகளை விளக்கிச் செல்கின்றான். ஓரிடத்தில்,

"பூ அலர் குரவோடும் புடைதவழ் பிடவு ஈனும்
மா அலர் சொரி சூழல், துயில் எழு மயில் ஒன்றின்
தூவியின் மணம் நாற, துணை பிரி பெடை,
தான் அச்
சேவலோடு உற ஊடித் திரிவதன் இயல் காணாய்!"
(2106)

என்று காட்டுவான்.

பறவைகளின் தாம்பத்திய உறவைக் 'கணவன்–மனைவி' என்ற சொற்களால் குறிப்பதில்லை என்றதற்கு விளக்கம் கூறுவது போலே (கணவன்) ஆண் பறவைக்குச் சேவல் என்று பெயர் எனக் கூறாமல் கூறுகின்றார், இப்பாடலில் கம்பர்' என்றாலும், 'பிரிந்தது

பெடைப் பறவை' என்பதனால் 'பிரியப் பெற்றது அதனுடைய துணை (கணவன்-என்னும்) ஆண் பறவை' என்ற நிலை காட்டி வந்துள்ளது 'துணை' என்ற சொல்.

கங்கை ஆற்றைப் படகில் கடந்து கொண்டிருக்கும் பொழுது. பரதன் தன் தாயரைக் குகனுக்கு அறிமுகப் படுத்துகின்றான். கைகேயி பற்றி வேண்டா வெறுப் புடன் குகனுக்கு எடுத்துச் சொல்லும் பொழுது,

"சுடுமயானத்திடை தன் துணை ஏக" (2370)

என்பான்.

'என் தந்தையாகிய தயரதன் இந்த கைகேயியிக்கும் கணவர்தான்; அக் கணவராகிய தன் துணை–துணைவர் சுடுகாட்டிற்குச் செல்ல" என்ற பொருளில் நிந்திக் கின்றான்.

ஆக, ஈண்டு, 'துணை' என்ற சொல் 'துணைவர்–கணவர்' என்ற பொருளில் வந்துள்ளது.

இலங்கை போர் ஓய்ந்த பின், இராமன் வீடணனை நோக்கி, 'தேவியைச் சீரோடும் தா' எனக் கூறியதை,

"என்ற போதின், இறைஞ்சினன், 'எம்பிரான்–
தன் துணைப் பெருந் தேவிதயா' எனா
நின்ற காலை, நெடியவன்,' வீடண!
சென்று தா, நம தேவியை, சீரோடும்" (9988)

எனக் கம்பர் பாடுகின்றார்.

இவ்வாறு, மனைவியைத் 'துணை' எனக் குறிப் பிட்டுப் பாடியுள்ள கவிச் சக்கரவர்த்தி, கணவனைத் 'துணை' எனக் குறிப்பிட முயல்வதைப் போலே, சீதை வாயிலாகப் பாடுகின்றார்.

சீதை இராமனைத் தொழுது, ஏக்கம் நீங்கும் காட்சியை,

“பிறப்பினும் துணைவனை, பிறவிப் பேர் இடர்
துறப்பினும் துணைவனை, தொழுது, ‘நான் இனி
மறப்பினும் நன்று. இனி மாறு வேறு வீழ்ந்து
இறப்பினும் நன்று’ என ஏக்கம் நீங்கினாள்”

(10010)

எனக் கம்பர் பாடியுள்ளார்.

ஆக, இத்துணை மேற்கோள்களாலும், ‘துணை’ என்னும் சொல், ‘கணவன்-மனைவி’ இருவரையும் தனித்தனியே காட்டி சிறப்புப் பொருளில் வரும் எனத் தெளிகின்றோம்.

எனவே, திரிசடை ‘உன் துணைக் கணவன்’ என்று ஒரு பொருள் இரு சொற்களை அடுத்தடுத்துப் பெய்வதில் ஏதோ ஒரு தனிச் சிறப்பு இருக்க வேண்டும் அல்லவா?

ஒரு பெண், ஓர் ஆடவனுக்குத் ‘துணை’ ஆவது இல்வறம் பேணி வளர்ப்பதற்கு அமையும். அதனால் தான் திருவள்ளுவப் பெருந்தகை, வாழ்க்கை நலம் இரு பாலார் பொறுப்பாக இருந்தும், ‘வாழ்க்கைத் துணை நலம்’ என்ற அதிகாரத் தலைப்பில் மனைவியின் மாட்சிமையையே விளக்கிச் செல்கின்றார்.

ஓர் ஆண், ஒரு பெண்ணிற்குத் ‘துணை’ நிற்பது, தங்களுடைய இல்லறத்தில் மட்டும் அன்று. அவனைப் புற உலகக் காவல் புரிய வேணடிய ஆண்மை கொண்ட கடமையும் அவனதே! அதாவது அவள் வேண்டுமானால் இல்லறத்தின் இனிய துணையாக மட்டும்கூட அமையலாம்; ஆனால் அவனோ எங்கும் எப்போழ்தும், இன்பத்தில் மட்டும் அல்ல துன்பத்திலும் அவளுக்குத் துணை

யாக நின்றே ஆக வேண்டும். அதுதான் நல்ல கணவனுக்கு அழகும், இலக்கணமும் ஆம்.

ஆதியில், சீதையை மணத்தவிசில் கண்ட பொழுது, 'இன்' 'துணை'--இல்லறத்திற்கு ஏற்ற இனிய துணைவி- என்று குறிப்பிட்டுப் பாடிய கம்பர், காவிய இறுதிப் பகுதியில் திரிசடையின் வாயிலாக, 'உன் துணைக் கணவன்'– 'உனக்கு இந்த இக்கட்டான சூழ்நிலையில், என் பெரிய தந்தை இராவணனின் பிடியிலிருந்து காக்க வேண்டிய கடமை மிக்க துணைவனாகத் திகழ வேண்டிய உன் கணவன், இராமன், நிச்சயம் வருவான்' என்று பாடுகின்றார்.

என்னே, கவிச் சக்கரவர்த்தியின் சொல்லாட்சித் திறன்!

## 47. வெவ்விடமா? அமிழ்தா?

பொன்னின் பேரொளி, மலரின் நறுமணம், தேனின் இனிய சுவை, செஞ்சொற் கவி இன்பம் இவை அனைத்தையும் ஒன்று கூட்டி வடிக்கப்பெற்றவள் சீதை; அவளே திருமகள். அவளுடைய அழகு மேனியைக் கண்டு முழுதும் சுவைக்க, இமை மூடாமற் பார்க்கும் கண்களாய் இருந்தாலும், இரண்டு போதா. மானின் பார்வையைப் பின்னடையச் செய்யும் அவள் பார்வை. வேலும் வாளும் தோற்கும் கூர்மை அந்தக் கண் வீச்சில்; கயல் மீன் பிறழ்ச்சி பின் வாங்கும் அவளின் கண் சுழற்சி. பாற்கடல் அமிழ்தத்திற்கும் மேலானவள்; தேவர் வேண்டிக் கொண்டால் பாற்கடல் அமிழ்தம் மீண்டும் கிடைத்தாலும் கிடைக்கக் கூடும்; ஆனால் சீதை என்ற அமிழ்தம் மீண்டும் பெற இயலாத ஒன்று! அதனால்தான் சீதையை எப்பொழுதுமே தோழியர்,

"ஆ! அமிழ்தே" (509)

என்று அழைக்கலாயினர். அவளும், தன்னைக் கண்களால் காணும் அழகு மங்கையருக்கெல்லாம் இனிமை தரும் அமிழ்தமாகவே திகழ்ந்தாள்.

அப்படிப்பட்ட அமிழ்தத்தைக் கம்பர் பின் ஓர் இடத்தில் 'வெவ்விடம்' எனக் கூறிவிட்டார்.

தேனும் தேனும் சேர்ந்தால் தேன் ஆகும்; மருந்தும் மருந்தும் சேர்ந்தால் மருந்து ஆகும்; தேனும் மருந்தும் சேர்ந்தால் மருந்துதானே ஆகும்! அதே போல், நஞ்சும் நஞ்சும் சேர்ந்தால் நஞ்சு ஆகும்; அமிழ்தும் அமிழ்தும் சேர்ந்தால் அமிழ்தாகும்; நஞ்சும் அமிழ்தும் சேர்ந்தால் நஞ்சுதானே ஆகும்!

சீதை என்னும் அமிழ்தம் ஒரு நஞ்சோடு சேர்ந்ததால் பிறருக்கு நஞ்சு ஆகிவிட்டாள்!

இராமன் மிதிலையில் உலா வந்தான். அப்பொழுது அவன் தேன் நிறைந்த மலராகத்தான் தோன்றினான். அந்நகரப் பெண்டிராகிய வண்டுகளுக்கு. அவர்களுடைய உள்ளமெல்லாம் அவன்பால் பாயும் பள்ளமாய்த்தான் இருந்தான். அவனுடைய கண்கள் காதல் என்னும் பொருளையே காட்டி நின்றன. அந்நகர்ப் பெண்களாகிய ஈக்கள் மொய்க்கும் அமிழ்தமாகவே இருந்தான், இராமன், அந்நாள்.

அந்த அமிழ்தத்தைக் கண்களால் மொண்டு தேவ சுகம் மானசீகமாய் மாந்தி இன்புற்றனர் மங்கையர் பலரும். அவனைத் தங்கள் கண்களுக்குள்ளேயே சிறை வைத்தனர் சிலர். சிலரோ தத்தம் சிந்தையை அவனிடமே பதித்து நின்றனர். இவ்வாறெல்லாம் அனைத்துப் பெண்களுக்கும் பார்வைக்கும், சிந்தைக்கும், உணவிற்கும், உள்ளத்திற்கும், உயிர்க்கும் அன்று இன்பம் பயந்த

அமிழ்தமாய் இருந்தவனே பின்னர் பெண்டிர்க்கு எல்லாம் நஞ்சாயினான்!

அதனைக் கம்பருக்கு எடுத்துச் சொன்னவன் சொல்லின் செல்வனாகிய அனுமன். அவன் இராமனிடமே, 'நீ ஒரு நஞ்சு' என்று சொல்லாமல் சொல்லிவிட்டான்.

"மஞ்சு எனத் திரண்ட கோல மேனிய! மகளிர்க்கு எல்லாம்
நஞ்சு எனத் தகைய ஆகி, நளிர் இரும் பனிக்குத் தேம்பாக்
கஞ்சம் ஒத்து அலர்ந்த செய்ய கண்ண!" (3765)

என்றே இராமனை அவன் விளித்தான்.

ஆம்; இராமன் தனியனாய் இருந்த பொழுது அவன் பார்வையால் அனைவரும் அவனைப் பருக வல்ல அமிழ்தமாய்த் திகழ்ந்தான். ஆனால், அவன் சீதையோடு மணத்தவிசில் ஒன்றிய போகமும் யோகமும் ஒத்து அமர்ந்து, தையல் தளிர்க் கை தடக் கை பிடித்து, வெங் கனலை உடம்பு உயிரைத் தொடர்கின்றதை ஒப்ப வலம் வந்து, வணங்கி, அம்மி மிதித்து அருந்ததி கண்டு, பொற்றொடி கைக்கொடு நல்மனை புக்க பின் அவன் அவள் ஒருத்திக்கே சொந்தமாகி விட்டான். இதனை அவன் அவட்கு உறுதி செய்து கூறியும் விட்டான்! அதனைத் தான் சீதை அசோக வனத்தில், அனுமனிடம்,

"வந்து எனைக் கரம் பற்றிய வைகல்வாய்,
'இந்த இப் பிறவிக்கு இரு மாதரைச்
சிந்தையாலும் தொடேன்' என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச் செவி சாற்றுவாய்" (5378)

என்று கூறினாள்.

ஆக, அனைவர்க்கும் அமிழ்தமாய் இருந்த இராமன், தன் திருமணத்திற்குப் பின் பிற பெண்டிருக்கு எல்லாம் நஞ்சு ஆகி விட்டான்.

இராமனால் 'சொல்லின் செல்வன்' என்ற தகுதி சூட்டப் பெற்ற அனுமன் வாயால் இக் கருத்து வந்ததும் 'கவிச் சக்காவர்த்தி' என்று உலகமே தனக்குப் பட்டம் சூட்டச் செய்துள்ள கம்பர், 'அமிழ்தமாய் இருந்த ஆண் மகனே நஞ்சு ஆனான். என்றால் அந்நஞ்சோடு சேர்ந்த அமிழ்தாமாம் சீதைப் பெண் எப்படி அமிழ்தமாகவே திகழ முடியும்! அவளும் பிறருக்கு நஞ்சே அன்றோ?' என்று நினைந்து பார்த்தார்.

அனுமனை விடத் தன் சொல்லாற்றல் மிகும்படி,

"அவ்விடத்து அருகு எய்தி, அரக்கன் தான்
'எவ் இடத்து எனக்கு இன் அருள் ஈவது?
நொவ் இடைக் குயிலே! நுவல்க என்றனன்,
வெவ் விடத்தை அமிழ்து என வேண்டுவான்"

(5169)

எனப் பாடிவிட்டார். இராமனாவது 'பார்வையால்' மட்டும் பிற பெண்டிர்க்கு நஞ்சாய்க் காணப் பட்டான். சீதையோ, தானே கொடிய நஞ்சாய் முழுமையாய் மாறி விட்டாள், பிற ஆடவர்க்கு!

## 48. ஆறும் ஐம்பொறி ஆண்!

சீதையை அனுமன் அசோக வனத்தில் கண்டான். அவளிடம், இராவணன் சாம, பேத, தான, தண்டம் காட்டித் தனக்கு இசையும்படிக் கெஞ்சியும் மிஞ்சியும் பேசியவற்றையும் கேட்டிருந்தான். அவன் அகன்ற பின்

அனுமன் தன்னை சீதையிடம் அறிமுகப்படுத்திக் கொண்டான். இராமன் கூறிய சில செய்திகளையும் தெரிவித்து, அவன் தந்த கணையாழியையும் கொடுத்து அவளுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமானான்.

அனுமன் தன்னுடைய வரலாற்றைச் சீதைக்கு எடுத்துரைத்தான். அவளும் இராம இலக்குவரைப் பற்றி அவனிடம் கேட்டு அறிந்தாள். அனுமனை வாழ்த்தினாள். அவன், தன்னுடைய பேருருவினைக் காட்டித் தான் கடல் கடந்த வகையெல்லாம் விளக்கினான்.

சீதையைக் காணும் முன்,

"கண்டு வரும் என்று இருக்கும் காகுத்தன்,
கவிகுலக் கோன்
கொண்டு வரும் என்று இருக்கும்; யான் இழைந்த
கோள் இதுவால்;
புண்டரிக நயனத்தான் பால், இனி, யான்
போவேனோ?
விண்டவரோடு உடன் வீயாது யான் வாளா
விளிவேனோ?" (5 61)

என்று ஏமாந்து ஏங்கியிருந்த, அனுமனுக்கு இப்போழ்து ஓர் யோசனை தோன்றியது. கண்டு வரும்' என இராமன் நம்பியதற்கு ஏற்ப சீதையை மட்டுமா அவன் கண்டான்? அவள்படும் இன்னலையும் அன்றோ கண்டான். அதனால், அவள் இன்னமும் அங்கிருந்து அல்லல் படுவதைக் காட்டிலும் சுக்கிரீவன் எதிர் பார்க்கும் பாங்கில் அவளைக் 'கொண்டு செல்லல்' சீரிது என்று நினைந்தான்! தன் எண்ணத்தைச் சீதையிடம் எடுத்துரைத்தான்.

"பொன் திணி பொலங்கொடி! என்மென் மயிர்
பொருந்தித்
துன்றிய புயத்து இனிது இருக்க; துயர் விட்டாய்,

இன் துயில் விளைக்க; ஓர் இமைப்பின் இறை
வைகும்
குன்றிடை, உனைக் கொடு குதிப்பென்; இடை
கொள்ளேன்'' (5347)

என்று, அனுமன், சீதையைத் தோள்மேல் அமர வைத்து இராமனிடம் எடுத்துச் செல்வதாகக் கூறினான். அவ்வாறு அவளைத் தூக்கிச் செல்வதற்கான தன் வீரம், வழி மறிப்பவர் எவரேனும் வரின் அவர்களை எல்லாம் அழிக்க வல்ல தன் ஆற்றல் முதலியவற்றை விளக்கினான். அவளை விடுத்துச் சென்றால் தன் தலைவர் சினக்க நேரும் என்றும் கூறினான். விரைவில் தன் தோளின் மீது ஏறும்படிச் சீதையை வேண்டினான்.

அவ்வளவையும் கேட்டிருந்த சீதை அவனுடைய எண்ணத்திற்கு ஒப்பவில்லை. அவனால் அவ்வாறு ஆற்ற முடியாது என்று அவள் அவநம்பிக்கைப் படவில்லை. என்றாலும் வழிமறித்து எவரேனும் தடுப்பராயின் அவன் தனியனாய் நின்று தவிக்க நேரிடும் என்று ஐயம் காட்டினாள். வஞ்சகமாய் அரக்கன் கொண்டு வந்தவளை வஞ்சகமாய் மீட்டுச் சென்றனர் எனப் பழி ஏற்படும் என்றாள். தன் கணவர் வந்து போர் செய்து அவ் வரக்கரை எல்லாம் வதை செய்வதைக் காணாது போவதோ என்று ஏளனம் காட்டினாள். அனைத்திற்கும் மேலாக,

'' அல்லல் மாக்கள் இலங்கையது ஆகுமோ?
எல்லை நீத்த உலகங்கள் யாவும், என்
சொல்லினால் சுடுவேன்; அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசு என்று வீசினேன் '' (5362)

என்று கூறினாள். தன் கணவர் தன்னுடைய வீரத்தைக் காட்டித் தன்னை விடுவிக்கும் பெருமையை அவள் விழைந்தாள்; இல்லையேல், தானே இலங்கைக்கு எரியூட்டி இருப்பாள்.

இவ்வளவு பெரிய, உண்மையான, வீரமும் பெரு மிதமும் செறிந்த காரணத்தைக் கூறினால் போதாதா? அனுமனுடன் செல்லாதிருக்க இன்னமும் காரணம் கூறிக் கொண்டிருக்க வேண்டுமா? ஆனால், சீதை தொடர்ந்தாள், தன் பேச்சை

"வேறும் உண்டு உரை; கேள் அது; மெய்ம்மையோய்
ஏறு சேவகன் மேனி அல்லால், இடை–
ஆறும் ஐம் பொறி நின்னையும், 'ஆண்' எனக்
கூறும்; இவ் உருத் தீண்டுதல் கூடுமோ!" (5363)

என்று கூறினாள். 'ஏதோ என் பெண் புத்திக்கு அது சரியெனப் படவில்லை' என்று தன்னடக்கமாகக் கூறி னாள், என்று கொண்டால், அவள் பின்னர் உரைத்த காரணங்கள் சிறு புத்திக்குத் தோன்றக்கூடியவை அல்ல!

ஆனாலும், ஏதோ பேதமை அவளை ஆட்கொண் டிருப்பதனாலேயே மிக உயர்ந்த காரணத்தைக் கூறி விட்ட பின்னும், அனுமனின் தோள்மீது அவள் ஏறக் கூடாது என்பதற்குக் காரணத்தை விளக்குகின்றாள்! அனுமனுடைய தோளின் மேலேறிச் செல்லாததற்கு வஞ்சனையாக மீள வேண்டாம் என்று தான் கூறிய தகுதியான காரணம் போதுமே! பின்னும், ஏன் விளக்க முயல்கின்றாள்? அனுமன் ஆணே ஆனாலும் குரங்கு குரங்குதானே; மிருகங்களின் மீது ஏறிச் செல்லும் போது அது ஆணா பெண்ணா என்றெல்லாம் பார்க்க வேண்டுமோ?

ஆம்; பார்க்க வேண்டும் என்ற மனோதத்துவ ரீதியை நினைந்து பார்த்தாள், சீதை. அவ்வாறு நினைந்து பார்க்க வேண்டிய கட்டாயத்தை உண்டு பண்ணி விட்டன, அனுமனின்–சொல்லின் செல்வனின்– வார்த்தைகள்!

அவன் அச் சொற்களைச் சொல்லியது விகற்பப் பொருளால் அன்று. என்றாலும் உலகியல் நோக்கில்

அவை உணர்ச்சி வயப்பட்ட அடிப்படையில் வெளிவரக் கூடியவை!

சீதையைத் தேடிவரப் புறப்பட்ட அனுமனை "நீதி வல்லோய்!" (4478) என்று விளித்து, இராமன் அவளுடைய அங்க மச்ச அடையாளங்களையெல்லாம் இரகசியமாகக் கூறியதிலிருந்தே, அனுமன் தூய்மையானவன், நம்பிக்கைக்குப் பாத்திரம் ஆனவன் என்று தெரிவது உண்மையே!

" வார் ஆழிக் கலசக் கொங்கை " (4483)

தன்று தன் மனைவியின் தனங்களைக் குறிப்பிட்டுத் என் வாயால் அனுமனிடம் வர்ணித்ததுவும் உண்மையே

அது காரணம் கொண்டு, ஒரு மாதிடம் – மாதரசியிடம்—மாதாவிற்கு ஒப்பாய் நினைந்து வணங்கி நிற்பவளிடம்–வேறோர் ஆண் மகன் உரையாடும் பொழுது அவளுடைய தனங்களைப் பற்றி குறிப்பாகக் கூடக் கருதிப் பேசலாமா? கருதுதலே தவறு என்றால் அத்தனங்களின் அடிப்படையிலேயே அவளை விளிக்கலாமா? அதுவும், 'உன் கணவர் இரகசியமாக என்னிடம் கூறிய அளவிற்கு உன் இன்னின்ன அங்கங்கள் இன்னினலாறு இருக்கக் கண்டதனால்தான் உன்னை நான் அடையாளம் கண்டு கொள்ள முடிந்தது' என்று அனுமன் கூறினானோ? அப்படியே கூற நேரிட்டிருந்தாலும் நாணத்திற்கு ஆட்படுத்தும் அங்கங்களை விட்டுவிடுவது தானே நாகரிகம்!

அப்படி இருக்க, அனுமன், வானரப்படையின் சிறப்பைச் சீதைக்குச் சொல்லும் பொழுது,

" கம்பன், தூமத் தனிப் பெயரோன், ததிமின் வதனன்,
சதவலி என்று
இம்பர் உலகோடு எவ் உலகும் எடுக்கும் மிடுக்கர்,
இராமன் கை

அம்பின் உதவும் படைத்தலைவர்; அவரை நோக்கின்
இவ் அரக்கர்,
வம்பின் முலையாய்! உறை இடவும் போதார்;
கணக்கு வரம்பு உண்டோ?'' (5344)

என்று பேசினான்.

அனுமன் சீதையைக் கண்டதிலிருந்து, அவளை, 'மடந்தை!' 'அன்னை', 'அன்னாய்!', 'துடிஇடை!'' 'ஏந்திழாய்!' 'தெய்வமே!' 'தோகை அன்ன நடையாய்!'' 'அருந்ததியே!' என்றெல்லாம்தான் விளித்தான்.

இந்தக் காட்சியில், அவன் சீதையைத் தன்னுடைய தோள்மீது ஏற்றிச் செல்வதாகக் கூறப்புகும் பொழுது, அவளுடைய அழகை வர்ணித்து,

'' பொன் திணி பொலங்கொடி!'' (5347)

என்று விளித்தான்! பற்றாக் குறைக்கு அவளிடம் தன் மெய்யின் மேன்மையைச் சொல்லாமல் சொல்லி,

'' என் மென் மயிர் பொருந்தித்
துன்றிய புயத்து இனிது இருக்க'' (5347

அவளைத் தன் தோளின் மேல் சுகமாக இருக்கச் சொல்கின்றான்.

சீதை படும் மனத்துயர் விஞ்சியிருக்கும் நேரத்தில் அவ்வாறு அவன் அவளை ஆனந்தமாய் அமர்ந்திடச் சொல்லுதலே ஏற்புடைத்து அன்று. அப்படியிருக்க, தொடர்ந்து அவளிடம்,

'' ..........................  . ...துயர் விட்டாய்,
இன் துயில் விளைக்க'' (5347)

என்று வேறு கூறுகின்றான்! அவளோ, அசோக வனத்தில் சிறை பட்டதிலிருந்து,

"துயில் எனக் கண்கள் இமைத்தலும் முகிழ்த்தலும்
துறந்தாள்" (5072)

"விழுதல், விம்முதல், மெய் உறவெதும்புதல்,
வெருவல்,
எழுதல், ஏங்குதல், இரங்குதல், இராமனை
எண்ணித்
தொழுதல், சோருதல், துளங்குதல், துயர் உழந்து
உயிர்த்தல்,
அழுதல், அன்றி, மற்று அயல் ஒன்றும் செய்குவது
அறியாள்" (5075

இவ்வளவு துயரையும் அவனுடைய தோள் மீது ஏறும் காரணத்தால், மயிர் செறிந்த மெத்தென்ற அவன் மேனியில் அமரும் காரணத்தால், மறந்து நிம்மதியாக அவள் உறங்கிவிட முடியுமா? அதிலும் அவன்,

"..........................ஓர் இமைப்பின், இறைவைகும்
குன்றிடை, உனைக் கொடு குதிப்பென்; இடை
கொள்ளேன்" (5073)

என்று கூறிய ஓர் இமைப்பொழுது நேரத்திற்காக அவள் அவ்வாறு உறங்குவாளா!

இப்பொழுது, அனுமன், தன்னைத் தன்னுடைய தனங்களின் அமைப்பைக் குறிப்பிட்டு விளித்தது அவள் சிந்தையை உறுத்தியது! அதிலும், தான் அசோக வனத்தில்,

"........ நலன் அற உணங்கிய நங்கை,
மென் மருங்குல் போல், வேறு உள அங்கமும்
மெலிந்தாள்"(5071)

என்று கம்பர் நாகரிகமாக எடுத்துச் சொல்கின்ற, அளவிற்கு அங்கமெலாம் மெலிவுற்று இருக்கும் நிலையி

லேயே தன் அந்த உறுப்பு அவன் கண்ணை உறுத்தியுள் ளதே! அதிலும் 'தான் அணிந்திருந்த கச்சையையும் ஊடு ருவிக் கொண்டு அவனுடைய பார்வை சென்றதால் அல்லவோ, 'கச்சை யணிந்த முலைகளை உடையவளே!' என்று பச்சையாகப் பகர்ந்து விட்டான் 'என்று நாண உணர்வு வந்ததால் தான், 'தன்னுடைய பேதைமைப் பெண்மைப் புத்திக்கு சரியாகப் படவில்லை' என்று முதலில் மறை முகமாகக் கூறினாள்.

ஆனாலும் அவளுடைய வெறுப்புணர்ச்சி முழுதும் நீங்கவில்லை. ஆடவரின் மனோ தத்துவத்தையும், உணர்வு சேஷ்டைகளையும் எந்தப்பெண்ணும் உணர்ந்து கொள்வாள். அதனை இடித்துரைக்கவும் உத்தமி தயங்க மாட்டாள் என்பதை உலகத்திற்கு உணர்த்த முற் பட்டாள்! அதற்காக, அனுமனைத் தவறாகப் புரிந்து கொண்டதாகவோ, சினந்ததாகவோ காட்டிக் கொள்ள வில்லை.

அனுமனிடம் பேசிக் கொண்டேயிருந்த தொடர்ச்சி யிலும், இடையில் ஒரு முறை அவனை 'உண்மையான வனே! என விளிக்கின்றாள். அதாவது அவன் மேல் தனக்கு எந்த விதமான ஐயமும் இல்லை என்பதைக் காட் டிக் கொண்டாள். என்றாலும், ஐம்பொறிகளின் கோணல் செயல்கள் பற்றி ஐயம் உண்டு என்பதைப் போலே ' ஆறும் ஐம்பொறி' என்றாள்! பிரம்மச்சாரி யான அனுமனின் பஞ்சேந்திரியங்களும் எந்த வினாடியி லும் உணர்ச்சிகளின் வயப்படலாம்! அவ்வாறு ஆகாது என்று முழுதும் அவள் நம்பியிருந்தால், 'ஆறிய' என்றே ஆணித் தரமாகக் குறிப்பிட்டிருப்பாள்! 'ஆறும்' என்றத னால், அவ்வாறு உணர்ச்சிகள் அடங்கியுள்ள நிலை ஒரு வேளை தற்காலிகமாகவும் இருக்கலாம். சந்தர்ப்ப சூழ் நிலைகள் கொடுத்தால் குரங்கு மனம்–மனக் குரங்கு–மாறி னாலும் மாறலாம்; மாறித் தன் சுயரூபத்தைக் காட்டவும் கூடும்' என்றாகின்றது!

அவ்வாறு சேஷ்டைகள் ஏற்பட்டு விட்டால் தான் நிகழ்ச்சி பற்றிய விமர்சனங்கள் வெளிவரும். அவ்வாறு விமர்சனங்கள் தோன்றும் பொழுது பெருமை பொருந்தியவர்களும் பெருமை இழப்பர்; மரியாதைக்கு உரியவர்களும் மரியாதையை இழப்பர்; அவர்கள், ஒருமையிலும் ஏக வசனத்திலும் குறிப்பிடப்படுவர். அதனைத் தெளிவாக்கவே, 'நின்னையும் ஆண்' என்ற ஏக வசனச் சொற்கள் வெளி வந்தன!

சீதையும் அனுமனும் ஒருவரை ஒருவர் உணர்ந்து கொண்ட பின், அவனை 'வீர! 'ஐய!' 'உத்தம!' 'அத்தனே அருளின் வாழ்வே!', 'வள்ளலே!', 'விழுமிய குணத்தோய்!' என்றே விளித்துள்ளாள். கம்பரும் அவனை 'ஆண் தகை' என்றே கவிக் கூற்றால் குறிப்பிட்டுள்ளார்! அப்படியிருக்க இந்தச் சூழ்நிலையில், 'ஆண் பிள்ளை,' அல்லது ஆண் மகன்' என்ற பாங்கில் சொற்றொடர் வாராது 'ஆண்' எனத் தனித்து வந்தது நோக்கத்தக்க தன்றோ?

இந்த வார்த்தையைச் சொன்னதும், 'இராவணன் உங்களைத் தூக்கி வந்தானே; அவன் ஆண் அல்லவோ?' என்று அனுமன் கேட்டு விட்டால் தவறு இல்லை. என்றாலும், அவன் அவ்வாறு கேட்கும் வாய்ப்பு இன்றி அது பற்றியும் அவனுக்கு விளக்கி விடுவோம் எனச் சீதை எண்ணினாள்.

"ஆண்டு நின்றும், அரக்கன் அகழ்ந்து கொண்டு,
ஈண்டு வைத்தது, இளவல் இயற்றிய
நீண்ட சாலையொடு நிலை நின்றது,
காண்டி, ஐய! நின் மெய் உணர் கண்களால்" (5368)

என்று கூறினாள்.

'தீய கருத்தோடு என்னைத் தூக்கி வந்த இராவணனே என் மேனி தீண்டாது, இலக்குவன் சமைத்த குடி

லில் தூக்கி வந்தான் என்னும் போழ்து, நீ மட்டும் உன் மேனி பட என்னைத் தூக்கிச் செல்வதாய்க் கூறுதல் ஒவ்வாது' என்று அனுமனுக்கு அறிவுறுத்தினாள்.

ஆக, மனிதனின் மனோ தத்துவத்தையும், ஐம்பொறிகளின் அடங்காத் தன்மையையும், பெண்களைக் கண்டால் பெரியோர்களும தம்மையும் அறியாது பேதலித்த சொற்களைக் கையாளக் கூடும் என்பதனையும், உணர்ந்து செய்தாலும் செய்வதை உணராது செய்தாலும் ஆடவரின் ஐம்பொறிச் செயல்களைப் பத்தினியர் கண்டித்தே தீரும் தன்மையர் என்பதையும் விளக்கிக் காட்ட, இக் காட்சியைக் கவிச் சக்கரவர்த்தி பயன்படுத்திக் கொண்டுள்ளார் எனத் தெளிகின்றோம்!

## 49 அந்தரம் அடைந்தான்!

அன்னை சீதையைத் தேடிச் சென்றான், அனுமன்; இலங்காபுரியில் புகுந்தான். இடர்ப்பாடுகள் பல வந்தன; எளிமையாய் முறியடித்தான். இந்திரசித்தே போருக்கு வந்தான்; பெரும் போர் நிகழ்ந்தது. இறுதியில், இந்திரசித்து அயன்படையை அவன் மேல் ஏவினான்; அப்படைக்குப் பணிந்து கட்டுப்பட்டு அனுமன் அடங்கி ஒடுங்கினான்!

கட்டுண்ட அனுமனை இந்திரசித்து, இராவணன் தன் மாளிகைக்குக் கொண்டு சென்றான்; அரசவையில் கம்பீரமாய் வீற்றிருந்த இராவணனிடம் அனுமனைப் பற்றிக் கூறினான்.

அனுமனைச் சினந்து 'நீ யார்?' என வினவினான், அரக்கர் கோன். அவன் இராமனின் பெருமைகளைப் பலபடப் பகர்ந்தான். 'இராமனின் இல்லாளைத் தேடி நாற்புறமும் மன்னர்கள் புறப்பட்டுள்ளனர். அவர்களுள்

தென்பால் வந்துள்ள, வாலி மைந்தனாகிய அங்க தனின் தூதுவன், யான்; பெயர் அனுமன்' என்றான்.

'வாலி' என்றதுமே, இராவணன் அனுமனிடம், 'வாலி நலமா? அவன் ஆட்சி செவ்வன் நடைபெறு கின்றதா?' என உசாவினான். அனுமன் பெரிதும் சிரித்துச் சொல்லல் ஆனான்.

"இராவணா! நீ அஞ்சாதே. மேக வண்ணத்து இராமன் கணையால் அடிபட்டு அந்த வெஞ்சின வாலி இறந்துபட்டான்; அவன்தன் வாலும் அழிந்தது: அவன் இனி மீண்டு வரமாட்டான்; அவன் அந்தரம் அடைந் தான்' (5888) என்று, அனுமன் கூறினான், சற்று ஏளனம் தொனிக்க!

ஏனோ ஏளனம்? முன்னொரு நாள் அந்த வாலி இராவணனைத் தன் வாலில் சுருட்டிக் கொண்டு உலகு மெலாம் சுற்றிச் சென்று, தன் குழந்தையாகிய அந்த அங்கதனுக்குப்பொம்மையென வேடிக்கை காட்டினான் அன்று முதல் இராவணன், வாலி இருக்கும் பக்கமே திரும்பிப் பார்ப்பதில்லை! அந்தக் கோழமையைக் குறிக்கும் பொருட்டே அனுமன் ஏளனம் காட்டினான்

'அத்தகைய வீரனும் எம்முடைய இராமனின் ஒரே அம்பினால் வீழ்ந்தான் என்றால் நீ எம்மாத்திரம்? என்னுமாப் போலே பேச வந்த அனுமன்—சொல்லின் செல்வன்—(வாலி) 'அந்தரம் அடைந்தான்' என்று கூறியது என்னே?

'அந்தரம் என்ற சொல்லிற்குப் பல பொருள்கள் உள; அவற்றுள், இந்தச் செய்திச் சூழலுக்குப் பொருந்த அமைவன, 'வெளி, வான், நடு, முடிவு' என்பவையாம்.

இதன்படிப் பார்த்தால், இராவணனுக்கு அச்சம்! ஊட்டும் பாங்கில், 'வாலி வான் அடைந்தான்; அல்லது' நடுவில் தொங்கினான்; அல்லது, முடிவுற்றான் அதாவது ஒழிந்தான்' என்று பொருள்படுகிறது.

இறைவன் இராமன் எய்த அம்பு. இறுதியில் அவனை உணர்ந்து, துதித்து, ஏத்திய வாலியை அந்தரத்தில் ஊசலாட விடுமா! அன்றி, 'ஒழிக' என்று தள்ளுமா! அவ்வாறு செய்தல் இராமனின் அருளுக்கு மாசு ஆகாதோ? அதனால், 'அவனை வான் வெளிக்குச் செலுத்தியது' என்ற பொருள் வேண்டுமானால் ஓரள விற்குப் பொருந்தலாம்!

ஏனோ ஓரளவிற்கு? முழுமையாக அப்பொருள் ஏலாதோ எனின் ஏலாது!

இராமனின் அம்பால் வீழ்ந்தான், வாலி; இறுதியில் இறைவனை உணர்ந்தான்; துதித்தான். அதன் பயனாக அவன் என்ன ஆனான்?

"இறந்து, வாலி, அந்நிலை துறந்து, வானுக்கு
அப்புறத்து உலகன் ஆனான்"

எனப் பகரப் படுகின்றான்!

பூத உடலை உயிர் நீங்கும் செய்கையாகிய இறப்பு ஏற்பட்டது.அவ்வாறு பிரிந்த உயிர் அழிந்தொழிந்ததா? இல்லை, 'உயிர்' எனும் நிலை நீங்கி ஆவி நிலையால் ஏகி வானுலகத்திற்கும் அப்பால் உள்ள உலகத்தை எய்தியது!

ஆக, வான் வெளி வழியாக வானுலகத்திற்கும் அப்பால் உலகம் சென்றான் என்பதனை மாற்றி அனுமன் சொல்லலாமா? அவனுடைய சொல் ஒவ் வொன்றும் பொருள் பொதிந்தது ஆயிற்றே!

எனவே, அந்தப் பிழைபடு பொருள்களாலோ, அரை குறைப் பொருத்தப் பொருளாலோ நம் மனம் நிறைவு பெறுவது இல்லை! மெய்க்கு மாறாக அவன் சொல் வானா என்று உன்னிப்பாய் ஆராயும் பொழுதுதான் சொல்லின் செல்வனாகிய—இல்லையில்லை, சொல்லின் செல்வச் சீமானாகிய, சக்க்ரவர்த்தியாகிய கம்பரின் —

சொல்லாடல் திறமை— அழகிய தரம்— நமக்குத் தெரிகின்றது!

பல பொருள் ஒரு சொல்லாகிய 'அந்தரம்' இரு சொல்லாகி ஒரு சிறப்புப் பொருளைக் காட்டுகின்றது என வியக்கின்றோம்!

'அம் + தரம் = அந்தரம்' ஆகின்றது! 'அம்' என்பது 'அழகு' எனும் பொருளுடையது; 'தரம்' என்பது 'பக்கு வம்' அதாவது 'தன்மை எனும் பொருளது.

'ஆக 'வாலி அழகிய போற்றத் தகுந்த 'தன்மையை' அடைந்து விட்டான் என்று பொருளாகின்றது, 'அந்தரம் அடைந்தான்' என்னும் சொற்றொடரால். இதன் பயனாக, தன் வாலாலேயே வலிமை காட்டித் திரிந்து வந்த நிலையும் மாறி அதனைச் சுருட்டிக் கொண்டு அடக்கம் உடையவன் ஆயினான் என்பதை உரைக்கவே 'அவன் வாலும் போய் விளிந்தது அன்றே' என்றான். நல்லவனாகவோ, வல்லவனாகவோ அவன் இலங்கைக்கெல்லாம் மீண்டும் வரமாட்டான் என்று சொல்லும் பொருட்டு 'மீளான்' என்றான்; அதற்குக் காரணம் அவன் இராமன் கணையொன்றால் துஞ்சினான் என்றும் முடித்து விட்டான்.

இவ்வாறு கொள்ளாது, 'அந்தரம் அடைந்தான்' என்பதற்குப் (எந்த நிலை எய்தினான் என்பதெல்லாம் ஒரு புறம் இருக்க) 'இறந்தான்' என்ற பொருள்படவும், பின்னேயும் 'துஞ்சினன்' என்பதற்கும் 'இறந்தான்' என்ற பொருள்படவும் கொண்டால், கூறியதையே கூறுகின் றார் கம்பர்—அதுவும் சொல்லின் செல்வனாகிய அனுமன் வாயிலாகவே— என்றாகி விடுகின்ற தன்றோ?

ஆக, அஞ்சியிருந்த அரக்கர் கோன் மனத்தில் 'வாலி பற்றுக்கோல் இன்றித் தொங்குவது' போன்ற பீதியை உண்டாக்குவது போன்றும், ஆழ்ந்து சிந்திப்பார்க்கு

'அவன் போற்றத் தகுந்த தன்மை மாற்றம் பெற்று சிறந்தான்' என்ற உயர்ந்த எண்ணம் தோன்றுவதற்கும் ஏற்ப இச்சொடரைக் கையாண்டுள்ளான் எனப் புரிந்து கொள்ளும் பொழுது எவ்வளவு பூரிப்பெய்துகின்றோம்; தமிழ் மொழியின் சொல்வளம் அத்துணையது என்று வியக்கின்றோம்! கவிச் சக்கரவர்த்தியின் சொற் காட்டும் திறங்கண்டு மகிழ்கின்றோம்!

# 50. இளையவன் தனக்கே கடன்

சீதை, அனுமன் விழைந்த வண்ணம் அவனுடைய தோள் மீது ஏறி அசோக வனத்தினின்றும் தப்பிச் செல்லுதல் முறையன்று என்று கூறிவிட்டாள், எனவே, அனுமன்; தான் இராமனிடம் சென்று என்ன கூற வேண்டும் எனக் கேட்கின்றான். சீதை அவனிடம்,

''இன்னும், ஈண்டு, ஒரு திங்கள் இருப்பல் யான்;
நின்னை நோக்கிப் பகர்ந்தது, நீதியோய்!
பின்னை ஆவி பிடிக்கிலேன்; அந்த
மன்னன் ஆணை; இதனை மனக் கொள் நீ''

(5373)

என்கின்றாள்.

இப்பாடலில் வரும் 'நின்னை நோக்கிப் பகர்ந்தது நீதியோய்' என்ற வரிக்கு 'நீதி உள்ளவனே! நீ சென்று இராமனிடம் சொல்வதற்காக, உன்னை நோக்கி (ஈது) சொல்கின்றேன்' என்னும் பொருள் பகர்வர். அப் பொருள் சிறப்புற வில்லை.

அனுமன் சீதையைப் பார்த்து, 'நான் சென்று சொல்ல வேண்டிய செய்திகள் என்ன?'' என்று கேட்டதற்குச் சீதை பதில் சொல்கின்றாள்.

"மருளும் மன்னவற்கு யான் சொலும் வாசகம்
அருளுவாய் என்று அடியின் இறைஞ்சினான்"
(5372)

அப்படி யிருக்க, சீதை மீண்டும் 'இராமனிடம் சென்று நீ எடுத்துரைப்பதற்காக உன்னைப் பார்த்து சொல்கின்றேன்' என்று சீதை கூறியதாக—காட்சியின் உரையாடலைக்—கம்பர் அடுத்தடுத்து இருமுறை பாடுவாரா?

'இராமனிடம் நான் சென்று என்ன கூற வேண்டும்?; என்று அனுமன் கேட்ட கேள்விக்கு நேரிடையாக விடை தர வேண்டியது தானே. தேவைப்பட்ட முறையிலான நல்ல நடை. அந்த நடையை ஒட்டிப் பார்க்கும்பொழுது மேலே குறிப்பிட்ட அடியின் பொருளே வேறு ஆகும்!

'நெறி முறையானவனே! உன்னைப் பார்த்து புரிந்து கொண்டதால் நான் இன்னமும் ஒரு மாதம் உயிரோடு இருக்க முடிவு கொண்டுள்ளேன்! நான்,

"நிறை இரும் பல் பகல், நிருதர் நீள் நகர்ச்
சிறை இருந்தேன்." (5238) என்றும்,

"மன் உயிர் காத்து, இருங்காலம் வைகினேன்"
(5239)

என்றும், நான் பல நாள் ஈண்டு சிறையிலிருந்து ஒய்ந்ததைச் சொல்லி பல வகையாக அழுது, தற்கொலைசெய்து கொள்ள மாதவிப் பொதும்பரை அடைந்தேன். அப்பொழுது தான் நீ என் நாதன் நாமம் நவின்ற வண்ணம் என்னிடம் வந்தாய். உன்னைப் பல வகைகளாலே சோதித்தேன்; நீ மாய வேடம் கொண்ட அரக்கன் அல்லன், என் துணைவரின் துணைவனே என என்னுடைய நோக்கு தெளிவித்தது. அதனால்—அவ்வாறு உன்னைக் கண்டதனால்—என் சாவிற்கான கெடுவை இன்னமும் ஒரு 'மாதத்திற்கு ஒத்திப் போடுகின்றேன்

இந்த மன மாற்ற முடிவை நீ உணர்வாயாக என்ற இவ்வளவு அளவினதான விளக்கம் கூறவே, நின்னை நோக்கிப் பகர்ந்தது, என்ற சொற்றொடரைக் கவிச் சக்கரவர்த்தி கையாண்டுள்ளார் என்பதை உணர்தல் வேண்டும்.

அவ்வாறென்றால், 'சீதை, இராமனிடம் இன்னின்ன கூறுவாய் என்று சொல்லத் தேவையில்லையோ என்றால்? என்றால் உண்டு அதற்கான வினைச் சொற்களையும் அந்தந்த செய்தியின் இறுதியில்—செய்திப் பாவின் இறுதியில்—கம்பர் பெய்திருக்கக் காணலாமே!

''தன் வீரம் காத்தலை வேண்டு என்று வேண்டுவாய் (5374)

''தன் செங்கையால் கடன் செய்க என்று செப்புவாய்', (5376)

''செவ்வரம் தந்த வார்த்தை திருச் செவி சாற்றுவாய்''
(5378)

''வேண்டினாள். தொழுது என்று விளம்புவாய்'' (5379)

''அந்தம் இல் திரு நகர்க்கு அரசன் ஆக்கு என்பாய்'' (5382)

என்று இராமனிடம் கூறிய பலவும்,

'' ...................................மன் அருளால் எனைக்
காத்து இருந்த தனக்கே கடன், இடை
கோத்த வெஞ்சிறை வீடு என்று கூறுவாய்''
(5375)

என்று இலக்குவனிடம் கூறச் சொல்லிய ஒன்றும் கூர்ந்து கவனித்தல் வேண்டும்.

இனி, சீதை தன்னை அரக்கனுடைய சிறை வீட்டிலிருந்து காப்பாற்ற வேண்டியது இலக்குவனுடைய கடமை என்றது ஏன்?

''கருமேகம், நெடுங் கடல் கா அனையான்
தருமே, தனியேன் எனது உயிர் நான் என்று
நினைந்தும்

''கொண்ட போரின் எம் கொற்றவன் வில் தொழில்
அண்டர் ஏவரும் நோக்க, என் ஆக்கையைக்
கண்ட வாள் அரக்கன் விழி, காகங்கள்
உண்ட போது அன்றி, யான் உளென் ஆவேனா''
(5359)

''........... ..................................அது, தூயவன்,
வில்லின் ஆற்றற்கு மாசு என்று வீசினேன்'' (5362)

''....................... ...........அறம் வழுவாது என்றும்,
நாயகன் வலி எண்ணியும்'' (5367)

என்றெல்லாம் வரிசையாகக் கூறி வந்த சீதை இப்பொழுது திடீரெனத் தன்னைக் காக்க வேண்டியது இலக்குவனின் கடமை என்றது ஏன்?

இராமனைப் பொறுத்த வரையில், சீதை பற்பல ஐயங்களின் அடிப்படையால் தன்னை அவன் காக்க முற்படுவனோ இல்லையோ என்று அஞ்சினாள்!

'' நிறை இடும் பல் பகல், நிருதர் நீள் நகர்ச்
சிறை இருந்தேனை, அப் புனிதன் தீண்டுமோ?''
(5238)

''பிறர் மனை எய்திய பெண்ணைப் பேணுதல்
திறன் அலது என்று உயிர்க்கு இறைவன்
தீர்ந்தனன்'' (5241)

"இல் இயல் அறத்தை யான் இறந்து வாழ்ந்த பின்
சொல்லிய என்பழி அவரைச் சுற்றுமோ?" (5?45)

"அற்புதன், அரக்கர்தம் வருக்கம் ஆசு அற,
வில் பணி கொண்டு, அருஞ் சிறையின் மீட்ட நாள்,
'இல் புகத் தக்கலை' என்னில், யானுடைக்
கற்பினை, எப் பரிசு இழைத்துக் காட்டுகேன்?"
(5247)

என்றெல்லாம் ஐயுற்றாள், அஞ்சினாள்! அதனால்,

"ஆரம் தாழ் திரு மார்பற்கு அமைந்தது ஓர்
தாரம் தான் அலளேனும், தயா எனும்
ஈரம்தான் அகத்து இல்லை என்றாலும், தன்
வீரம் காத்தலை வேண்டு என்று வேண்டுவாய்"

என்றே கூறிவிட்டாள். (5374)

'இராமன் என்னைக் காக்க வேண்டிய தன் கடமையை வெறுப் புணர்ச்சி கொண்டு நீத்தாலும், தன் வீரத்தை நிலை நாட்டுவதற்காகிலும் இராவணனோடு போர் செய்து என்னை விடுவிக்கச் சொல்வாய்' என்றாள்

அப்படிக் கூறியும் இராமன் மனம் இரங்க வில்லை யானாலும், இலக்குவன் தனக்கு அண்ணன் மனைவியைத் தான் காக்க வேண்டியது கடமை அல்ல என்று விடுத்திடப் போகின்றான். அவனுக்கு தட்டிக் கழிக்கக் கூடாத கடமை ஆகும் எனக் கூறுகின்றாள்! ஏன்?

மாரீசனுடைய ஒலியைக் கேட்டு சீதை இராமனுக்கு ஏதோ ஆபத்து என்று அஞ்சினாள். அவருக்கு எந்த விதமான தீங்கும் நேர முடியாது என்று இலக்குவன் கூறினான். என்றாலும், அவனை அளவின்மீறி நிந்தித்து இராமன் பால் செல்லத் துரத்தினாள். அதன் விளைவாகத் தான் தனியள் ஆயினாள்; இராவணன் அவளை எடுத்தேகினான். அனைவர்க்கும் அலைச்சலும் துயரும் மண்டின.

'இதனை யெல்லாம் எண்ணி இளவல் என்னைக் காவாது விட்டு விடுவானோ?' என்று சீதை அஞ்சினாள். அந்த நேரத்தில், தாய் சுமித்திரை மகன் இலக்குவனிடம் கூறிய வாசகம் அவளுடைய நினைவிற்கு வந்தது!

"........................ அவ் வணம் இவ் அயோத்தி
மா காதல் இராமன் நம் மன்னவன்; வையம்
ஈந்தும்
போகா உயிர்த் தாயர் நம் பூங் குழல் சீதை-
என்றே ஏகாய்" (1751)

ஆம்; தாய் சூழ்நிலை காரணமாகத் தனையனைத் தவறாகக் கூறிவிட்டாலும் அந்தத் தாயை-அண்ணியை அன்று- காப்பது அவன் கடன் அன்றோ? எனவே தான் அனுமனிடம், உரிமையோடு அவ்வாறு உரைக்க வைக்கின்றார், கவிச் சக்கரவர்த்தி, என்ற ஆழ் பொருள் கண்டு சுவைத்தல் நம் கடமை அன்றோ?

## 51. சேவடி வந்து நோக்கினேன்!

அனுமன் அசோக வனத்தை அடைந்து மரத்தின் மேல் அமர்ந்திருந்தான்; அங்கு நடைபெற்றவை அனைத்தையும் தன் கண்கள் சாட்சியெனக் கண்டான்.

சீதை தற்கொலை முயற்சியில் இறங்கி மாதவிப் பொதும்பரை அடைந்தாள். அப்பொழுது அனுமன் சீதையின் எதிரில் வந்து,

'அடைந்தனென் அடியனேன், இராமன் ஆணையால்;
குடைந்து உலகு அனைத்தையும் நாடும்
கொட்பினால்
மிடைந்தவர் உலப்பு இலர்; தவத்தை மேவலால்,
மடந்தை! நின் சேவடி வந்து நோக்கினேன்"
(5250)

'நோக்குதல்' என்றால் ஒன்றினைக் கூர்ந்து காணுதல் ஆகும். அப்படி கூர்ந்து பார்த்த காரணம் என்ன? சீதையைக் கண்டவன் 'நின் திருவடி கண்டேன்' என்று கூறினாலே பொருந்தும் அல்லவா?

. அனுமன் சீதையை முதன் முதலில் கண்டது அசோக வனத்தில் அரக்கியர் நடுவில் அனுமன் மரத்தின் மேலிருந்தான்; அதனால், அவளுடைய திருவடியை அவன் எளிமையாகப் பார்த்திருக்க முடியுமே!

அவள், அங்கே நின்று கொண்டிருந்தால், சேலை கணுக்காலிற்கு மேல் நின்றிருந்தால், சுற்றி நின்ற அரக்கியரின் பூத உடல்கள் சீதையின் மெல்லிய உடலை மறைக்காமல் இருந்திருந்தால் அவளுடைய பாதங்கள் அனுமனின் கண்களில் பட்டிருக்கும். ஆனால், அவளோ உட்கார்ந்திருந்தாள்! அப்படி ஒன்றும் கவிச் சக்கரவர்த்தி பாடவில்லையே என்று வியப்புத்தோன்றுகின்றதோ:

அரக்கியர் நடுவில் இருந்த சீதையைக் கண்டு அனுமன்,

"..................அரவணைத் துயிலின் நீங்கிய
தேவனே அவன்; இவள் கமலச் செல்வியே"
(5134

என்று பெருமையாகப் பார்த்தான்!

செங்கமலத்து இருக்கை விட்டு வந்துள்ள இலக்குமியாகிய சீதை, தான் சிறைப்பட்டதிலிருந்து நின்று கொண்டே இருக்க ஏலாது; ஆக, தவமாய் நின்றிருந்திருந்தாலும் ஒரு சில நாள் கழித்தாகிலும், அமர்ந்திருந்து இராம நாம தவம் மேற் கொண்டிருந்திருக்க வேண்டும் என்பது உடலியல் அடிப்படையின் நோக்கு மேலும் அங்கு மிங்கும் அந்த அசோக வனத்தில் திரிந்

திருக்கும் மனோ நிலையும் அவளுக்கு இருந்திருக்காது என்பது உளவியல் நோக்கு; அது மட்டும் அல்ல; அவளைச் சுற்றி அரக்கியர் வளையம்! அதனால் அவள் தன்னிச்சையாக எங்கும் திரிந்திருக்க முடியாது. ஆக, அமர்ந்திருந்தாள் என்பதில் வியப்பு இல்லை அல்லவா?

அவ்வாறு அமர்ந் திருந்தவளை நாடி தீய எண்ணத்தால் வரும் இராவணனை மதித்து மரியாதை கொடுத்து சீதை எழுந்து நின்றிருக்க மாட்டாள்; அவனை அவ்வளவு துச்சமாக மதித்து, ஏசியும் பேசியும் இருக்கின்றாள்! அவனுக்கு அஞ்சியாவது எழுந்திருந்திருப்பாளோ என்றால் அவளை அவன் தீண்டி விடுவானோ என்னும் ஐயத்திற்கும் இடமில்லை; திரிசடை ஏற்கனவே அவளுக்கு ஆறுதல் கூறியுள்ளாள். பிற மாதரின் ஒப்புதல் இன்றி அவர்களை இராவணன் தீண்டினாலும் அவனுடைய தலைகள் வெடித்துவிடும் என்ற சாபம் இருப்பதாகத் திரிசடை கூறியிருக்கின்றாள் அல்லவா? அதையும் மீறி அவன் நெருங்கினால் சீதை தன் கற்பின் திண்மையால் சுட்டெரித்திருப்பாள் என்பது அவள், பின்னர் அனுமனிடம்,

“அல்லல் மாக்கள் இலங்கையது ஆகுமோ?
எல்லை நீத்த உலகங்கள் யாவும், என்
சொல்லினால் சுடுவேன்” (5362)

என்று சொல்லியதிலிருந்து தெரிகிறது.

அவள் நின்று இராவணனோடு வாதிட்டுக் கொண்டிருந்ததால், இறுதியில் அவன் தன் தலையைத் தாழ்த்தி அவளுடைய பாதங்களைக் குனிந்த வண்ணம் என்ற நிலையில் வணங்கிக் கெஞ்சியிருப்பான். ஆனால் அவன் மண் மேல் படிய வீழ்ந்து வேண்டினான் , என்பதைக் கம்பர்,

"முடியின் மீது முகிழ்ந்து உயர் கையினன்
படியின் மேல் விழுந்தான் பழி பார்க்கலான்
(5182)

என்ற பாடலாக படம் பிடித்துள்ளார்! அவன் கண்களிலும் படாதபடி அவளுடைய ஆடை பாதங்களை மூடியிருந்தது என்று யூகிக்கின்றோம்! எனவே அனுமன் வந்ததிலிருந்து இராவணன் அவளிடம் பேசிச் சென்ற வரை அவளின் திருவடியை அவனால் பார்க்க முடியவில்லை. இப்பொழுது அவள் எழுந்து நடந்து மாதவிப் பொதும்பரை அணுகிய பொழுதுதான்—அவளுடைய அங்க அசைவின் பொழுதுதான்—அவள் தன் திருவடியை உற்றுப்பார்த்தது தரிசனம் பெற்றான்!

தன் தலைவனின் இல்லாள், இலக்குமி தேவிக்கு நிகரானவள் என்ற பாங்கில் தூதன் அனுமன் அவளுடைய திருவடியை சேவிக்க ஆவலோடும் ஆர்வத்தோடும் நுணுகிப் பார்த்து நின்றதால் தான் கண்டான் என்பதையே, 'சேவடி வந்து நோக்கினேன்' என்ற அனுமனின் உற்சாகமான வினயமான சொற்றொடரால் கவிச் சக்கரவர்த்தி உணர்த்தியுள்ளார்.

## 52. நின்ற சங்கை

சீதையும் அனுமனும் பேசியிருந்த பின் அவன் தன்னுடைய தோள் மீது சீதையை ஏற்றி நொடிப் பொழுதில் எடுத்தேகுவதாகக் கூறுகின்றான். அவள்,

"உரியது அன்று என ஓர்கின்றது உண்டு, அது, என்
பெரிய பேதைமைச் சில் மதிப் பெண்மையால்"
(5356)

என்று கூறி முதலில் மறுக்கின்றாள். பின்னரே காரணங்களைக் கூறுகின்றாள்.

காரணங்களை சீதை எடுத்துரைக்கும் முன்னே' அவள் அவ்வாறு மறுப்பதற்குக் காரணம், அவள் தன்னை முழுமையாய் நம்ப வில்லையோ என்று ஐயுறுகின்றான்!

'இராம நாமம்' சொல்லித்தான் சீதையின் முன் தோன்றியும், அவன் தன் வரலாறு முழுமையும் கூறியும் ஐயன் மேனி பற்றி அரைத்தும், இராமன் உரைத்த அடையாள உரைகள் எடுத்துச்சொல்லியும், இராமனின் கணையாழியைக் காட்டியும், இராம இலக்குவரைப் பற்றி வினாவிய போது விடையிறுத்தும் நின்ற அனுமனைச் சீதை வாழ்த்திய பின்னும், அவள் தன் மீது இவர்தற்கு ஒப்பாததனால் அவள் தன்னை முழுமையாக நம்ப வில்லையென ஐயுறுகின்றான்!

அவ்வாறு அவள் நம்ப வில்லையென்பதை உண்மையெனக் கொண்டதற்குக் காரணம் அவள் தன் பெண்மை அஞ்சுகின்றது என்று அறிவித்ததே! ஆம், 'நான்முன்னம் என் பெண்மைப் புத்தியால் ஏமாந்து வேட தாரியாக வந்த இராவணனை முழுமையாய் நம்பியதாய் வந்த் வினைதானே, இந்த நிலை! அதுபோல்; இப்பொழுதும் இந்த அனுமனை முழுமையாய் நம்பலாமா? இவனும், அவனே போல் உருமாறும் தன்மை உள்ளவன்; தான் கடலைக் கடந்த வரலாற்றை விளக்கி, தன் பேருருவைக் காட்டினானே! குறுகிய வடிவம் விசுவரூபம் பெற்றது என்றால், என்னைத் தூக்கிச் செல்லும் பொழுது அதே குரங்குருவம், அரக்க உருவம் பெற்றுவிட்டால் என்ன செய்வது?' என்று அஞ்சுகின்றாள் போலும் என ஐயம் கொண்டான் அனுமன்.

'இதுவரை நடந்தேறிய நிகழ்ச்சிகளால் என்னை முழுமையாய் நம்ப முடியவில்லை யென்றாலும் இவ

ளுடைய கற்பின் தன்மை உறுதியானால் அஃது இவளின் உள்ளுணர்வைத் தெளிவித்து நான் அரக்கன் அல்ல, உண்மையில் இராம தூதனேயென்று அறிவித்து இருக்குமே! அவ்வாறன்றி இவள் அஞ்சுவதால் இவள் கற்பினில் ஏதும் மாசு உண்டோ?' என இடர்ப்பட்டான்.

ஆனால், அவள் அவனுடைய தோள் மீது இவர்ந்து செல்லாததற்கு ஒரு காரணம், அவன் 'ஆண்' என்பதாகும் என்று கூறியதனால் மகிழ்ந்தான். அவள் தன்னை முழுமையாய் நம்பாமல் இல்லை. தான் ஓர் ஆண் என்பதால் கற்பு நிலை காக்கும் பொருட்டு வேறு ஆடவனைத் தீண்ட மறுக்கின்றாள்; தனக்கு ஏற்பட்ட ஐயம் தவறானது என அது நீங்கப் பெற்றான். அதன் விளைவாக அவளுடைய கற்பில் மாசு உண்டு போலும் என அவன் மனத்தில் ஏற்பட்டிருந்த இடரும் அழிந்தது!

இதனைத் தெளிவு படுத்தவே கம்பர்,

"நின்ற சங்கை இடரொடு நீங்கினான்" (5371)

என்ற சொற்றொடரைக் கையாண்டுள்ளார்!

# 53 இருமாதர்

அனுமன், சீதையினிடம் பேசியிருந்து விட்டுத் திரும்பும் முன்னே, 'இராமனிடம் என்ன கூற வேண்டும்? எனக் கேட்கின்றான்.

அதற்குச் சீதை, "நான் இன்னமும் அவனுடைய வரவுக்காக ஒரு மாதம்தான் காத்திருப்பேன்; அதற்கு மேல் உயிரோடு இருக்க மாட்டேன்; இது அவர் மேல் ஆணையாகச் சொல்கின்றேன் என்பதை நீ உணர்வாயாக ஏற்றுக் கொள்ளவில்லை என்றாலும் பரவாயில்லை; என்மேல் அவர் மனத்தில் தயை இல்லா விட்டாலும் பரவாயில்லை; தன்னுடைய வீரத்தை நிலை

நாட்டவாகிலும் அவரை வரச் சொன்னதாகக் கூறுவாயாக. என்னைச் சிறை மீட்டுக் காத்தல் இளையவற்குக் கடமை என்பதை அந்த இளவலுக்கு உரைப்பாயாக.

ஒரு மாதத்தில் அவர்கள் வந்து என்னைக் காக்கவில்லையானால், கங்கைக் கரையில் என் ஈமச் சடங்குகளைச் செய்து விடட்டும். என் நாயகர் என்மேல் கருணையில்லாததால் மறந்தாலும் நீயாகிலும் என்னுடைய மாமியார்கள் மூவரிடமும், ‘சீதை உங்களைத் தொழுத வண்ணம் இறந்தாள்’ என்று எடுத்துரைப்பாயாக.

நான் இங்கேயே இருந்து இறக்க வேண்டி நேர்ந்து விட்டாலும் மறு பிறவியிலாவது அவரைச் சேர்ந்து என் தீவினையை அழித்துக் கொள்ளும் அருளைப் பெய்திட வேண்டியதாகக் கூறு. அரசு வீற்றிருந்து அரச போகங்களை அனுபவிக்கும் பாக்கியம் இல்லேன்; அது என் விதி. தன் பிரிவால் துயர்வுறும் மக்களையும், பரதன் அங்கு படும் வேதனையையும் எண்ணி அவர் அங்கு செல்லாமல் என்னைக் கருதி அவர் இங்கு வரப் போகின்றாரா?

என்னுடைய தாய் தந்தையர் சுற்றத்தார் அனைவர்க்கும் என் வணக்கத்தைத் தெரிவிப்பாயாக. சுக்கிரீவனிடம், ‘எழில் தோளுடைய என் நாயகனைத் தொடர்ந்து காத்து, அயோத்திக்கு அழைத்துச் சென்று அவரைக் கோசல நாட்டின் கோமகனாக்கும்படிச் சொல்’’ என்றெல்லாம் கூறினாள்.

இவ்வளவும் கூறியவள் இடையில் மற்றொன்றையும் நினைவுறுத்தினாள்.

“ வந்து எனைக் கரம் பற்றிய வைகல்வாய்,
இந்த, இப் பிறவிக்கு இரு மாதரைச்

சிந்தையாலும் தொடேன்' என்ற, செவ்வரம்
தந்த வார்த்தை திருச் செவி சாற்றுவாய்'' (5378

என்று கூறினாள்!

துவக்கத்திலேயே, 'நான் அவருக்குத் தகுந்த மனைவியாகக் கருதவில்லையென்றாலும்' என்று குறிப்பிட்டவள், தன் பேச்சின் இடையில், இராமன்தான் இந்தப் பிறவியில் இரு மனைவியரை மனத்தாலும் நினையேன் என்றதை ஏன் நினைவுபடுத்தினாள்? அவ்வாறு அவன் கூறியிருந்தாலும் ஏன் 'இரு மாதர்' என்று குறிப்பிட்டான்; 'மறு மாதர்' என்று சொல்லியிருக்கலாமே!

இராமன், மறு மாதரை நினையாதவன் என்பது மட்டும் அல்ல; பிற மாதர்களும் அவனை வேறு எண்ணங் கொண்டு பார்க்க முடியாது என்பதை அனுமன்,

'' மஞ்சு எனத் திரண்ட கோல மேனிய! மகளிர்க்கு
எல்லாம்
நஞ்சு எனத் தகைய ஆகி, நளிர் இரும் பணிக்குத்
தேம்பாக்
கஞ்சும் ஒத்து அலர்ந்த செய்ய கண்ண!'' (3765)

என்று நமக்குப் பின்னர் எடுத்துக் காட்டியுள்ளானே!

பஞ்ச வடியில் சூர்ப்பணகை சுந்தரியாய் வந்து இராமன் தன்னை ஏற்க வேண்டிச் செய்த சாகசங்களில் அவன் மயங்காமல், சீதையை அந்த அரக்கி ஏசிப் பேசியதைப் பொறுக்க மாட்டாமல் அவளை அதட்டி விரட்டியடித்ததை சீதையே உடனிருந்து கண்டிருந்தவள் ஆயிற்றே!

அப்படியிருக்க, அவள் அந்த 'இரு மாதர்' சொற்றொடரை ஏன் நினைவுறுத்தினாள்?

இராமனாய்த் தோன்றப் போவது யார் என்பதை வசிட்டர் தம் மனக் காட்சியில் கண்டு கொண்டார். அதனைக் கம்பர்,

" மாரதம் அனையவர் வரமும், வாழ்வும், ஓர்
நிசரத கணைகளால் நீறு செய்ய, யாம், (திருமால்)
கசரத துரகமாக் கடல் கொள் காவலன்
தசரதன், மதலையாய் வருதும் தாரணி" (200)

என்னும் பாடலால் நமக்குத் தெரிவித்துள்ளார்.

மன்வர் வீற்றிருந்த மண்டபத்திற்கு சீதையை அழைத்து வரக் கண்ட வசிட்டர்,

" எங்கள் செய் தவத்தினில், இராமன் என வந்தோன்
சங்கினோடு சக்கர முடைத் தனி முதற் பேர்
அம் கண் அரசு; ஆதலின், அவ் அல்லி மலர் புல்லும்
மங்கை இவள் ஆம் என" (1148)

மகிழ்வுற்றார் எனக் காண்கின்றோம்.

" விசுவாமித்திரரோ, 'இவள் மலர் நங்கை' (1152)
என்று வியந்தார்!

அடுத்தபடியாகக் கம்பர், 'இராமன்-சீதை' யார் என்பதைத் தம் கவிக்கூற்றாகவே,

" கருங் கடல் பள்ளியில் கலவி நீங்கிப் போய்ப்
பிரிந்தவர் கூடினார்" (517)

என்ற பாங்கில் திருமாலும் திருமகளும் எனக் காட்டி விட்டார்.

இராமன் அவளைப் பூமகள் என்று கொண்டான் (620)

விராதன் வெளிப்படையாகவே இராமனைத் திருமால் எனப் பிரகடனப்படுத்தித் துதித்து நின்றான், இராமனைத், "திரு உறையும் மணி மார்ப!" (2572) என்றே விளிக்கின்றான்.

அவன் அத்தோடு நிற்கவில்லை.

“ அரவு ஆகிச் சுமத்தியால், அயில் எயிற்றின்
ஏந்துதியால்,
ஒருவாயில் விழுங்குதியால், ஓர் அடியால்
ஒளித்தியால்—
திரு ஆன நில மகளை; இஃது அறிந்தால் சீறாளோ,
மரு ஆரும் துழாய் அலங்கல் மணி மார்பில்
வைகுவாள்?”

என்று பாடி, திருமாலின் மற்றைய மனைவியாகிய பூமா தேவியை நினைவு படுத்திவிட்டான்.

இதனையெல்லாம் சீதையும் (இலக்குமி) உடன் இருந்தே கேட்டிருந்தாள்.

இந்திரன், இராமனைத் திருமாலென உணர்ந்து,

“ ஒன்று ஆகி, மூலத்து உருவம் பல ஆகி,
உணர்வும் உயிரும் பிறிது ஆகி, ஊழி
சென்று ஆசறும் காலத்து அந் நிலையது ஆகி,
திறத்து உலகம்தான் ஆகி, செஞ்செவே நின்ற
நன்று ஆய ஞானத் தனிக் கொழுந்தே! ”

என்று தொழுது நின்றான்.

இவ்வாறெல்லாம் தேவர்களும், முனிவர்களும், கவிச் சக்கரவர்த்தியும் இராமனைத் திருமாலாகவே கண்டு கொள்ளும் பெற்றியிருக்க, அந்த இராமன் தன்னைத் தானே பாரெனத் தேவைப்பட்ட பொழு தாகிலும் உணர்ந்து நிற்றலில் வியப்பில்லை.

வாலி, இராமனிடம் மேலும் மேலும் உலகியல் நோக்கில் வினாக்களைத் தொடுத்து வாதிட இராமன் தன் சுய உருவைக்—திருமாலாகக் காட்டி— நின்றான்; அப்பொழுது வாலிக்கும் அவன் இந்திரன் என்ற உணர் வைத் தூண்டிவிட்டு விட்டான் அவ்விறைவன் அதனால் தான், வாலி இராமனை (இந்திரன் திருமாலை)

“ ஏவு கூர் வாளியால் எய்து, நாய் அடியனேன்
ஆவி போம் வேலைவாய், அறிவு தந்து அருளினாய்
மூவர் நீ! முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ!
பாவம் நீ! தருமம் நீ! பகையும் நீ! உறவும் நீ!
(4063)

என்று துதித்தான்.

அதேபோல், திருமண வைபோகப் பள்ளி அறையில் இராமனும் சீதையும் எவ்வளவோ தேவ ரகசியங்களைப் பரிமாறிக் கொள்ளும் வாய்ப்பு இருந்திருக்கும் என்பதில் ஐயமில்லை! அவ்வாறு பரிமாறிக் கொண்ட செய்திகளில் திருமாலின் இரண்டாம் மனைவியின் பேச்சு வர இராமன் இந்த அவதாரத்தில் தான் ஏக பத்தினி விரதனாக இருந்து உலகிற்கு ஓர் உதாரண புருஷனாக வழிகாட்ட வேண்டும் என்பதால், ‘நான் இந்த இப் பிறவியில்—அதாவது நான் இராமனாக இருக்கும் பொழுது—இலக்குமியே! உன் சகோதரியான பூமா தேவியை முழுமையாக மறந்தே இருப்பேன்! மறந்தும் கூட அவள் நினைவு எனக்கு வராது!’ என்று உறுதி யளித்ததில் வியப்பு என்னே!

எனவே, சீதை (இலக்குமி) இப்பொழுது இராமன் தன்னைப் பிரிந்திருக்கும் வேளையில், தவறிப் போய் பூமாதேவியின் நினைவு வந்துவிட்டதோ என்று ஐயுற்றாள். அனுமனிடம் இராமனின் உறுதி மொழியை நினைவுபடுத்தித் தன்னைக் காக்க வரும்படியாகக் கூறாமல் கூறுகின்றாள்.

## 54. பிறரும் வெல்வரோ?

பிரம்மாத்திரத்திற்குக் கட்டுண்டான் அனுமன்; இந்திரசித்து அவனை இலங்கை அரண்மனைக்குள் கொண்டு சேர்த்தான்

அங்கு, இராவணன் அரசவையில் வீற்றிருக்கும் காம்பீரியக் காட்சியைக் கண்டான், அனுமன். அவனுடன் அங்கேயே பொருது வீழ்த்த ஆவேசம் கொண்டான்" என்றாலும், அனுமன் பிறரைக் கண்டவுடனேயே அவர்களின் ஆற்றலை நுனித்தறியும் வல்லவன் ஆயிற்றே! அத்தன்மையினால்தானே அவன், இராம இலக்குவரைக் கண்டதும்,

"துன்பினைத் துடைத்து, மாயத் தொல் வினை
தன்னை நீக்கி,
தென்புலத்து அன்றி, மீளா நெறி உய்க்கும்
தேவரோதாம்?" (3763)

என்று அனுமானித்துக் கொண்டான்.

அதே போல், இப்பொழுது இராவணனின் தோற்றத்தைக கண்டே,

"கொல்லலாம் வலத்தனும் அல்லன்; கொற்றமும்
வெல்லலாம் தரத்தனும் அல்லன்; மேலை நாள்
அல் எலாம் திரண்டன நிறத்தன் ஆற்றலை
வெல்லலாம் இராமனால்! பிறரும் வெல்வரோ"
(5865)

என்று வியந்தான். அது மட்டும் அல்ல;

"என்னையும் வெலற்கு அரிது இவனுக்கு; ஈண்டு
இவன்—
தன்னையும் வெலற்கு அரிது எனக்கு." (5866)

என்று தானும் இராவணனும் சம பலத்தவர் என்பதை உறுதியாகக் கூறினான்!

'இராவணனின் பத்துத் தலைகளையும், எல்லா உலகங்களும் மகிழ, யானே கொய்து தள்ளுவேன்' என்று இராமன் முன்னமேயே சொல்லியிருந்தானாம்! அதற்

கேற்ப, இராவணனை இராமனால் தான் வெல்ல முடியும் என்று வேண்டுமானால் அவன் சொல்லும் வாய்ப்பு உண்டு.

ஆனால், தானும் அவனும் இணையெனக் கவிச் சக்கரவர்த்தி ஏன் அவனைச் சொல்ல வைத்தார்? ஒரு வேளை, யாராலும் வெல்லப்பட முடியாத—இராமனால் மட்டும் வெல்லப் படக் கூடிய இராவணன்—அனுமனையும் வீழ்த்தி விட்டால்! அனுமன் உரை-சொல்லின் செல்வன் உரை—பொய்த்து விடாதோ? ஆம்; அதற்கும் வாய்ப்பு உண்டு!ஆனால், கதைப் போக்கில்,பின் நிகழ்ச்சி ஒன்று கம்பரின் கண்முன் தோன்றியது!

முதற்போரில் சுக்கிரீவனுக்கும் இராவணனுக்கும் இடையே போர் நிகழ்ந்தது; சுக்கிரீவன் தளர்ந்தான்.அச் சமயத்தில் அனுமன் நுழைந்தான். கற்களையும், மரங் களையும் தூக்கித் தூக்கி இராவணன் மேல் வீசினான்; அவனும் அனைத்தையும் கீழ்ப்போக்கி எதிர்த்து நின்றான். இறுதியில், அனுமன் மீது, இராவணன் அம்பு எய்தான்; அவன், குருதி சோர வீழ்ந்து அயர்ந்தான்.

இப்போழ்து, இலக்குவன் வந்தான், இராவண—இலக்குவப் போர் நடந்தது. ஒருவர்க்கொருவர் அம்பெய்து சளைக்காது போர் புரிந்திருந்தனர்.

அதற்குள், அனுமன் மூர்ச்சை நீங்கி எழுந்து வந் தான். இராவணனை நோக்கி ஓர் சூளுரைத்தான்.

‘விற்போர், வாட்போர், மற்போர் யாவும் பயின்று வல்லமை பெற்ற பெரு வலி வீரனே! உன் வல்லமை அனைத்தையும் இப்பொழுது தீர்த்துக் கட்டுகின்றேன். இதோ கை வலியைப் பார்! நான் உன்னை என் கையால் ஓங்கிக் குத்துவேன்; அதனைத் தாங்கி நீ உயிர் பிழைத் திருந்தால், நீ என்னை, உன் வலிமை காட்டி குத்துவா யாக; நான் அதனைத் தாங்கிப் பிழைத்து விட்டால் உன்

னோடு நான் எப்பொழுதும் போராட வரமாட்டேன்' என்றான்!

அவனுடைய வீர உரைக்கு இராவணன் வியந்தான் அந்தச் சவாலைச் சந்திக்காமல் தொடர்ந்து விற்போர் சரியன்று என வீரத்தின் அழகில் நின்றான். அனுமனுடைய பேச்சுக்குக் கட்டுப் பட்டான்.

அனுமன் கூறிய படியே, முதலில் அவனுடைய குத்தினை இராவணன் ஏற்றான்; மதயானை போல் தரையில் சாய்ந்தான்; நிலை குலைந்தான்; ஆனால் இறக்கவில்லை! உணர்வு பெற்று எழுந்தான்.

இராவணனைப் புகழ்ந்து அனுமன் தன் மார்பினைக் காட்டி நின்றான். அவனும் தன் வலியெல்லாம் ஒன்றாக்கிக் குத்தினான். அனுமன் நிலை குலைந்து சாய்ந்தான், அவனை இலக்குவன் எடுத்துச் சென்றான்.

இந்த ஒப்பந்தத்தினால், பிறிதொரு சமயம் அனுமன் இராவணனோடு போர் புரிய வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டும், அனுமன் பேச்சு மாறாது நின்றிட்டான்!

ஆக, யுத்த காண்டத்தில் இந்த நிகழ்ச்சியின் வாயிலாக, இராவணன், அனுமன் சம வலிமை தெரியப் போகிறது என்பதைக் கம்பர் அறிவாராகையினால், இந்த சுந்தர காண்டத்திலேயே அனுமன் வாயிலாக அச் சம்பலம் பற்றிக் கூறியுள்ளார் எனத் தெரிகின்றோம்!

(இராவணன் மல்யுத்த முறையில் இவ்வளவு வல்லவன் என்பதின் அடிப்படையில் சிலர் இராமனிடம் குறை காண்பர்!)

முதல்நாட் போரில், இராவணன் இராமனின் அம்பால் மகுடம் வீழ நின்றான்! அப்பொழுது, இராமன் இராவணனை நோக்கி,

"...................... இன்று போய், போர்க்கு
நாளை வா"(7270)

என்று கூறினான்.

,இராமன் மற்போரில் வல்லவன் அல்லன்; அவனால், இராவணனை மற்போரில் வெல்லுதல் ஏலாது; அதனால் இராமன் 'நாளை' வரச் சொல்லி அனுப்பி விட்டான், தந்திரமாக!' என்ற பாங்கில் இராமன்பால். குறை காண்பர்.

இராமன் மற்போரில் வல்லவன் அல்லன் என்பது வேண்டு மானால் உண்மையாக இருக்கலாம். ஆனால், இராவணன் ஏன் அதனை ஒப்பினான்? அனுமன் முன் வந்து இராவணனை மற்போர்க்கு அழைத்தது போலே, இவன் இராமனை மற்போர்க்கு அழைத்திருந்தால் வென்றிருக்கலாம் அல்லவா? ஏன் வாய்ப்பை நழுவ விட்டான்!

'குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு என்னும்' என்பதற் கிணங்க இராமனிடத்துக் குறை இருந்ததால்,

" வீரமும், களத்தே போட்டு, வெறுங் கையே மீண்டு
போனான்"(7272)

ஆகவே, இராமனைக் குற்றம் கூறுவது நேரிது அன்று!)

# 55. இலங்கை மேயினேன்!

அனுமன், ஒரு வழியாகச் சீதையைக் கண்டான்; அழகுப் பொழிலை அழித்தான். தன்னைப் பிடிக்க வந்த பெரும படைகளை எல்லாம் ஒழித்தான். இறுதியில் பிரம்மாத்திரத்திற்குக் கட்டுப் பட்டு இராவணன் அவைக்கு வந்தான்.

இராவணன் அனுமனைச் சினந்து, இன்னவனோ என்று பலவாறாகக் கேட்டு, முடிவில்,

"யாரை நீ என்னை, இங்கு எய்து காரணம்?
ஆர் உனை விடுத்தவர்? அறிய, ஆணையால்

சோர்விலை சொல்லுதி' (5877)

எனக் கேட்டான். அதற்கு பதில் இறுத்த அனுமன்,

"சொல்லிய அனைவரும் அல்லென்; சொன்ன அப்
புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன்;
அல்லி அம் கமலமே அனைய செங்கண் ஓர்
வில்லி தன் தூதன் யான்; இலங்கை மேயினன்"
(5878)

என்றான்.

'நீ யார்? எனக் கேட்ட வினாவிற்கு, தான் 'இராம தூதன்' என்பதைக் கூறினான். சரி; 'ஏன் இங்கு வந்தாய்? எனக் கேட்ட வினாவிற்கு நேரடியான விடை கூறாமல் இலங்கைக்கு வந்தேன், என்று கூறினானே! ஏன்?

இராவணனுக்கு அவர்கள் இருந்து பேசிக் கொண்டிருப்பது இலங்கை என்பது தெரியாதா! நான் இன்ன இடத்திற்குச் செல்ல வேண்டியவன், வழியில் இந்த இலங்கையை அடைந்துள்ளேன்' என்று சொல்வதற்கு முன்னுரையாக அவ்வாறு கூறினானா? அதற்கும் அவசியம் இன்றி, அவன் அங்கு சீதையைக் கண்டு பேசி விட்டானே! பின் ஏன் 'இலங்கை' என்று தன் வாயால் ஒரு முறை சொல்லிப் பார்த்துக் கொண்டான்?

அனுமன் பவள மலைமேல் பாய்ந்து இலங்கையை நோக்கினான்.

'மாட மாளிகைகள் பொன்னால் இழைக்கப் பட்டவையோ? நவரத்தின மணிகள் கொண்டு பதிக்கப் பட்டவையோ? மின்னற் கொடிகளைக் கொண்டே அமைக்கப் பெற்றவையோ? என்ற அளவிற்கு வியப்படையும் வண்ணம் ஆகாயம் அளாவி அமைந்திருந்தன. தேவ லோக,

நாகலோக மாடங்களும் தாழ்வுற அவை மிளிர்ந்தன கரிய மேகத்தில் தோன்றும் மின்னல் கொடிகளை ஒடித்துத் துடைப்பமாக்கிப் பணிப் பெண்டிர் அவற்றில் படிந்த வாசனைப் பொடிகளைப் பெருக்கித் தள்ளி தூய்மைப் படுத்தினர்; ஆகாய கங்கை நீர் கொண்டு தெளித்துக் கொண்டிருந்தனர். சுவர்களில் ஆரணங்குகள் தங்கள் பேரழகைக் கண்டு கொண்டிருந்தனர்; அந்த அளவிற்கு அவை பளிங்குபோல் மின்னின! அத்தகைய மாளிகை இந்திரனுடைய சுகபோக அரண்மனையினும் சிறப்பாக விளங்கிற்று.

அங்கே தேவாதி தேவர்கள் பலரும் தொண்டு செய்து கொண்டிருந்தனர்! தேவ மாதர்கள் பணிப் பெண்களாய்ச் சேவை செய்து கொண்டிருந்தனர், புகழ்பெறு யானைகளும், குதிரைகளும் தேர்களும் நிரம்பியிருந்தன. இசை முழக்கம் இடையறாது கடலலை ஒலியாய்க் காற்றில் மிதந்து கொண்டே இருந்தது. பசும் பொன் ஒளி இலங்கை முழுதும் பரவி இனிமை ஊட்டியது.

நகர் முழுதும் நறுமணம் கமழ்ந்திருந்தது. பொன்னும் மணியுமே காடுகளாய். சோலைகளாய்ப் பொலிவுற்று இருந்தன. ஐம்பூதங்களின் பயன் முழுமையாய்ப் பரிணமித்திருந்தது.

'சுழற் காற்றும், மேக மூட்டமும், சூரிய சந்திரர் கதிர்களும், எமனின் ஆற்றலும் இந்நகர் மதிலைக் கடந்து செல்லாவோ?' என்று அதிசயிக்க வேண்டியிருந்தது!

அந்நகரில் எங்கு பார்த்தாலும் ஆடல் பாடலில் களித்து, அணிகலன்கள் ஆடைகள் மாலைகள் செறிக்க உடுத்து, துன்பச் சாயலே படாத வண்ணம் மக்கள் இன்பத்தில் திளைத்திருந்தனர்.

பொதுவில், அனுமன் கண்ட நகர் விண்ணகரமாய், சொர்க்கலோகத்தினும் மிளிர்ந்து விளங்கிக் கொண்டிருந்தது. எனவே, அவன் மனத்துள் 'அதுதான் இலங்கையா? இல்லை, இடம் மாறி வந்து விட்டோமோ' என்ற ஐயப்பாடு அவனுடைய ஆழ்மனத்தில் பதிந்திருந்தது!

'அந்த ஆழ்மனப் பாதிப்பால் அனுமன் இன்னமும் ஊர் தேடி அலையும் மயக் த்திலிலிந்து விடுபடவில்லை எனவே, தான் இருப்பது இலங்கைதான் என்பதைத் தனக்குத்தானே உறுதிப் படுத்திக் கொண்டு, மேலே பேசத் தொடர்கின்றான்! ஏனெனில், தான் மீண்டும் இராமனுடன் வரும் பொழுது சரியான இடமும் பெயரும் தெரிய வேண்டும் அல்லவா?

## 56. காணும் மதியினால் வந்தேன்!

இராவணன் அவையில் அவனது வினாக்களுக்கு அனுமன் விடையிறுத்து இருந்தான்; இராவணன் சுக்கிரீவனை இகழ்ந்து பேசினான். அவனுக்குப் பொது நீதிகளை அத்தருணத்தில் அறைவது தக்கது என அனுமன் எண்ணினான்.

'எந்த சுக்கிரீவனை, நீ, தன் தமையனைக் கொல்வித்தவன் என்றெல்லாம் ஏளனமாய்ப் பேசினாயோ, அந்தத் தலைவன் உரைத்த நன்னெறிகளைக் கேள் என்று தொடர்ந்தான்.

"'உன் அந்திமக் காலம் நெருங்கியதின் அறிகுறியாக சீதையை அபகரித்துச் சென்ற தீச்செயலை நீ செய்து விட்டாய். என்றாலும், என் அறிவுரையைக் கேட்டு தக்கபடி நடந்து கொள்; அழிக்க முடியாத சிவனருள் பெருவாழ்வு, இச்செயலால் அழிகின்றது

நீங்கி நெடிது வாழ்வாய். சீதையின் மேல் நீ உற்ற காமத்தால் உன் பெரும்புகழ் மாய்ந்து அழிகின்றது. பிறன் மனை நயப்பவர்கள் தங்களுடைய அறிவே அழிய தாழ் நிலையை எய்துவர். அவ்வாறு அழிந்தவர்களின் வரலாறுகளை நீ அறியாயோ? ஆக, இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டாகிலும் சீதையை விட்டுவிடு. நீ உன் உற்றார் உறவினருடன் இலங்கை ஆட்சியில் நீடித்து நின்று உயர்!'' என்று சுக்கிரீவன் உன்னிடம் கூறச் சொன்னார்'; என அனுமன் பற்பல அறவுரைச் செய்திகளைக் கூறினான்.

மீண்டும், இராவணன் ஏளனம் செய்து, 'தூதனாக வந்த நீ ஏன் என் மக்களைக் கொன்றாய்?' எனக் கேட்டான். அதற்கு அனுமன்,

''காட்டுவார் இன்மையால், கடி காவினை
வாட்டினேன்; என்னைக் கொல்ல வந்தார்களை
வீட்டினேன்; பின்னும் மென்மையிலால் உன்தன்—
மாட்டு வந்தது, காணும் மதியினால்'' (5913)

என்று பதிலுரைத்தான்.

கடி காவினை வாட்டினான்; உண்மை! ஆனால் அதற்கான காரணம் சரியா? அனுமன் யாரிடம் இராவணனிடம் செல்லும் வழி வகையைக் கேட்டான். அப்படி அவன் கேட்டும் கூற மறுத்தனரா? இல்லையே! சரி; ஒரு குரங்கு கேட்டால் மாபெரும் மன்னனை யாரே அறிமுகப் படுத்துவர் என்று ஐயுற்று, நாட்டில் சிறு அழிவினை உண்டாக்கினால், தன்பக்கம் காவலர் கவனம் செல்லும்; மன்னன் பால் இழுத்துச் செல்வர் என்று அவன் எண்ணியதாகக் கொள்வோம்! அதற்காக, மாபெரும் பொழிலையே அழிக்க வேண்டுமா? சற்றே, வாலாட்டியிருந்தால் போதுமே! போகட்டும்; இவனை யார் கொல்ல வந்தார்கள்?

அனுமன் செய்த சிதைவை இராவணனிடம் எடுத்து உரைத்த பொழுது அவன் சினந்து,

“ புல்லிய முறுவல் தோன்ற, பொறாமையும் சிறிது
பொங்க,
எல்லை இல் ஆற்றல் மாக்கள் எண் இறந்தாரை
ஏவி,
வல்லையின் அகலா வண்ணம், வானையும் வழியை
மாற்றி,
கொல்லலிர் குரங்கை, நொய்தின்! பற்றுதிர்,
கொணர்திர் (5490)

என்று கூறியது கம்பருக்கே தெரியும்!

அக்க குமாரனோ,

‘நொய்தினின் வென்று, பற்றித்
தருகுவேன், நொடியில் நுன்பால்’’ (5671)

என்று இராவணனிடம் கூறியதும் கம்பர் அறிவார்!

இந்திரசித்துவும், இறுதியில், இராவணனிடம்,
‘‘ஆயினும், ஐய! நொய்தின், ஆண்தொழில்
குரங்கை, யானே
‘ஏ’ எனும் அளவில் பற்றித் தருகுவேன்’’ (5728)

என்று சொல்லிச் சென்றதும் அறிவார்!

அனுமன் பிடிபட்டான் என்ற செய்தி அறிந்ததும், இராவணன்,

‘‘ஓல்லையின் ஓடி, நீர் உரைத்து, என் ஆணையால்,
கொல்லலை தருக எனக் கூறுவீர்’’ (5833)

என்று காவலர் வாயிலாக இந்திர சித்திற்குச் சொல்லியனுப்பினான்!

அவர்கள் அனைவரும் அனுமனைக் கொல்லாமல், பற்றுவதற்கே வருவதாக அவன் அறியவில்லை என்றே

வைத்துக் கொள்வோம். உண்மையில் அவன், இராவணனிடம் தன்னை அழைத்துச் செல்பவர்களைக் காணத்தான் விழைந்தான் என்றால் முதலில் காவலர் வந்த பொழுதே, அவர்களிடம் பிடிபட்டுச் சென்றிருக்க வேண்டியதுதானே! இவ்வளவு வீரர்களை ஏன் கொன்று குவித்தான்? ஆகவே, தன்னைக் கொல்ல வந்தவர்களைத் தான் கொன்றதாகக் கூறியதும் சமயோசித புத்திசாலித் தனமான உரையே!

பிடிக்க வந்த எல்லோரையும் பொருது அழித்த அனுமன் மேல் இந்திரசித்து அயன் படையை ஏவினான் அப்பொழுது;

"சாய்ந்த மாருதி, சதுமுகன் படை எனும் தன்மை
ஆய்ந்து, 'மற்று இதன் ஆணையை அவமதித்து
அகறல்
ஏய்ந்தது அன்று' என எண்ணினன்" (5800)

அனுமன், பிரம்மாத்திரத்திற்கு மரியாதை காட்டி அடங்கினானே அன்றி, மனம் சாந்தி அடைந்ததனால் அன்று!

அவன் கட்டுண்டு செல்லும்பொழுது சினந் தணிந்து,

"ஈண்டு இதுவே தொடர்ந்துபோய் இலங்கை
வேந்தனைக்
காண்டலே நலன் எனக் கருத்தின் எண்ணினான்"
(5823)

அவ்வாறு, அனுமன் இராவணனைக் காணும் மதி— ஆவல்—அடைந்தது ஏன்? அவன் தான் அசோக வனத்தி லேயே இராவணனைக் கண்டு கொண்டானே! சீதையிடம் இராவணன் சீற்றம் கொண்டு பேசியதைக் கேட்டு, அனுமன்,

"......................அருந்ததிக் கற்பின்,
என்னை ஆளுடை நாயகன், தேவியை, என் முன்
சொன்ன நீசன், கை தொடுவதன்முன், துகைத்து
உழக்கி
பின்னை, நின்றது செய்குவென் என்பது
பிடித்தான்" (5207)

மறுபடியும் ஏன் அவன் இராவணனைக் காண நினைந்தான்?

அவன் மதியில் ஒரு யோசனை தோன்றிற்று!

இலங்கையுள் புகுந்து அனுமன் சீதையைத் தேடி வந்த பொழுது, இராவணனின் மனையுள் புகுந்தான்; இராவணனை, அவன் துயிலும் நிலையில் பார்த்தான். அவன் கண்களுக்கு இராவணன்,

"பால்—பெருங்கடல் பல் மணிப் பல் தலைப்
பாப்புடைப் படர் வேலை
மால்—பெருங்கடல் வதிந்ததே அனையது ஓர்
வனப்பினன் துயில்வான்" (5040)

எனத் தோன்றினான்.

"முழை கொள் மேருவின் முகட்டிடைக் கனகனை
முருக்கிய முரண் சீயம்,
தழை கொள்தோளொடு தலை பல பரப்பி, முன்,
துயில்வது ஓர் தகையனாய்த்" (5041

தோன்றினான்!

"வன் தொழில் கொற்றப்பொன்—தோள்
மணந்து, அரு மயிலே அன்னார்
ஒன்று ஒழித்து ஒன்றின் ஏக
அரிய தோள் ஒழுக்குடையனாகத்" (5049)

தோன்றினான்!

"தழுவா நின்ற கருங் கடல்மீது
உதய கிரியில் சுடர் தயங்க
எழுவான் என்ன மின் இமைக்கும்
ஆரம் புரளும் இயல்பிற்று ஆய்,
முழு வானவர் ஆய் உலகம் ஒரு
மூன்றும் காக்கும் முதல் தேவர்
மழுவாள், நேமி, குலிசத்தின்
வாய்மை துடைத்த மார்பனாய்த்" (5050)

தோன்றினான்!

" கோடு உழுத மார்பானை, கொலை உழுத
வடிவேலின் கொற்றம் அஞ்சி
தாள் தொழுத பகை வேந்தர் முடி உழுத
தழும்பு இருந்த சரணத்தானாய்த்" (5051)

தோன்றினான்!

இந்த வகையாக, இராவணனின் காம்பீர்யமும் வீரமும், பொலிவும் கண்ட அவனுக்கு—அவனைக் கண்டு சினந்த நிலையிலும்—அவன்பால் மரியாதை தானாகவே தோன்றியது! அதனால், அவனை, அனுமன்,

" நன்னுதலைப் பிடித்து வாழ் அரக்கனார்" (5054)

என்று மரியாதையின் அடிப்படையில் 'ஆர்' விகுதி சேர்த்துக் குறிப்பிடுகின்றான்!

அத்தகைய வல்லமையும் பெருமிதமும் கொண்ட இராவணன், 'சூழ்நிலை காரணமாகச் சீதையைக் கவர்ந்து சென்ற பிழை செய்துள்ளான் போலும்; நாம் அவனுக்கு அறிவுரை கூறினால் அவன் மனம் தெளிவு பெற்றாலும் பெறும்! என அனுமனின் மதியில் தோன்றியது! அத்தனையையும் சுக்கிரீவன் கூறியதாக இராவணனிடம் கூறினான்! உண்மையில், சுக்கிரீவன்

அனுமனை அங்கதன் முதலியவர்களுடன் தென்திசைக் குச் செலுத்தினானேயன்றி ஏதும் செய்தி செப்பவில்லை.

ஆனால், அனுமன் தன் மதியில் பட்டதைத் தன் மன் னன் கூறி விடுத்ததாக எடுத்துரைத்தது அவன், 'சொல் லின் செல்வன்' என்பதை உறுதிப்படுத்துகின்றது!

## 57. நீதியான்! நீதியாய்!

இராவணன் அவையில் அனுமன், தான் அரக்கரைக் கொன்றது ஏன் என்பதற்கான விடை இறுத்தான்.

"காட்டுவார் இன்மையால், கடி காவினை
வாட்டினேன்; என்னைக் கொல்ல வந்தவர்களை
வீட்டினேன்; பின்னும் மெய்மையினால் உன்தன்—
மாட்டு வந்தது, காணும் மதியினால்" (5913)

எனப் பகன்றான்.

அனுமன், சோலையை அழித்ததனைக் காவலர் இராவணனுக்கு அறிவித்தனர். அவன் அவர்களை இகழ்ந்து பேசினான். என்றாலும், அவர்கள் அனுமனின் வீரத்தைப் புகழ்ந்து பேசினர். இராவணன், அனுமனைப் பிடித்துவரக் காவலரை ஏவினான்.

கிங்கரர் அனுமனைப் பிடிக்கச் சென்றனர். தான் விழுப்புண் ஏற்றும், அனுமன் அனைவரையும் அழித்து ஒழித்தான். சம்பு மாலி சென்றான்; அவனும், தன் படை வீரர் அனைவருடன் மாண்டான். பஞ்ச சேனாபதியர் சென்றனர்; அவர்களும் தம் படை வீரருடன் பஞ்சாய்ப் பறந்து அழிந்தனர். இராவணன் மகன் அக்ககுமாரன் சென்றான்; அவனும் அவனுடைய படையும் திரும்ப முடியாமல் அங்கேயே மாண்டனர். இறுதியில், இராவண

னின் மற்றொரு மகன், இந்திரசித்து ஏகினான்; அவனுடனும் அனுமன் அயராது போர் புரிந்தான்; இந்திரசித்து அயன் படையை ஏவினான்; அனுமன் அந்த அஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டு, கட்டுண்டு, அவைக்கு அழைத்து வரப் பெற்றான். விசாரிப்பில், தான் இராம தூதன் என்பதை வெளிப்படுத்தினான்.

தூதனாய் வந்தவன், இவ்வளவு போர் வீரர்களையும் அழித்து ஒழித்ததும் அல்லாமல், 'என்னைக் கொல்ல வந்தவர்களை நான் கொன்றேன் என்று வெகு எளிமையாகப் பேசி நின்றால்- அந்நாட்டு மன்னனுக்கு, மாவீரன் இராவணனுக்குச், சினம் கொந்தளிக்கவில்லை என்றால் வியப்பு அல்லவா?

இராவணன் சினத்தின் எல்லையை அடைந்தான். அனுமன் ஒரு தூதன் என்பதை மறந்து,

''கொல்மின்'' (5914) என்றனன்.

அவன் ஆணையை நிறைவேற்ற அனுமனைப் பிடித்தேக வந்தவர்களை,

'' 'நில்மின்' என்றனன், வீடணன் நீதியான்'' (5914)

'வீடணன்' என்று குறிப்பிட்டிருந்தாலே சாலும்! நீதியான்' என்னும் சொல்லைக் கவிச் சக்கரவர்த்தி கையாண்டது ஏனோ?

சீதையை ஊரினில் தேடித்தேடி அலைந்து வரும் பொழுதே, அனுமன் வீடணனின் இல்லத்தையும் கண்டு வந்தான்;

''குற்றம் இல்லது ஓர் குணத்தினன் இவன்'' (4971) எனக் கண்டு உவந்தான்!

அப்படிப்பட்டவனைக் கம்பரும் தக்க தருணத்தில்—அனுமன் உட்பட்ட காட்சியில்— 'நீதியான்' என்று புகழ்ந்திட விழைந்தார்! அவனும், அதற்குத் தக தன் தமையனுக்கு நீதியை நினைவுறுத்துகின்றான்!

ஆம்; வீடணனை, 'நீதியான்' ஆகக் காணும் கவிச் சக்கரவர்த்தி, இராவணனை 'அநீதியானாகக்' காண வில்லை. அந்த நீதிமானே, தமையனை, 'நீதியோய்' என்று அழைக்கச் செய்கின்றார்! அந்த அளவிற்கு இராவணன் நீதி நெறிகள் அறிந்தவன்!

எனவே, வீடணன்,

" ஆண்டு, எழுந்து நின்று, அண்ணல் அரக்கனை,
நீண்ட கையன் வணங்கினன்; 'நீதியாய்!
மூண்ட கோபம் முறையது அன்றாம்' என
வேண்டும் மெய் உரைபைய விளம்பினான்" (5915)

அவன், மன்னனை மகிழ்விக்க வேண்டும் என்பதற் காக, மரியாதை காட்டி அவ்வாறு அழைத்தான் என்பது அன்று. அவ்வாறு விளித்ததற்கு அவனே காரணமும் கழறி விடுகின்றான்!

" அந்தணன், உலகம் மூன்றும் ஆதியின் அறத்தின் ஆற்றல்
தந்தவன், அன்புக்கு ஆன்ற தவநெறி உணர்ந்து, தக்கோய்!
இந்திரன் கருமம் ஆற்றும் இறைவன் நீ; 'இயம்பு தூது
வந்தனென்' என்ற பின்னும், கோறியோ, மறைகள் வல்லோய்!" (5916)

என்று கேட்கும் பொழுது, இராவணனின் நீதி அறி தன்மையை வெளிப்படுத்துகின்றான், வீடணன்.

அத்தோடு நிற்கவில்லை, அவன்
"பூதலப் பரப்பின், அண்டப்
பொகுட்டினுள், புறத்துள், பொய்தீர்
வேதம் உற்றுஇங்கு வைப்பின்,
வேறு வேறு இடத்து வேந்தர்,
மாதரைக் கொலை செய் தார்கள்
உளர்என வரினும், வந்த
தூதரைக் கொன்று ளார்கள்
யாவரே, தொல்லை நல்லோர்?" (5917)

என்றெல்லாம் எடுத்தோதினான்!

அவன் நினைவூட்டிய நீதி நெறிகளால், இராவணன் சற்றே சினம் தணிந்தான். என்றாலும், தூதுவனாய் வந்தவன் தன் நிலை மீறி செய்த செய்கைகளுக்காக தண்டனை ஏதும் இன்றிச் செல்லக்கூடாது என்ற எண்ணத்தால் அனுமன் வாலில் தீ வைத்துத் துரத்திடச் செய்தான்.

அதே இராவணன் ஆதியில் சூர்ப்பணகை வந்து தன்னிடம் ஓலமிட்டு அழுத பொழுது, இராம இலக்கு வரைச் சினந்தான் எனினும், அவளை நோக்கி,

" நீ இடை இழைத்த குற்றம்
என்னைகொல், நின்னை இன்னே,
வாயிடை இதழும் மூக்கும்
வலிந்து அவர் கொய்ய " (3132)

என்றான். இதனால் அவன் நீதிநெறி அறிந்தவன் எனத் தெரிகின்றது!

அப்படியானால், 'பிறன் மனை நயத்தல் அநீதி என்று அவன் அறியானோ?' என்றால், அதனையும் அறிந்திருந்தான்! அதனால்தானே, அவன் அசோக வனத்தில், சீதையிடம் கெஞ்சும்பொழுது, இராவண

னைப் 'பழி பார்க்கலான்' என்கின்றார் ,கம்பர். அதாவது, 'அவன் தன் செயல் பழியின்பாற் பட்டது என்னும் நீதியை அறிவான்; ஆனால், செய்கையில் இறங்கும் பொழுது அந் நீதியைப் பார்க்காதவன்' என்பதாகும்!

கடைசி கட்டத்திலும் கூட, தான் சீதையைக் கவர்ந்து வந்தது பிழையானது என்ற நீதியை அவனே உணர்ந்தான். அதனால்தான் 'நான் என்னையே நோக்கி இப்பகையை ஏற்றேன்' என்றான்; ஆனால், தன் பிடிவாத குணத்தால் அவளைத் திரும்பவிட மனம்இன்றி இறுதிவரை போர் செய்து மாண்டான்.

இதனையெல்லாம் மனத்தில் கொண்டே, கம்பர் நீதி அறிந்து, உணர்ந்து, அதனைச் செயல்படுத்தும் பண்புடையவன் என்னும் பொருளில், 'நீதியோன்' என்றும், நீதி அறிந்தும், உணர்ந்தும், செயல்முறை வரும் பொழுது அதனைக் கைவிடுபவனை, 'நீதியாய்' என்றும் அவர்களை வேறுபடுத்திக் காட்டும் பாங்கினில், விளிச் சொற்களின் உருவை மாற்றியுள்ளார்! இல்லையென்றால், படர்க்கையில் வீடணனை, 'நீதியோன்' என்று குறிப்பிட்டுள்ள கம்பர், முன்னிலையில் இராவணனை வீடணன் விளிக்கவும், 'நீதியானே' என்றே இட்டிருக்கலாம்! இரண்டிற்கும் வேறுபாடு சொற்பொருள் முறையில் இல்லையென்றாலும், அவற்றைக் கையாளும் முறையால் நமமை மாறுபாடு காணச் செய்கின்றார்!

## 58. எரியே! அவனைச் சுடல்!

இராவணன் சபையில் அனுமன் விசாரிக்கப்பட்டான் இறுதியில் அவனுடைய வாலில் தீ வைத்துத் துரத்தப்பட்டான்.

அதனை அறிந்தாள் சீதை: துடித்தாள். அக்னி தேவனை வேண்டினாள்.

"தாயே அனைய கருணையான் துணையை, ஏதும்
தகைவு இல்லா
நாயே அனைய வல் அரக்கர் நலியக் கண்டால்,
நல்காயோ?
நீயே உலகுக்கு ஒரு சான்று; நிற்கே தெரியும்
கற்பு;—அதனில்
தூயேன் என்னின், தொழுகின்றேன்—எரியே!
அவனைச் சுடல்!" என்றாள். (5931)

அனுமனின் வால் எரிந்து கொண்டிருந்த போதிலும் அத் தீ அவனைத் தாக்காது குளிர்ந்தது. அதற்குக் காரணம் சீதையின் கற்பே என அனுமன் உணர்ந்தான்.

'எரியே! அவனைச் சுடல்!' என்று ஏன் தன் கற்பின் திறத்தால் கேட்க வேண்டும்? 'எரியே!' அணைந்து போ!" என்று சொல்லக் கூடாதா?

சீதை அனுமனைக் காணும் முன் தற்கொலை முயற்சியில் ஈடுபட்டாள்! அப்பொழுது அவள்,

"நிறை இரும்பல் பகல், நிருதர் நீள் நகர்ச்
சிறை இருந்தேனை, அப் புனிதன் தீண்டுமோ?"
(5238)

என்றும்,

'அற்புதன், அரக்கர்தம் வருக்கம் ஆசு அற,
வில் பணி கொண்டு, அருஞ் சிறையின் மீட்ட நாள்,
'இல் புகத் தக்கலை' என்னில், யானுடைக்
கற்பினை, எப் பரிசு இழைத்துக் காட்டுகேன்?"
(5247)

என்றும், மனம் வெதும்பி யிருந்தாள்.

அனுமன் ஆற்றலை நேரிற் கண்டும் கேட்டும் வியந்தவள், தங்கள் பேச்சு வார்த்தைகளின் போழ்தில்,

“அரியது அன்று; நின் ஆற்றலுக்கு ஏற்றதே;
தெரிய எண்ணினை; செய்வதும் செய்தியே;”
(5356)

என்று போற்றியவள்,

அனுமன் வாலில் இட்ட தீயை அவன் தன் விரோதிகளுக்கு எதிராகவே தான் பயன்படுத்த வேண்டும் என எதிர் பார்த்தாள். அதே சமயத்தில் அத் தீ அவனை மட்டும் சுடக் கூடாது என்றும் விரும்பினாள்.

இந்தச் சூழ்நிலை, சீதை, பின்னாளில், தேவைப் பட்டால் தன் கற்பை நிரூபிக்கும் பாங்கினைத் தனக்குத் தானே உறுதிப் படுத்திக் கொள்ளும் வாய்ப்பாய் அமைந்தது! எனவே, அவள் தனது கற்பின்மேல் ஆணையிட்டு அக்னி தேவனுக்கு அந்தத் தீ அனுமனைச் சுடாதிருக்க மட்டும் வேண்டினாள்! அவ்வார்றே ஆயது!

சீதையின் எண்ணங்களுக்கு ஏற்ப அவளுடைய கற்பு ஆணைக்கு தீக் கடவுள் அடங்கிய அடையாளமாக, எரி அனுமனைச் சுடவில்லை என்பது மட்டும் அன்று; அனுமன் இட்ட தீ இலங்கை முழுதும் எரித்தும் சீதை இருந்த சோலையை மட்டும் எரிக்க வில்லை!

சீதையின் கற்பு நிலையை உணர்ந்த தீக் கடவுள் இப்பொழுது மட்டு மன்று; சீதையை எதிர்பார்த்த வண்ணம் சிறை மீட்ட பின் அவள் கற்புச் சோதனைக்கு ஆளானாள்; அப்பொழுது தீக்குளிக்க வேண்டிய சோதனையிலும் அவளைச் சுடாமல் அவ்வக்னி தெய்வம் அவளுடைய கற்பு நிலைக்குச் சாட்சியாக நின்றது என்றும் அறிகின்றோம்!

# 59 மொய் கழல் தொழுகிலன்!

சீதையைக் கண்டு திரும்பிய அனுமன், இராமனுக்கு அவளின் நிலையைக் குறிப்பினால் உணர்த்தினான். அதனைச் சொல்லப் போந்த கம்பர்,

"எய்தினன் அனுமனும்; எய்தி ஏந்தல்தன்
மொய்கழல் தொழுகிலன்; முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையன், கையினன்
வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி வாழ்த்தினான்"
(6028)

என்கின்றார்.

இப்பாடலுக்கு விளக்கம் தந்து பேசும் ஆன்றோர்கள் "அனுமன் இராமனின் முன்னால் வந்தான்; அவனுக்கு மரியாதை செலுத்தவில்லை; சீதைத் தாய் இருந்த திசை நோக்கித் திரும்பினான்; (அதிலும் சிலர், 'Right About Turn எனத் திரும்பினான்' என்று உறுதி காட்டிச் சொல்வர்) நெடுஞ் சாண் கிடக்கையாய்க் கிடந்து சீதையை வணங்கினான்; இராமன் பக்கம் தன் காலை நீட்டி, அவமரியாதை செய்தான்' என்பர்!

இராமனுக்கே அவமரியாதை செய்யும் அளவிற்கு அனுமன் பண்பில் குறைந்தவனா? இருக்கவே இருக்க முடியாது. அதனை உறுதிப் படுத்துவதற்கு முன்னம், அவன் எவ்வெவர்க்கு, எந்தெந்தச் சூழலில், எப்படியெப்படி மரியாதை செலுத்தும் தன்மையனாய் இருந்தான் என்பதை விளக்கலாம். ஆனால், அதுவே ஒரு சிறு நூலாகி விடும்!

அனுமன் எப்பொழுதுமே பணிவு பொருந்தியவனாய், வணங்கிய சென்னியனாய்,தொழுத கையனாகவே இருந்திருக்கிறான்!

ஒரு சில இடங்களில் மட்டும்—செயல்களின் அவசர மும் முக்கியத்துவமும் உந்த—அவன் காட்டும் மரியாதை சற்றே தாமதம் பெற்றுள்ளதை வேண்டுமானால் காண முடிகின்றது. என்றாலும் எக் காரணம் கொண்டும் எந்தச் சூழ்நிலையிலும் எவரையும் எள்ளளவும் அவமரி யாதை செய்ததாகச் சற்றும் அனுமானிக்கக் கூட முடிய வில்லை!

இத்தகையோன் - இராமனை,

'' சுதம் எனும் பொருண்மை இலர்; கருணையின்
கடல் அனையர்;
இதம் எனும் பொருள் அலது, ஓர் இயல்பு
உணர்ந்திலர் இவர்கள்;
சதமன் அஞ்சுறு நிலையர்; தருமன் அஞ்சுறு சரிதர்;
மதனன் அஞ்சுறு வடிவர்; மறலி அஞ்சுறு விறலர்.''
(3758)

எனத் துவக்கத்திலேயே கண்டவன்—அவனிடம் அவமரி யாதையாக நடந்து கொள்வானா?

அனுமன், தான் சீதையைக் கண்டு கொண்ட செய்தி யைச் செப்பியதும், அவளைத் தேடச் சென்றிருந்த அனைத்து வானர வீரர்களும், இராமனைக் காணுதற்கு விரைந்து புறப்பட்டனர். என்றாலும் அனைவரும் களைத்து இருந்தமையால், வேகமாகச் செல்லுதற்கு ஏலா நிலைமையால், அனுமனை, முந்திச் செல்லச் சொன்னார்கள். அவனும் 'சரி' யெனப் போகின்றான்.

வான் வழி பறந்து செல்ல வல்லவன் அல்லவா. அனுமன்! அங்ஙன், பறந்து செல்லும் பாங்கில் கைகள் கூப்பிய வண்ணம் சென்று, இராமன் இருந்த இடத்தில் அவன் குதித்திருத்தல் வேண்டும்! அதனால்தான் கம்பர்,

'அவன் இராமனைத் தொழவில்லை' என்று சொல்லாமல் 'ஏந்தல் தன் மொய் கழல் தொழுகிலன்' எனக் கூறுகின்றார். அதாவது, துவக்கம் முதலே இராமன் மாட்டு அனுமன் கொண்ட மரியாதையின் அளவிற்கு—பக்தியின் அளவிற்கு—ஏற்ற வகையில் இராமனின் திருவடிகளில் வீழ்ந்து தொழவில்லை என்றுதான் குறிப்பிடுகின்றார்!

இனி, அங்கு குதித்தவன் தென் திசையில் இருந்த 'முளரி நீங்கிய தையலை நோக்கி வணங்கிய தலைவனாய், நெடிது இறைஞ்சிய கையனாய், 'வையகம் தழீஇ வாழ்த்த'' வேண்டின், வடபுறம் நோக்கிய வண்ணம்—இராமன் முகம் பார்த்த வண்ணம்-குதித்த அனுமன், தானும் இராமன் போலே தென்புறம் நோக்கித் திரும்பி தான் தரையில் கிடந்திருக்க வேண்டும் என்பது உண்மையே! ஆனால், அவன் கால்கள் இராமன் பக்கம் நீண்டிருந்தன என்று கொள்ளுதலும், அதனால் அவன் இராமனை அவமதித்தான் என்று அனுமானித்தலும் அசம்பாவிதம்!

வடமுகம் நோக்கி, இராமன் இருந்த இருப்பிடம் வந்த பண்பாளன் இராமனுக்குச் சரிநேர் எதிரில் இறங்கினான் என்று கொளலே தவறு. எவரும் தம்மின் மேலவர்பால் செல்ல நேரிடும் பொழுது நேர் எதிர் சென்று நிற்றலோ, அமர்தலோ பண்புடைமை ஆகாது; ஆண்டவனின் திருச் சந்நிதியில் தொழுகை மேற்கொள்பவர்க்கும் இந் நியதி பொருந்தும்.

எனவே, அனுமன், இராமனுக்குத் தென் மேற்குத் திசையில் (தென் கிழக்கு திசை யென்று கொளலும் தவறு இல்லை' என்றாலும், அவ்வளவு சீரிது அன்று) இராமனுக்கு முன்பாகக் குதித் திருத்தல் வேண்டும்.

அப்படிக் குதித்து நின்றவன், தன் உடலைத்திருப்பித் தென் திசை நோக்கித் தரையில் கிடந்தால் அவனுடைய

கால்கள் இராமனின் நேர் முன்னாக நீளாமல் அவனுக்கு வலப்புறம் தான் நீண்டு இருக்கக் கூடும்: அது மட்டும் அல்ல; அனுமன் இராமனின் முன்னால் எவ்வளவு இடை வெளியில் வந்து குதித்தானோ அந்த இடைவெளிக்கு ஏற்ப அனுமனுடைய அடிகள் இராமனுக்குப் பின்புறம் நீண்டு இருந்திருக்குமே அன்றிச் சரிநேர்க் கோட்டில் கூட அமைந்திருக்காது. எனவே, அனுமன் கால்களை நீட்டியதால் அவனுடைய பாதங்கள் இராமனின் முகத்திற்கு நேரே முட்டிக் கொண்டிருப்பதாகக் கற்பனை செய்துகொண்டு, அனுமன் இராமன் அவமரியாதை செய்தான் என்று விளக்குவது, அனுமனை நாம் அவமரியாதை செய்ததுபோல் ஆகுமேயன்றி—கம்பர், அனுமனின் மரியாதைப் பண்புகளை அடுக்கடுக்காய்க் காட்டிச் சென்றுள்ளதை நாம் அவமரியாதை செய்தது ஆகுமே அன்றி—விவேகமான விமரிசனம் ஆகாது!

> ''மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
> பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்'' (திரு. 134)

என்பது தெய்வப் புலவரின் வாக்கு அல்லவா! ஞான பண்டிதனாகிய அனுமன் இந்நெறி அறியாதவனா? அறியாதவன் ஆனால் எடுத்த எடுப்பிலேயே இராமன்,

> ''இல்லாத உலகத்து எங்கும்,
> இங்கு இவன் இசைகள் கூரக்
> கல்லாத கலையும், வேதக்
> கடலுமே என்னும் காட்சி
> சொல்லாலே தோன்றிற்று அன்றே!
> யார் கொல் இச் சொல்லின் செல்வன்!
> வில் ஆர் தோள் இளைய வீர!—
> விரிஞ்சனோ விடை வலானோ?'' (3768)

என்றெல்லாம் இவனைப் பெரிதும் பாராட்டி யிருக்க முடியுமா!

'சீதை, தென் திசையில் இலங்கையில் உயிருடன் இருக்கின்றாள், அவள், தொழத்தகும் நிலையில் தன்னுடைய கற்பினைக் காத்து நிற்கின்றாள்! என, அவளையே எண்ணிக் காத்திருக்கும் அவளின் கணவனாகிய இராமனுக்குச் சொற்களால் எடுத்துச் சொல்லும் நேரத்தைவிட குறுகிய காலத்தில் செய்கையால், முன்னம் உணர்த்திட அவாவிய காட்சி கொண்டே அவன் இராமனுக்கு அவமரியாதை இழைத்தான்— சீதைக்கே முக்கியத்துவம் காட்டி மேன்மைப் படுத்தினான்—என்று கற்பனை செய்தால்,

''ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயால் சொலல்'' (திரு 139)

என்னும் பண்பிலக்கணத்தின் அடிப்படையில் நம் ஒழுக்கத்திலேயே ஐயம் ஏற்பட வேண்டி வரும்!

ஆக, அனுமன்,

''ஒழுக்கத்தின் ஒலகார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து'' (திரு 136)

என்ற வரம்பில் நின்ற பண்பாளன் என்று சிந்தித்தலே சீரியதாகும்!

அனும பக்தி யுள்ளவர், இல்லாதவர் அனைவருமே பண்பின் அடிப்படையில் ஆய்ந்து இதனை விளங்கிக் கொண்டால் மாருதியின் மாசற்ற மரியாதை மிளிரும்! கவிச்சக்கரவர்த்தியின் சொற் பிரயோகத்தின் ஆற்றலும் மிளிரும்!

## 60. கண்டனென் கற்பினுக்கு அணியைக் கண்களால்

அனுமன். இராமனுக்குச் சீதையின் நிலையை, அவன் வந்த வேகத்திலேயே, குறிப்பினால் உணர்த்தினான்,

சீதை தென்பால், தொழத் தக்க கற்பு நிலையோடு இருக்கின்றாள் என்பதை அக் குறிப்பால் உணர்ந்து இராமன் மகிழ்ந்தான்,

அனுமன் தான் சீதையைக் கண்ட நிலை பற்றி முழுமையாக விவரிக்கத் தொடங்கினான், அவ்விரிவுரையின் சுருக்கமான முன்னுரையாக,

"கண்டனென், கற்பினுக்கு அணியை, கண்களால்,
தெண் திரை அலை கடல் இலங்கைத் தென்நகர்,
அண்டர் நாயக! இனி துறத்தி, ஐயமும்
பண்டு உள துயரும்." (6031)

என்றான்.

'கற்பினுக்கு அணியைக் கண்டனென்' என்றால் அனுமன்நின் கண்களால் சீதையைக் கண்டதைத் தான் குறிக்கும். அப்படி யிருக்க அங்கே 'கண்களால்' என்ற சொல்லைப் பெய்துள்ளது ஏன்?

சீதையின் கற்பு நிலையை அவளுடைய கண்கள் வழியாகவே அனுமன் உணர்ந்து கொண்டான். அதாவது அவளுடைய கண்கள் மாசு மறுவற்ற ஒளியைப் பெற்றிருந்தன! என்பர், ஆன்றோர். இந்த விளக்கம் சிறப்புப் பண்பின் அடிப்படையில் தரப்படுவதால் போற்றத்தக்கதே.

இப்பொருளன்றிக் கம்பர் என்ன நினைத்தார் என்று சற்று ஆராய்வோம்!

அசோக வனத்தை அடைந்த அனுமன் சீதை இருந்த இடத்தை முதலில் கண்டான், ஆனால் அவள்தான் சீதை யென உறுதி கொண்டான் அல்லன் அடுத்து அவன் கண்டது உறக்கத்திலிருந்து எழுந்த அரக்கியரை! அவர்களுடைய கோரமான உடலமைப்பு கொடுமையான பார்வை முதலியவற்றைக் கண்டான்.

அவர்களிடையே ஒரு பெண், அவர்களுடைய கொடும் பார்வைக்கு அஞ்சி வாடியிருந்தாள். அவளைக் கண்டதும், அனுமன் அவள் இருந்த இடத்திற்கு அருகில் ஒரு மரத்தின் மேல் வந்து அமர்ந்து கவனிக்கலானான்.

கருமேகக் கூட்டத்தின் இடையே மின்னலைப் போல் மிளிர்ந்ததைக் கண்டான். தொடுவதற்கும் அருகதை அற்ற அரக்கியர் அவளைச் சுற்றியிருக்க, அழுது அழுது கடலென நிரம்பி விட்ட தன்னுடைய கண்ணீரிலேயே அவள் ஓர் அன்னம் போல் இருப்பதாய்க் கண்டான்; இராமன் கூறிய அங்கஅமைப்புகள் அவளிடம் பொருந்தியிருக்கக் கண்டான்; அவளே சீதை எனத் தெளிந்தான்; தான் தேடி அலைந்தது வீண் போக வில்லையென மகிழ்ந்தான்.

தொலைவில், மரத்தின் மேலிருந்தே சீதையை மீண்டும் பார்த்தான்: அதனால், அவளுடைய கண்களை உற்றுப் பார்த்து அவளுடைய கற்பு நிலையை உணர்ந்திருக்க முடியாது! என்றாலும், அவள் மாசு படிந்த மாணிக்கமாய்த் தெரிந்தாலும், கிரஹணம் பிடித்த சந்திரனைப் போல் ஒளி குன்றி இருந்தாலும், தன்னைத் தானே காத்துக் கொண்டு இருப்பதால் மாடமாளிகை, கூடகோபுரம் என்று சென்று தங்காமல், ஒரு வனத்திடையே சிறையிருப்பதாலும் அவள் கற்பு கெடாது இருக்கின்றாள் எனத் தெரிந்தான்!

அந்த நேரத்தில் இராவணன் அங்கே வந்தான்; சீதையை நோக்கிச் சாம, பேத, தான, தண்ட முறைகளால் தனக்கு இணங்கும்படி இறைஞ்சினான். எனக்கு எப்பொழுது அருள் புரிவாயோ? இத்துணை நாட்கள் வீண் ஆகிவிட்டனவே; இன்னமும் வீண் ஆக வேண்டுமா? மூன்று உலகங்களையும் ஆளும் வல்லமை உடைய நான் உன்னிடம் கெஞ்சி நிற்கின்றேனே, புரியவில்லையா? என்

மாபெரும் செல்வ வாழ்வை—தேவ வாழ்வை--இழந்து விட்டு, அந்த இராமனெனும் சாதாரண மானிடனுடன் வாழ நினைக்கின்றாயே! இளமைக் காலத்தை இப்படி வீணடித்தால், இன்பம் அனுபவிப்பது எப்போது?

உன் மனம் சற்று கோணினாலும் என்னால் பொறுக்க முடியாது. உன் அழகிற்கு ஏற்ற காமமும் பண்பாடும் அமைந்தவர் என்னைத் தவிர வேறு யார் உளர்? பெண்மை—பேரழகு மாறுபடாத மனத்திண்மை முதலிய அனைத்து நற்குணங்களும் உன்னிடம் செம்மை யாக அமைந்துள்ளன; ஆனால், எனக்கு அருள்கின்ற கொடைக் குணம் மட்டும் ஏன் இல்லாது போயிற்றோ? நான் இராமனைக் கொல்லும் வரை காலம் நீட்டிக்கப் போகின்றாயா? விதி, உனக்கு, என்னை அடையும் நற்பயனைக் கூட்டி நிற்கும் பொழுது, அதை நீ வெறுத்து நிற்பது அறிவுடைமையா? உன்னை அடைய முடியவில்லையென்றால் நான் இறப்பேன்; அப்பழிக்கு நீ ஆளாகப் போகின்றாயா? தேவர்களும், அவர் தம் தேவியரும் உன் திருவடி பணிந்துபணிபுரியும் பெருமிதப் பதவியை வெறுக்கின்றாயே!' என்றெல்லாம் பேசி நின்றான். இறுதியில், 'மூன்று உலகங்களையும் வெற்றி கண்டு அடிமையாக நிற்கின்றேன்', பிறன் மனைவியை நயத்தலால் வரும் பழியையும், பாரேன்; இந்த அடிமையை ஏற்றருள்க என்றே கெஞ்சி நின்றான்.

இத்துணையும் கேட்க வேண்டி நேர்ந்ததால், குருதி கொட்டின, அவளுடைய இரு கண்களும்; இராவண னுக்கு றிவுரை புகன்றாள். எடுத்த எடுப்பிலேயே அவனைத் 'துரும்பு போன்றவனே!' என விளித்தாள்! நீ இவ்வளவு நேரம் பிதற்றியதெல்லாம் இல்லறப் பெண்டிர்க்கு ஒவ்வாதது; என் மனம் கல்லைப் போன்று உறுதியானது. கற்பைப் போல் திண்மையானது உலகில் வேறொன்று உண்டோ? என் தலைவரின் ஆற்றல்

ரியாமல் பேசுகின்றாய்' என்றெல்லாம் மிகச்சினந்து பேசினாள்.

பின்னும், அவள் அவனுக்கு நய உரைகளாலும் அறிவூட்டினாள்! 'இராம இலக்குவரின் உண்மையான வீரத்தை உணராமல் நீ வீரம் பேசுகின்றாய். அவர்களின் வீரத்திற்கு அஞ்சி அன்றோ, அவர்களை நயவஞ்சகமாய் ஒதுக்கி விட்டு என்னைக் கடத்தி வந்தாய்! வழியில், எங்களவர்களின் நண்பரான சடாயுவின் ஆற்றலைக் கண்டனையே; இன்னமும் ஏன் வீண் வீரம் பேசி நிற்கின்றாய் முன்னை நாள் அரக்கர்களில் எவரும் பிறன் மனை நயந்த பழிக்கு ஆளாகவில்லையே! அப்படி யிருக்க நீ ஏன் வீணில் அழிகின்றாய்? சிவன் உனக்கருளி யுள்ள இந்த உயர் நிலையைக் கெடுத்துக் கொண்டு நீ அழிவதன்றி, உன்னைச் சேர்ந்தவர் அனைவரையும் அழியச் செய்யப் போகின்றாயே! அறநெறி வழுவி, காமத்தில் மூழ்கியவர் எவரே உய்ந்தார்? உன்னாலும் உன் ஆட்களாலும் தவமுனிவர்கள் அடையும் துயர் தெரிந்து உன்னை அடக்க வென்று புறப்பட்டுள்ளார் என் தலைவர்; அவருடைய சினம் மிகும்படியான அளவிற்கு நீ கீழ்த்தரச் செயலுக்குத் துணிந்து நிற்கின் றாய். நீதிகளை எடுத்துச் சொல்லி உன்னைத் திருத்த வல்ல அமைச்சர்கள் உன் நாட்டில் இல்லையோ?' என்றெல்லாம் அவளும் சாம, பேத, தான, தண்ட முறை களில் அவனுக்கு விடையிறுத்து நின்றாள்.

இராவணனின் இத்தகைய இறைஞ்சுதலையும் சீதை யின் ஆணித் தரமான பதிலையும் இவ்வளவு நேரம், தெள்ளத் தெளிவாகக் கேட்டுக் கொண்டிருந்த அனும னால் அவளுடைய கற்பு நிலையைத் தெளிய முடியாதா? அவளை அணுகிப் பேசும் வாய்ப்புக் கிட்டப் போகும் பொழுது, அருகிருந்து அவளுடைய கண் வழி அவளின் கற்பின் திண்மையைக் கண்டறியக் காத்திருக்க வேண்டுமா!

அவன் அப்பொழுதே சீதையின் கற்புத் திண்மையை உணர்ந்து கொண்டான்! அதனால் அவன் "அருந்ததி போன்ற கற்பு உடையவளான என் தலைவனின் தேவி சீதையைத் தாறுமாறாகப் பேசிய நீசனை நான் கண்டு கொண்டிருந்தேனே! அவன் அவளைத் தீண்டும் முன் அவனைக் கொன்று, அவளைச் சிறை மீட்பேன்" என்று கொதித்தான்!

இராவணன், மீண்டும், அவளை அச்சுறுத்தினான். கோசலம் சென்று பரதன் முதலாயினோரையும், மிதிலை சென்று ஜனகர் முதலாயினோரையும் வென்று கொன்று மீண்டு வந்து உன்னையும் கொல்வேன்; மறுபடியும் சிந்தித்து எனக்கு உடன் படுவாயாக; என்றெல்லாம் சினந்து பேசினான். இறுதியில் அரக்கியரிடம் சீதையை மிரட்டிச் சரிப்படுத்த ஆணையிட்டுச் சென்றான்.

அவன் சென்ற பின் அங்கிருந்த அரக்கியர்கள் சீதையைப் பலவாறாகப் பயமுறுத்தினர்.

ஆனால், திரிசடை சீதைக்கு ஆறுதல் அளித்தாள். சீதை சற்றே மனம் சமாதானம் அடைந்திருந்தாள்.

அதுவே, சீதையை நெருங்கிப் பேச ஏற்ற தருணம் என அனுமன் கருதினான். உடனே, அங்கிருந்த அரக்கியர் அனைவரும் உறங்கும் வண்ணம் மந்திரம் சொன்னான். அவ்வாறே அனைவரும், சீதை நீங்கலாக மெய் மறந்தனர்.

இந்தத் தனிமை நிலையில் சீதை பலவிதமாகப் புலம்பினாள். 'விதியே! என்னைக் காக்க அவருடைய வில் ஒலி இங்கு தோன்றுமா?

சந்திரனே! என்னைக் காய்வதைப் போல அவரைக் காய்தல் கூடாதோ? காற்றே! என் குறையை அவரிடம் கூற மாட்டாயோ? எப் போதும் வலிமை குன்றாத

மாபெரும் வீரன் நாராயணன், ஒப்பிலாத் தலைவன் என்ற நிலையினனான என் கணவர் என்னை மீட்பார் என்றே நான் துன்பங்களைப் பொறுத்துக் கொண்டிருக்கிறேன்! ஐயனே! என் உயிரை இன்னமும் வாட்டுவாயோ? கணவனைப் பிரிந்து பல நாள் உயிர் வாழ்ந்தவள் என்ற பழி சேருமே! தன் தந்தை இறக்க, உலகெலாம் துயர்பட வனம் புகுந்த கொடியவர் ஆயிற்றே என்னவர்; அவரை நம்பி நான் காத்திருத்தல் முறையா? என்றெல்லாம் பிதற்றினாள்.

இந்தப் பேச்சுகள் அனைத்தும் அனுமனுக்கு அறிவித்தது என்ன? அவளுடைய கணவனையே நம்பி நினைந்து எதிர் பார்த்திருக்கும் அவளுடைய கற்பின் மேன்மையை அன்றோ? அதனைப் புரிந்து கொள்ளாமல் அவளுடைய கண்வழி காண்பதற்குக் காத்திருக்க வேண்டுமா?

அவள், அரற்றுவதோடு நின்றாளா! தன் உயிரை மாய்த்துக் கொள்ளவும் துணிந்தாள், அப்பொழுதும் அவள் தனக்குத் தானே பலவாறாக நிந்தித்துக் கொண்டாள்,

"அற்புதன் அரக்கர்தம் வருக்கம் ஆசுஅற
வில் பணி கொண்டு அருஞ்சிறையின் மீட்டநாள்
இல் புகத் தக்கலை என்னில் யானுடைக்
கற்பினை எப்பரிசு இழைத்துக் காட்டுகேன்?"
(5247)

என்று ஏங்கினாள். ஏங்கியவள்,

"ஆதலான், இறத்தலே அறத்தின் ஆறு எனா
சாதல் காப்பவரும் என் தவத்தின் சாம்பினார்
ஈது அலாது இடமும் வேறு இல்லை என்று ஒரு
போது உலாம் மாதவிப் பொதும்பர் எய்தினாள்"
(5248

இந்த முடிவுச் செயல் கண்டும், அனுமன் சீதையின் கற்புத் திறத்தை உணாமல், அவளுடைய கண்களுக் காகக் காத்திருக்க வேண்டுமா?

தற்கொலைக்காகச் சீதை மாதவிப் பொதும்பரை அணுகிய உடனேயே அனுமன் 'இராம' நாமம் சொல்லிக் கொண்டே, சீதையின் முன் தோன்றினான். தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான். சீதையும் அனுமன் யாரெனத் தெளிந்தாள்; இராமனுடைய மேனி பற்றி அனுமனிடம் விசாரித்தாள். அப்பொழுதும் அவளுடைய கண்களின் நிலை என்ன?

''அருவி நீர் ஒழுகு கண்ணாள்'' (5264)

எனக் காட்டுவார், கம்பர். எனவே, அனுமன் அவளுடைய கண்வழி அவளை உணர முடியாமல் கண்ணீர் மறைத்தது என்றுதான் தீர்மானிக்க வேண்டி யுள்ளது!

ஐயனின் உறுப்புகள் பற்றி அனுமன் சீதையினிடம் விளம்பும் பொழுது, அவளை,

''துடி இடை!'' (5265),

''ஏந்திழாய்!'' (5267),

''அன்னையே!'' (5270)

''தெய்வமே!'' (52 3),

''தோகை அன்ன நடையாய்!'' (5286)

என்றெல்லாம் விளித்தானே அன்றி, அவளுடைய கண் காட்டி ஏதும் கூறினான் அல்லன். கம்பரும் கவிக்கூற்றாக அவன் அவளுடைய கண்களை நோக்கியதாகப் பகர வில்லை! எனவே, அவனுடைய கண்கள் அவளுடைய கண்களைப் பண்பாட்டு நிலையில் ஊடுருவின என்று

சொல்வதற்கு இல்லை. அதனால், அவளுடைய கற்பு நிலையை அவளுடைய கண்களைக் கண்டு அனுமன் நிச்சயித்தான் என்பதற்கில்லை!

அனுமன், இராமன் தந்த கணை ஆழியைச் சீதையிடம்தர, அவள் அதனை முலைக் குவையில் வைத்தது போல், மலர்க் கண்மிசை ஒற்றினள். அப்பொழுது அனுமன், சீதையின் கண்களைக் கண்டு அவளுடைய கண்வழி அவளின் கற்பு நிலையை அனுமானித்தான் என்று ஒப்பினாலும், அவன் அக்கற்பின் திண்மையை உறுதியாக நம்பவில்லை! சற்று ஐயம் இருந்தது!

அனுமனைச் சீதை காட்டிய பேருருவை அடக்குமாறு வேண்டி. ஆசியும் கூறினாள் அப்பொழுது, அனுமன், சீதையை.

"அருந்ததியே!' (5341)

என்று அழைக்கின்றான் என்பது உண்மை. ஆனாலும் அவன் பால் அவளுடைய கற்பைப் பற்றி சிறியதோர் ஐயம் இருந்ததாகப் பின்னர் ஓரிடத்தில் கம்பர் குறிப்பிடுவார்!

அனுமன் சீதையைத் தன் தோள் மீது அமரச் சொல்கின்றான், நொடிப் பொழுதில் இராமனிடம் அவளைச் சேர்ப்பிப்பதாகவும் சொல்கின்றான்.

அவள் பல்வேறு காரணங்கள் கூறி அவனுடைய வேண்டுகோளை மறுத்து விடுகின்றாள் அவற்றுள் ஒரு காரணமாய்,

"வேறும் உண்டு உரை; கேள்அது; மெய்ம்மையோய்!
ஏறு சேவகன் மேனி அல்லால், இடை

ஆறும் ஐம்பொறி நின்னையும், 'ஆண்' எனக்
கூறும்; இவ் உருத் தீண்டுதல் கூடுமோ?'' (5363)

எனக் கூறி அனுமனாகிய ஆண்டகையைத் தீண்டலும் தகாது என்கின்றாள். இதனைக் கேட்டு, (மற்ற காரணங் களையும் மனத்தில் கொண்டு),

''நன்று! நன்று! இவ் உலகுடை நாயகன்
தன் துணைப் பெருந்தேவி தவத் தொழில்'

என்று சிந்தை களித்து, உவந்து, ஏத்தினான்'' (5371) என்று பாடிய கவிச் சக்கரவர்த்தி, 'ஏத்தினவன் யார்?' எனக் குறிப்பிடும் பொழுது அதே பாடலில்

''நின்ற சங்கை இடரொடு நீங்கினான்''

என்பார். அதாவது, அனுமனுககு ஏற்பட்டிருந்த சந்தே கமும், அதன் அடிப்படையிலான துயரமும் அப்பொழுது தான் முழுதுமாய் நீங்கியது என்பது பொருள்!

'ஐயம் என்ன?' என்பதை விளக்சு வில்லை இங்கு என்றாலும், அஃது அவளுடைய கற்பின் அடிப்படையி லானது என்பது மட்டும், தவத்தொழில்' என்ற சொற் றொடரின் தோற்றத்தால் தெரிகின்றோம்!

எனவே, கவிச் சக்கரவர்த்தி, 'கண்டனென் கண் களால் என்று கூறுவதில் உள்ள 'கண்கள்' சீதையின் அழு நிலைக் கண்களையும், வியப்பு நிலைக் கண்களையும், மகிழ்வு நிலைக் கண்களையுமே?

கண்களின் அந்நிலைகளை அவளுடைய பேச்சு களோடும், செயல்களோடும் இணைத்துப் பார்த்து

அவளுடைய கற்பின் திறத்தினைக் கண்டான் என்பதே யாகும். கண் பார்வை ஒளியே அக் கற்புத் திறத்தை உறுதிப்படுத்தியதாகக் கொள்ளுதல் ஆன்றோரின் பெரும் போக்குப் பார்வையே!

ஆசிரியரின் பிற நூல்கள் பற்றிய நோக்குரைகள்

சில கம்பராமாயணப் பாடல்களின் நயவிளக்கம் உற்சாகமான கண்ணோட்டம்.

—குமுதம்24–5–84

கம்பராமாயண பால காண்டத்தில் சில பாடல்களை எடுத்துக்கொண்டு, அவற்றை ஆழ்ந்து அனுபவித்து எழுதப்பட்டுள்ள விளக்கங்கள் அமைந்த நூல் இது.

—தினமணி29–7–85

Extract : There are many essays which depict Kamban in his Variegated lines which poems light on the intricate tapestry of the poets art.

HINDU. *22-2-83.*

கம்பன் சொல்லும் பொருளும் அயோத்தியா காண்டம்

தாங்கள் கம்பக் கடலில் மூழ்கியெடுத்துள்ள முத்துகளும், வலம்புரிச் சங்குகளும் மிகச் சிறப்பாக உள்ளன. கம்பருடைய சொல்மணிகளுக்குத் தாங்கள் இருபொருள் காண்பதன் மூலம் அரிய பெரிய கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளீர்கள். பல கம்பர் விழாக்களில் அறியாத கருத்துக்கள் நுண் பொருள்களைத் தங்கள் நூல் வாயிலாக அறிந்து மகிழ்ந்தேன்.

வைரிசெட்டிப்பாளையம்,

21–5–84 குறளன்பன் ஆ.வெ. இராசாமி, பி. லிட்.

Extracts : The book under review is one of the modern attempts at an interpretation of the epic

Many of his interpretations *(P. P. 16, 17, 44, 50, 93, 94, 114, 115, 129, 139)* do enhance our understanding and aesthetic enjoyment of the text. As such, it is worth reading.

Most of his interpretations, brilliant as they are, aim at, proving or confriming the above concept.

HINDU. *22-5-84.*

**வாலி வழக்கில் தீர்ப்பு**

'வாலி வழக்கில் தீர்ப்பு' என்னும் தங்கள் நூலைப் படித்து பெரிதும் மகிழ்ந்தேன்.

தங்களின் நுணுகிய ஆய்வும் நடுநிலை முடிவும் அறிவிற்கு விருந்தளிப்பனவாக அமைந்துள்ளன. தங்கள் அன்பிற்கும், அன்பளிப்பிற்கும், தமிழ்த் தொண்டுக்கும் என் நன்றி.

திருச்சி முத்தமிழ்க் காவலர்
21–10–84 கி. ஆ. பெ. விசுவநாதம்

வாலி வழக்கு பற்றிய பற்பல நூல்களையும் பயின்று நுண்மாண் நுழை புலத்துடனும் சமன் செய்து சீர் தூக்கும் துலாக்கோல் நடுநிலையுடனும் வழங்கியுள்ள தீர்ப்பும் தண்டனையும் சாலப் பொருத்தமானவையே.

நாடு போற்றும் பேரறிஞர்களுடைம கருத்துகளையும் தக்க சான்றுகளுடன் மறுத்திருக்கும் தங்களின் நக்கீரத் தன்மைகண்டு வியந்தேன்.
வைரிசெட்டிப் பாளையம்
4–6 84 'குறளன்பன்' ஆ. வெ. இராமசாமி, பி. லிட்.

வாலி வழக்கு மிக உயர்வாக அமைந்து விட்டது. இதுகாறும் இது பற்றிப் பெரியோர் சொன்ன வாதங்களை எல்லாம் தொகுத்துச் சீர்படுத்தி அருமையான முறையில் வழங்கியமைக்கு உளம் உவந்த பாராட்டுகள்!

சென்னை—4

அ. வெ. சுப்பிரமணியன்.

10-7-84 (ஓய்வு பெற்ற அடிஷனல் ஜெனரல் மானேஜர்)

தென் பிராந்திய இரயில்வே

Extracts : Mr. Seethapathi the author of this book is a veteren writer.

To sustain his argument that it is a mistake on the part of Rama to kill Vali, the author has quoted a lot from Kamban in support. He has further justified his stand by bringing about the statements of such great persons as, P. Sri, Rajaji, Ki. Va. Jagannathan, Thirumuruga Kripananda Variar and T.K.C. in this context and rejected the others after giving reasons for doing so.

The author deserves praise for the novel concept.

HINDU. 25-9-84.

I have enjoyed the elegance of your good work. This book will be a proud possession of every discerning reader.

—Thiru T. A. Krishnamurthy
Retired S. Rly. Official, Madras-24.

## ஆசிரியரைப்பற்றி



பி. சி. சீதாபதி - 'குறலடிமை' - சேலம் மாவட்டம் சங்ககிரி துர்கத்தில் 25-4-1926-ல் பிறந்தவர். தந்தையார் காலம் சென்ற கிருஷ்ணசாமி நாயுடு அவர்களும் தாயார் திருமதி. அங்கம்மா அவர்களும் பள்ளி ஆசிரியர்கள். இவர் சேலம் சந்திப்பில் தென் பிராந்திய இரயில்வேயின் கட்டு மானப்பிரிவின் செயற்பொறியாளர் அலுவலக மேற்பார்வை யாளராகப் பணியாற்றி ஒய்வு பெற்றவர். (Retired Office Supdt. Executive Engineer's Office, S. Ry, Construction, Salem Jn.)

அசிரியரின் முன்னைய நூல்கள் பல்லோராலும் பாராட்டப் பெற்றுள்ளன, அவை :

1. கம்பன் சொல்லும் பொருளும் (பால காண்டம்)
2. கம்பன் சொல்லும் பொருளும் (அயோத்தியா காண்டம்)
3. வாலி வழக்கில் தீர்ப்பு.
4. கம்பன் படைப்பில் குற்றவாளிகள்.

---

அட்டைப்படம் அச்சிட்டோர் :

கண்மணி எண்டர்பிரைஸஸ்,
1 வெங்கடேஸ்வரா நகர்,
சென்னை-87.